ஆரோக்கியமான குழந்தைகள் தவறாமல் லைப்பாய் சோப் உபயோகித்துக் குளிக்கின்றனர்

*அன்றாட அழுக்கிலுள்ள கிருமிகளை அது கழுவிக் களைகிறது!

*தினசரி நம்மீது படியும் அழுக்கிலுள்ள கிருமிகள் காரணமாக நாம் ஒவ்வொருவரும் தொத்து நோய் ஆபத்துக்கு ஆளாகிறோம். அதன் காரணமாகவே, ஆரோக்கியமுள்ள பலர் வழக்கமாக லைப்பாய் சோப் உபயோகித்து அழுக்குடன் கிருமிகளையும் கழுவிக் களைந்து தங்கள் ஆரோக்கியத்தைப் பாதுகாத்துக் கொள்கின்றனர்—ஆரோக்கியமான அத்தகைய புதுமலர்ச்சியை அது அளிக்கிறது!




L. 237-60 TM

இந்தியாவில் தயாரித்தது

# கல்கி பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

விடுமுறைக்கு வீட்டுக்குப் பறந்து செல்லுங்கள்....

# மாணவர்களுக்குக் கட்டணங்களில் 25% விசேஷ சலுகை

விமானத்தில் பறந்து செல்லுவதென்றாலே ஒரு தனி பரபரப்பும் பிரமிப்பும் உண்டாகிறது. வயதானவர்களைப்போல் தனியாகப் பிரயாணம் செய்வது உங்களுக்கு வேடிக்கையாக இருக்கும்! இந்த கோடைக்கு நீங்கள் உங்கள் ஊருக்குப் பறந்து சென்று, விடுமுறை கிடைத்த முதல் நாளே உங்கள் குடும்பத்துடன் சேர்ந்து விடுங்கள்!

மாணவர்களுக்கு ஐ ஏ ஸி ஓர் விசேஷ சலுகை அளிக்கிறார்கள். அதாவது இந்தியாவில் உள்ள எந்த இடத்துக்கும் கட்டணங்களில் 25 சத விகிதம் குறைத்திருக்கிறார்கள். விடுமுறை நாட்களைக் கழிக்க வீட்டுக்கோ, உல்லாச யாத்திரைக்கோ அல்லது அறிவு வளர்ச்சிக்கான பிரயாணங்களுக்கோ பறந்து செல்ல இதோ உங்களுக்கு அருமையான சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. உங்கள் யாத்திரையில் ஒவ்வொரு விநாடியையும் நீங்கள் ஆனந்தமாகக் கழிப்பீர்கள்.

எனவே இந்தத் தடவை வீட்டுக்குப் பறந்துதான் செல்லுவதென்று நிச்சயப்படுத்திக் கொள்ளுங்கள்.




விவரங்களுக்கு தயவு செய்து எங்களை அணுகுக:

## இந்தியன் ஏர்லைன்ஸ்

### கார்ப்பரேஷன்

5 & 6, மவுண்ட் ரோடு, சென்னை - போன்: 86433 (4 லைன்கள்)

IAC. 8341



மலர் 16 } இதழ் 43 }

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

{ ஹேவிளம்பி { வைகாசி 13

# டி. டி. கே. தயாரித்த பட்ஜெட்

நமது மத்திய சர்க்கார் நிதிமந்திரி டி. டி. கே. அவர்கள் தயாரித்த பட்ஜெட் வெளியாகி விட்டது. காங்கிரஸ் சர்க்கார் நிறைவேற்றியே தீருவது என்று முடிவு செய்துள்ள இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்துக்கு அற்புதமான முறையில் நிதி திரட்டத் திட்டம் வகுத்து விட்டார்!

இந்த நிதி எப்படித் திரட்டத் திட்டமிட்டிருக்கிறார்? திரும்பிய பக்கமெல்லாம் மக்கள் மீது வரி விதித்திருக்கிறார். 'பணக்காரர்களுக்கும் வரி விதிக்கிறேன்' என்று சொல்லி ஏழைகளுக்கும் நடுத்தர வகுப்பினருக்கும் வரி விதித்து யாரும் வாழ வழியில்லாமல் செய்து விட்டிருக்கிறார்! அதிலும் சொற்ப வருவாயுள்ள நடுத்தர மக்களின் வாழ்வுக்கு உலைவைத்து விட்டார்!

காப்பிக் கொட்டை, சர்க்கரை, தேயிலை, நெருப்புப் பெட்டி முதலிய அன்றாட வாழ்க்கையின் அத்தியாவசியப் பொருள்கள் பலவற்றின் மீதெல்லாம் தாறுமாறாக வரி விதித்தும், கார்டு, தந்தி, ரயில் கட்டணங்கள் ஆகியவற்றை உயர்த்தியும் விட்டார். ஏழை எளிய மக்களின் வாழ்க்கைக்கு அவசியமான மண்ணெண்ணெய்க்கும் வரி விதித்திருந்தார். அதைப் பற்றிப் பெரும் குழப்பம் ஏற்பட்டதனால் வாபஸ் வாங்கிக் கொண்டார். வரி போடப்பட்டிருக்கிறது என்ற காரணத்தைக் கொண்டு கடைக்காரர்கள் எல்லாச் சாமான்களின் விலையையும் இஷ்டம் போல் உயர்த்தி வருவது எல்லாரும் அறிந்த விஷயம்.

இதுவரை வருஷ வருமானம் 4,200 ரூபாய்க்குக் கீழ் உள்ளவர்களுக்கு வருமான வரி இல்லை என்றிருந்தது! இப்பொழுது அந்த வரம்பை மாற்றி ரூ. 3,000த்துக்குக் குறைத்து விட்டார். அதாவது மாதா மாதம் சிறிய சம்பளம் வாங்குபவர்களுக்குக்கூட வருமான வரி செலுத்தும் 'பெரிய' அந்தஸ்தைத் தேடித் தந்துவிட்டார்!

ஏற்கனவே அரிசி விலை அளவுக்கு மிஞ்சி ஏறி யிருக்கிறது. மற்றப் பொருள்களின் விலையும் ஏறுமுகமாக இருக்கின்றன. தற்போதைய வரி விதிப்பினால் அந்த உணவுப் பொருள்களின் விலை இன்னும் பல மடங்கு உயரப் போகின்றது. இந்த நிலையில் குறைந்த வருமானம் உள்ளவர்கள் எப்படிக் காலம் தள்ள முடியும்?

ஆனால் இவ்வளவு வரியும் எதற்காகப் போட்டிருக்கிறாராம், தெரியுமா? சர்க்கார் வகுத்துள்ள இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் நிறைவேறி, எதிர்கால மக்கள் சுபிட்சமாக வாழ்வதற்கென்றுதான் இந்த அதிக வரியை விதித்திருக்கிறாராம். திட்டம் முடிந்த பிறகு இந்த வரிகளையும் செலுத்திக் கொண்டு மக்கள் மிக நல்ல நிலையடைந்து சந்தோஷமாக வாழக்கூடிய சூழ்நிலை ஏற்படுமா? அவர்கள் இப்பொழுது பெற்றுவரும் சராசரி வருமானத்தைவிட அதிக வருமானம் பெறுவார்களா என்பது ஒரு நிச்சயமுமில்லை. அது சந்தேகந்தான்! பெரிய அணைகளும் ஆலைகளும் கட்டியிருக்கிற இடங்களில் வேண்டுமானால் பலர் வேலையில்லாத் திண்டாட்டத்தைத் தீர்த்துக் கொள்ளலாம். ஆனால் பாரத நாடு முழுவதிலும் நாலாதிசைகளிலும் இந்தத் திட்டத்தினால் மாதா மாதம் மக்கள் அதிக வருமானம் பெறுவார்கள் என்பது சந்தேகத்திலும் சந்தேகமே! ஆகவே, அதிக வரி கொடுத்துச் சோற்றுக்கும் கஷ்டப்பட்டு நடைப் பிணங்களாக வாழ்வதுதான் இந்த பட்ஜெட்டினால் ஏற்படக்கூடிய பலன்!

"நான் தேர்தல் சமயத்தில் மக்களுக்கு எதையும் வாக்களித்து விடவில்லை. அதனால் இப்பொழுது இவ்வளவு வரி விதிக்க நேர்ந்தது பற்றி என் மனச்சாட்சி வேதனை யுறவில்லை!" என்று நமது நிதி மந்திரி டி. டி. கே. சொல்லிக் கொள்கிறார்.

தேர்தலுக்குச் சற்று முன்னால்தான் நமது ராஜ்ய என். ஜி. ஓ.க்களுக்கு இருமுறை சம்பளம் உயர்த்தப்பட்டது. அவர்கள் இப்பொழுது என்ன சொல்லுகிறார்கள்?

'தேர்தலுக்கு முன்னால் ஆசை காட்டிக் கொடுத்த பணத்தை திரு டி. டி. கே. மீண்டும் பிடுங்கிக் கொண்டார். மிகச் சாமர்த்தியமாகப் புது வரிகள் போட்டுப் பெற்றுக் கொண்டுவிட்டார்' என்று சொல்லுகிறார்கள்.

அவர்கள் மீண்டும் சம்பளம் போதவில்லை என்று கிளர்ச்சி செய்தால் நியூஸ்பிரின்ட் காகிதம், மண்ணெண்ணெய் முதலியவற்றின் மீது விதித்த வரிகளை வாபஸ் பெற்றுக் கொண்டு சலுகை காட்டியது போல், என். ஜி. ஓ.க்களுக்கும் சம்பளம் உயர்த்துவதாக வாக்களிக்கலாம். ஆனால் தேசத்தில் மற்றத் தொழில் துறைகளில் வேலை செய்பவர்கள் இப்படி எந்தவிதமான சலுகைகளும் பெற முடியாது. அவர்கள்மீது மேலும் மேலும் வரிகளை விதித்துத் தமது காரியத்தை நடத்திக் கொண்டு போவார் நிதிமந்திரி!

இதில் இன்னொரு விஷயமும் இருக்கிறது. என். ஜி. ஓ.க்களுக்குச் சம்பளம் கொடுக்கும் பொறுப்பு ராஜ்ய சர்க்கார்களைச் சேர்ந்தது. புது வரிகள் மூலம் கிடைக்கும் வருமானமோ மத்திய சர்க்காரைச் சேர்ந்தது!

மொத்தத்தில் தற்போதைய அரசியல் திட்டம் என்னவென்றால் மத்திய சர்க்கார் தேசத்திலுள்ள எல்லாச் சக்திகளையும் திரட்டித் தங்கள் அதிகாரத்துக்குள் வைத்துக் கொள்ள வேண்டியது. பிரதேச மந்திரிகள் மத்திய சர்க்கார் மந்திரிகளிடம் யாத்திரை சென்று கெஞ்சிக் கூத்தாடிச் சலுகைகள் பெற்று ராஜ்ய ஆட்சியை நடத்த வேண்டியது. இந்த அவல நிலையை எதிர்த்துப் போராடி ராஜ்யங்களின் சக்தியைப் பெருக்கும் பிரதேச மந்திரிகள் யாருமில்லை.

இன்னொரு விஷயம். பணக்காரர்களுக்கும் வரி போட்டுக் காட்ட வேண்டும் என்பதற்காக விபரீதமுறைகளைக் கையாண்டிருக்கிறார் திரு டி. டி. கே. உலகத்தில் இரண்டொரு நாடுகளைத் தவிர வேறு எந்த நாட்டிலுமில்லாத புதுவகை வரிகள் இரண்டை இந்தப் பட்ஜெட்டில் அறிவித்திருக்கிறார். ஒன்று சொத்து வரி; மற்றையது செலவு செய்வதைப் பார்த்து அதன்மேல் விதிக்கும் ஆள் வரி. செலவுக்கும் தண்டத்துக்கும் வரி போடுவதற்கு அரசியல் சட்டத்தில் இடமில்லை. செலவு செய்யும் மொத்தத் தொகையை ஒரு அளவையாக வைத்துக் கொண்டு அநீதியான ஒரு புது வரியை இப்பொழுது ஆட்சித் திட்டத்தில் புகுத்தியிருக்கிறார்கள். செலவுகள் எல்லாம் பண்டங்களை விலைக்கு வாங்கிய வகையில்தான் ஏற்படுகின்றன. பண்டங்களை விலைக்கு வாங்கினால் அப்படி வாங்கியதற்காகவே இப்பொழுது வரி!!

ஒரு மனிதனுக்குச் சொத்து என்பதில் நகைகள், ரேடியோக்கள், பாத்திரங்கள் முதலியவை எல்லாமே அடங்கும்: இந்தச் சொத்துக்களுக்கும் இப்பொழுது வரி விதித்து விட்டார் திரு டி. டி. கே. சர்க்கார் அதிகாரி ஒருவர் நம் வீட்டுக்கு வந்து நம் சொத்துக்களை விசாரித்து மதிப்பிட்டு வரி நிர்ண

## நிகழ்ச்சிச் சித்திரம்



யிப்பார். அதைச் சொத்துடையவர்கள் செலுத்தியாக வேண்டும்.

இந்தச் சொத்து வரியினால் என்ன நிலைமை ஏற்படும் என்று பார்ப்போம். தனி நபர்கள் தங்கள் வீட்டில் உள்ள ஒவ்வொரு பொருளையும் சர்க்கார் அதிகாரிகளுக்குக் காட்டியாக வேண்டும். குடும்ப சமாசாரங்களைப் பற்றியெல்லாம் அதிகாரிகளுடன் கலந்து பேச வேண்டும். நம் வீட்டுப் பெண்களுடைய நகைகளைப்பற்றியெல்லாம் விளக்கமும் வாதமும் நடத்தியாக வேண்டும். வரி போடும் அளவுக்குச் சொத்துக்கள் இருக்கின்றனவா இல்லையா என்று பார்ப்பதற்கும் கூட இந்த விசாரணைகள் எல்லாம் நடைபெற வேண்டும். இவை மக்கள் மனத்தில் எவ்வளவு கசப்பை உண்டாக்கும் என்று சொல்லத் தேவையில்லை.

ஏழைகளுக்குச் சமாதானம் சொல்லுவது போல் 'சொத்துக்கு வரி போட்டேன்' என்று பெருமையாகப் பேசலாம். 'ரொம்ப சரி' என்று கம்யூனிஸ்ட் கட்சிக்காரர்களும் சொல்லலாம். கொஞ்சம் யோசனை செய்தால் சாதாரண மக்களுக்கு இதனால் ஏற்படும் எண்ணற்ற சங்கடங்கள் விளங்கும்.

அடுத்தாற்போல் 'செலவு வரி'. இனி இந்த வரியிலிருந்து தப்புவதற்கும் அத்தாட்சி காட்ட வேண்டும். அனைவரும் கணக்கு எழுதி வைத்தேயாக வேண்டும். இதனால் செலவு ஒன்றும் குறையாது. ஒவ்வொரு வீட்டிலும் ஒவ்வொரு நயா பைசா செலவுக்கும் கணக்கு எழுதி வைக்க ஒரு குமாஸ்தா வைத்துக் கொள்ள வேண்டியிருக்கும்! இது எவ்வளவு கேவல நிலை! இது நம் நாட்டில் முடியுமா? நம்முடைய பண்பாட்டுக்குத் தகுமா? விற்பனை வரி மூலம் கிடைக்கும் தொகை பிரதேச சர்க்கார்களுக்குச் சேரும். ஆனால் மத்திய சர்க்கார் விற்பனை வரி போன்ற வரியை ஒரு கோணல் வழியில் விதிக்கத் திட்டமிட்டிருக்கிறார்கள். அதுதான் செலவு வரி. இது ஒரு நியாயமற்ற முறை.

மனிதனுடைய அன்றாடச் செய்கை ஒவ்வொன்றிலும் சர்க்கார் கண்காணிப்பும், குறுக்கீடும் இருக்குமென்றால், வாழ்வில் என்ன சுகம் இருக்க முடியும்? அரும்பாடு பட்டுப் பெற்ற சுதந்திரத்தைச் சர்க்கார் அதிகாரிகளிடம் இழக்கும்படி நேர்ந்தால் அதை மக்கள் சகிப்பார்களா?

நாட்டில் அதிகாரிகளின் ஆர்ப்பாட்டங்களும் பயமுறுத்தலும் லஞ்சமும் ஏற்பட்டுவிட்டால் அவற்றை யாரால் கட்டுப்படுத்த முடியும்?

திரு டி. டி. கே. "ராஜாஜி என் நண்பரல்ல. அதனால் அவர் சொல்லுவதைக் குறித்து எதுவும் சொல்ல நான் விரும்பவில்லை!" என்று கூறியிருக்கிறார்.

ராஜாஜி காங்கிரஸ் கட்சிக்கே அறிவுறுத்தும்படி செய்த எச்சரிக்கையை இவ்வாறு புறக்கணிக்கிறார் நிதிமந்திரி டி. டி. கே.

பாரத மக்களோ, "ராஜாஜி உங்களுக்கு நண்பரல்லாமலிருக்கலாம்! ஆனால் அவர் நாட்டுக்கு நண்பர். நாட்டு மக்களின் நல்வாழ்வில் உண்மையான அக்கறை கொண்ட தலைவர். ஆகவே, ராஜாஜியின் யோசனையை அவர் உங்களுக்கு நண்பரல்லாவிட்டாலும் கேட்டேயாக வேண்டும்!" என்றுதான் திரு டி. டி. கே. யிடம் வற்புறுத்துகிறார்கள்.

-விஜி




சென்ற வாரம் ஒரு ரயில்வே என்ஜின். டிரைவர் இல்லாமலே வெகு தூரம் ஓடி வந்து சென்னை சென்டிரல் ஸ்டேஷன் பிளாட்பாரத்தை இடித்துத் தள்ளிவிட்டது. இன்று உணவுப் பிரச்னையின் நிலையும் அப்படித்தான் இருக்கிறது.

# இலங்கையில் நேரு

சென்ற வாரம் பாரதத்தின் பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லால் நேரு இலங்கைக்கு விஜயம் செய்து புதிதாக நிர்மாணிக்கப்பட்ட பழைய புனித நகரமான அனுராதபுரத்தைத் திறந்து வைத்தார். எண்ணற்ற நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டு இலங்கை மக்களை மகிழ்வித்தார். இந்த விழாவின் படங்களும் கட்டுரையும் அடுத்த கல்கி இதழில் வெளியாகின்றன.

1. கொழும்பு இரத்மலானை விமான நிலையத்தில் பாரதப் பிரதமரும் இலங்கைப் பிரதமரும். 2. இலங்கை சுகாதார மந்திரி திருமதி விமலா விஜயவர்த்தனா நேருவை வரவேற்கிறார். 3. கொழும்பிலிருந்து அநுராதபுரத்துக்குச் சென்ற விசேஷ குளிர் சாதனத்துடன் கூடிய ரயில் பெட்டிக்குள் இரு தேசத்துப் பிரதம மந்திரிகளும் இந்திரா காந்தியும். 4. கொழும்பு ராமகிருஷ்ண மடத்தின் சார்பில் நடந்த பொதுக் கூட்டத்தில் நேருஜி. 5. கொழும்பு நகர சபையின் வரவேற்புக்கு நேருஜி பதில் கூறுகிறார்.





# கம்பளை காங்கிரஸ்



பாரதத்தின் பிரதமர் பண்டித ஜவாஹர்லால் நேரு அவர்களுக்கு அளித்த வரவேற்பையும் மிஞ்சும் வண்ணம் கம்பளை காங்கிரஸ் மகாநாடு கோலாகலமாக நடந்தது.

இலங்கைத் தொழிலாளர் காங்கிரஸ் தலைவர் திரு தொண்டமானை இரண்டு லட்சம் தொழிலாளர்கள் புடைசூழ ஊர்வலமாக அழைத்து வந்தனர். நாற்பது யானைகள் முன் செல்லஐம்பதினாயிரம்தொண்டர்கள் அணிவகுத்து வர, சென்ற ஊர்வலக் காட்சியே காட்சி. கம்பளை காங்கிரஸ் மகாநாட்டின் கட்டுரையும் படங்களும் நேருஜி விஜயக் கட்டுரைக்கும் பின்னால் கல்கியில் வெளியாகும்.

1. இலங்கை மலைநாட்டுத் தமிழ் மக்களின் உணர்ச்சியும் உற்சாகமும் பொங்க நடத்திய கம்பளை காங்கிரஸ் மகாநாட்டு ஊர்வலம். 2. மகாநாட்டில் கலந்து கொண்ட தொழில் மந்திரி திரு டி. பி. இலங்கரத்னாவும் உணவு மந்திரி திரு பிலிப் குணவர்த்தனாவும், திரு ராஜலிங்கமும். 3. வெள்ளம்போல் திரண்டு நின்ற மக்கள் முன்னால் திரு தொண்டமான் தலைமையுரை நிகழ்த்துகிறார்.

# பாரதப் பிரதமரின் பொன்னுரை

பாரதப் பிரதமர் ஜவாஹர்லால் நேருஜிக்கு இலங்கை மக்களும் சர்க்காரும் அளித்த அமோக வரவேற்பிலிருந்து நேருஜிமீது அவர்களுக்குள்ள அன்பையும் மதிப்பையும் தெரிந்து கொள்ளலாம். பாரதத் தலைவரிடம் இலங்கை சர்க்காருக்குள்ள அபிமானத்தில் ஓரளவு இலங்கை இந்தியர்களிடம் இருக்குமாயின், இந்தியா - இலங்கைப் பிரச்னை திருப்திகரமாகத் தீருவதில் கஷ்டம் எதுவும் இராது என்பது நிச்சயம்.

நேருஜி பதினாயிரக்கணக்கான இலங்கை மக்கள் அடங்கிய கூட்டத்தில் கூறியிருப்பது போல், இந்தியாவும் இலங்கையும் பல அம்சங்களிலும் நெருங்கிய தொடர்பு உடையவை. இன்று எந்த புத்த ஜெயந்தி வைபவத்தை இலங்கை மக்கள் இவ்வளவு சிறப்பாகக் கொண்டாடுகிறார்களோ, அந்த புத்த மகான் இந்தியாவிலிருந்து வந்தவர். புத்த முனிவரின் புனித போதனைகளே இரு நாடுகளின் அடிப்படையான ஒற்றுமைக்குக் காரணமாக இருக்கின்றன. பூகோளம், சரித்திரம், கலாசாரம் எப்படிப் பார்த்தாலும் இரு நாடுகளுக்கும் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகத் தொடர்பு இருந்து வருகிறது. எனவே, மனிதத் தன்மையுடன், நேர்மையுடன், நட்புறவுடன் அந்தப் பிரச்னையைத் தீர்க்க முடியும் என்று நேருஜி கூறியுள்ள யோசனைக்கு இலங்கை சர்க்கார் செவி சாய்ப்பார்கள் என்று நம்புகிறோம். இலங்கைமீது பாரத தேசம் படையெடுக்கலாம் என்று கூறும் சில பிருகஸ்பதிகள் இலங்கையில் இருக்கிறார்கள். இவர்கள் இந்தியா-இலங்கைப் பிரச்னை தீருவதற்கு முட்டுக்கட்டையாக ஏதாவது சொல்லிக் கொண்டிருப்பார்கள். அத்தகைய நபர்களுக்கு நேருஜி ஆணித்தரமாகப் பதில் கொடுத்திருக்கிறார். அதைக் காட்டிலும் மடத்தனமான கூற்று வேறில்லை என்று கூறியிருக்கிறார். உலகத்தில் போரை அறவே ஒழிக்க வேண்டும்; எந்தப் பிரச்னையையும் சமரசமாகவே தீர்த்துக் கொள்ள வேண்டும் என்ற மகோன்னதமான அரசியல் கொள்கையை வலியுறுத்திவரும் இந்தியா, அண்டை நாடான இலங்கைமீது படையெடுக்கும் என்று கூறுவது அர்த்தமற்ற பேச்சு அல்லவா?

"இலங்கைக்கு இந்தியாவினால் எவ்வித ஆபத்தும் இல்லை என்று நான் வாக்குறுதி அளிக்கிறேன். இலங்கைமீது படையெடுப்பதால் இந்தியாவுக்கு எவ்வித லாபமும் இல்லை; அதற்கு மாறாகக் கஷ்ட நஷ்டங்கள்தான் அதிகமாகும். இலங்கைக்கு ஆபத்தை விளைவிக்கக்கூடியது இலங்கையின் சொந்தப் பிரச்னைகளே. இந்தப் பிரச்னைகளை நீங்கள் தீர்க்காவிட்டால், இந்தப் பிரச்னைகளே இலங்கையைத் திக்குமுக்காடச் செய்து விடும்" என்று நேருஜி கூறியுள்ளார்.

நீதி, நேர்மை, சாத்வீகம், ஜனநாயக தர்மம் இவற்றுக்கு இலக்கணமாகத் திகழும் பாரதப் பிரதமரின் பொன்னுரை இலங்கை-இந்தியா பிரச்னை தீருவதற்கு வழிகாட்டும் அறிவுரையாக அமைந்திருக்கிறது.

# வசந்த சுந்தரி

சுமார் இருநூற்றைம்பது ஆண்டுகளுக்குமுன் திருக் குற்றாலத்துக்கு அருகிலே வாழ்ந்த திரிகூட ராசப்பக் கவிராயர் ஓர் அருமையான காவியம் புனைந்தார். திருக் குற்றாலக் குறவஞ்சி என்ற அந்தக் காவியம் சமீப காலத்தில் மிகப் புகழ் பெற்றுப் பல அரங்குகளில் ஒளிர்வதைக் காண்கிறோம்.

அந்தக் காவியத்தின் கதாநாயகிதான் வசந்த சுந்தரி என்னும் ஆரணங்கு. மங்கைப் பருவத்தை எய்திய வசந்தசுந்தரி ஒருநாள் குற்றால நன்னகரின் தெருவீதியில் பந்தடித்து விளையாடிக் கொண்டிருந்தாள்! அவள் இடதுசாரி வலது சாரியாகப் பாய்ந்து விளையாடிய காட்சி கண் கொள்ளாக் காட்சியாக விளங்கியது! அந்த அற்புதக் காட்சியைக் கவிராயர் அரும் தமிழ்ச் சொல்லோவியமாகவே தருகிறார்!

பந்தடித் தனளே—வசந்த சுந்தரி—
விந்தை யாகவே

பொன்னி னொளிவில் வந்துதாவிய
மின்னின் ஒளிவு போலவே

நன்னகர்த் திரிகூடம் பாடி
நகுர்தத் திகுர்தத் தகுர்தத் தொம்மெனப் (பந்)

ஆண்டவன் திருக் குற்றால நாதனைப் பாடிப் பந்தாடி வந்த வசந்த சுந்தரி அந்தக் குற்றால நாதனையே காதல் கொண்டாள்.

அந்த வசந்தசுந்தரி பந்தாடி வந்த அரிய காட்சியை ஓவியர் ரத்னம் இவ்விதழ் அட்டைச் சித்திரமாக வழங்குகிறார்! அவள் மனத்தில் நிரம்பியுள்ள குற்றால நாதனையே புறப்படலத்தில் அற்புதமாகக் காட்டியிருக்கிறார் ஓவியர்.



எல்லோருடைய பார்வையையும் கவர்கின்றீர்கள்



உங்கள் ஷர்ட் **நியூ ஷாராக்** உயர்ந்த ரக பாப்லினுல்
தைக்கப்பட்டிருக்கும்பொழுது

மற்றும்
ஸான்போரைஸ்ட்
பாப்லின்கள், ஷர்ட்டிங்குகள்
கோடிடப்பட்டவை

★

மற்றும் ஸூட்டிங்ஸ், கேம்பிரிக்ஸ் வாயில்கள் முதலிய வகைகளும் கிடைக்கும்.








தி நியூ ஷாராக ஸ்பின்னிங் அண்ட் மான்யுபாக்சரிங் கம்பெனி லிட்., நடியாட்

SISTA'S-NSM-TAM

# அப்பளத்துப் பாட்டி

''யாரப்பா நீ? என்ன வேண்டும்?'' என்றாள் அப்பளத்துப் பாட்டி. மகாலக்ஷ்மியம்மாவுக்கு வயது அவ்வளவு அதிகம் இல்லை. ஐம்பது இருக்கலாம். அவள் வீடு வீடாகச் சென்று விற்று வந்த அப்பளத்துக்குப் பெயர் பாட்டியப்பளம். அப்படியே அவளை எல்லாரும் அப்பளத்துப் பாட்டி என்று அழைப்பார்கள்.

வந்த ஆள் புதிசு. ஒன்றும் பேசாமல் ஒரு தட்டில் பழமும் பூவும் வெற்றிலையும் பாட்டியின் காலண்டை வைத்துத் தரையில் நீள விழுந்து நமஸ்காரம் செய்து கை கூப்பி நின்றான்.

'' நீ யாரப்பனே? ஏன் என்னைக் கும்பிடுகிறாய்?'' என்றாள்.

''ஒன்றுமில்லேங்கோ, நீங்கள் எனக்குத் தெய்வம்'' என்றான் வந்தவன்.

ஆள் கறுப்பு, இருபது வயதிருக்கும். தெற்கேயிருந்து வந்து சென்னப்பட்டினத்தில் கெட்டவர்களுடைய சகவாசம் ஏற்பட்டு மெத்தை வீடுகள் ஏறித் திருடும் கும்பலில் புதிதாகச் சேர்ந்துவிட்ட ஒருவன்.

'' அதோ பார், தெய்வம்! திருப்பதி வெங்கடேசப் பெருமாள் படம்—அதைக் கும்பிடு. நான் எப்படித் தெய்வம் ஆவேன்? நீ யார், என்னத்துக்கு வந்தாய்?'' என்று மறுபடியும் கேட்டாள்.

'' எனக்கு நீங்கள்தான் தெய்வம்! எனக்கு வேறு தெய்வம்வேண்டாம். எனக்கு ஆசீர்வாதம் பண்ணுங்கோ '' என்றான்.

ஏதோ பைத்தியக்காரன் என்று எண்ணிப் பாட்டியம்மா, '' சரி! போ, மகனே, சுகமாக இரு!'' என்று சொல்லி அவன் வைத்த வெற்றிலை பாக்கில் கொஞ்சம் எடுத்து அதில் ஒரு ரூபாய் வைத்து அவனுக்குக் கொடுத்தாள்.



அவனும் வாங்கி ரூபாயை கண்ணில் வைத்து ஒற்றிக் கொண்டு, "அம்மா! உங்கள் ஆசி பெற்றேன். உங்களுக்குக் குழந்தைகள் இல்லையா?" என்றான்.

"ஒருவரும் இல்லையப்பனே! ஒரு மகன் இருந்தான். உன் வயது வரையில் இருந்து என்னைத் தனியாக விட்டுவிட்டுப் போய் விட்டான்!" என்றாள்.

"எங்கே போய்விட்டான்?" என்றான்.

"எங்கும் போகவில்லை அப்பனே, செத்துப் போய்விட்டான். திடீர் என்று சுரம் வந்து செத்துப்போனான்" என்றாள்.

*     *     *

அப்பளத்துப் பாட்டிக்குத் திருவல்லிக்கேணியில் ஒரு வீடு சொந்தம். கீழே குடித்தனம் இருந்தவர் போலீஸ் ஆபீசில் ஒரு குமாஸ்தா. முப்பது ரூபாய் வாடகை தருவார். பாட்டியம்மை மெத்தையில் இருந்த இரண்டு அறைகளில் குடியிருந்தாள். அன்று அமாவாசை ஞாயிற்றுக் கிழமை இரவு. ஏதோ சத்தம் கேட்டது. திடீர் என்று எழுந்து பார்க்க, யாரோ திருடன் உள்ளே புகுந்து தீக்குச்சி கிறி அதன் வெளிச்சத்தில் இங்குமங்கும் தேடிக் கொண்டிருந்தான்.

பாட்டி எழுந்து 'நாராயணா!' என்று சொல்லித் தலையணை கீழ் வைத்திருந்த 'டார்ச்சு' போட்டுப் பார்த்தாள். திருடன் மெத்தை வராண்டாவை நோக்கிக் குதித்து ஓடினான். யாரோ நாராயணன் என்று கூப்பிடுகிறாளே, கீழே போலீஸ் ஆபீஸ் வேலைக்காரர் யாரேனும் வந்துவிடுவார் என்று பயந்து திருடன் குதித்து ஓடப் பார்த்தான்.

"அப்பனே! செத்துப் போவாய், அங்கே குதித்தால். படியில் இறங்கி வாசல் வழியாகப் போ!" என்றாள் பாட்டி.

இப்படிச் சொன்னதும் வீட்டில் புகுந்த ஆள் திடுக்கிட்டுத் திரும்பினான். பாட்டி வெளிச்சம் காட்டத் தலை வணங்கிய வண்ணமாகப் படிக்கட்டு வழியே கீழே இறங்கி வெளியேறினான். பாட்டி கதவை மறுபடியும் சாத்தித் தன் அறைக்குச் சென்றாள்.

*     *     *

ஒரு வாரம் கழித்து அவன்தான் பழமும் வெற்றிலையும் தட்டில் எடுத்து வந்து கும்பிட்டவன்.

முத்துவீரன் தன் கதையை அப்பளத்துப் பாட்டிக்குச் சொன்னான்.

"அம்மே, உங்கள் அடிமை நான். உங்களிடம் வேலைக்கு என்னை அமைத்துக் கொள்ளுங்கள். எனக்கு ஒன்றும் வேண்டாம். உங்கள் அப்பளத்தை இந்தப் பட்டினத்தில் விற்றுத் தருவேன். என் சோறு நான் சம்பாதித்துக் கொள்வேன்" என்றான்.

*     *     *

முத்துவீரன் அப்பளத்துப் பாட்டியிடம் பத்து வருஷங்கள் அப்பளம் விற்று வந்தான். வியாபாரம் நன்றாக நடந்தது. பாட்டியம்மை இறந்து போனாள். முத்துவீரனே அந்த வியாபாரத்தை இப்போது நடத்துகிறான். பிராமண ஓட்டல்களுக்கெல்லாம் ஸப்ளை செய்கிறான். அவன் கீழ் நான்கு ஆட்கள் ஆண்களும் பெண்களும் வேலை செய்கிறார்கள். அப்பளம் பொட்டலங்களின் மேல் பாட்டியின் படம். அதுவே விலாசம்.

வருமான வரி ஆபீசர் இவனுடைய கணக்குகளைப் பார்வையிட வேண்டும் என்கிறார். "எனக்கு எழுதப் படிக்கவா தெரியும்? என்னிடம் ஒரு கணக்குமில்லை" என்று முத்துவீரன் வாதாடுகிறான். வரி உத்தியோகஸ்தர் அதையெல்லாம் கேட்பாரா?



# வட்ட மேஜை

## மின்சாரத் தொழிலாளர் கோரிக்கை

சென்னை அரசாங்க மின்சாரத் தொழிலாளர்களாகிய நாங்கள், எங்களது ஜீவாதாரமான பல கோரிக்கைகளுக்காக அமைதியான முறையில் போராடியதின் மூலமாக 1948-ம் ஆண்டு இலவச வீடு, இலவச விளக்கு, இலவச உடை முதலியன கொடுப்பதென அரசாங்கம் உத்தரவிட்டது. அந்த உத்தரவை நடைமுறைக்குக் கொண்டுவர வேண்டுமென்பதற்காக அன்றிலிருந்து இன்று வரையில் (10 ஆண்டுகள்) சாத்வீகமான சகல வழி முறைகளிலும் அரசாங்கத்தை அணுகினோம். அவர்கள் எங்களது நேர்மையான, தாழ்மையான வேண்டுகோளுக்குச் செவி சாய்க்காது பொதுமக்களுக்கும், அரசாங்கத்துக்கும் இடையூறு ஏற்படுத்தக்கூடாது என்ற எங்கள் உறுதியை உடைத்து விட்டார்கள். அரசாங்கத்தின் ஆதரவிலே, அரசியலில் பங்கு கொள்ளாது தொழிற் சங்கம் வளர வேண்டுமென்ற எங்களது உன்னதமான நோக்கத்தை ஊக்குவிக்க வேண்டிய அரசாங்கம் இன்று எங்கள் உரிமைகளைப் பறிப்பதன் மூலமாகச் சங்கத்தைச் சிதைத்து விடுவதற்கு முற்பட்டு விட்டது.

இந்நிலையில் எங்கள் உரிமையைக் காப்பாற்றவும், கொடுத்த உத்தரவை நிறைவேற்றி வைக்கவும், குறைந்த வருவாயில் சிரமமான வாழ்வு நடத்தும் எங்களுக்கு இப்போதாவது அரசாங்கத்தால் ஒப்புக்கொள்ளப்பட்ட உத்தரவு அமுலாக்கப்பட்டால் சிறிது உதவியாக இருக்கும்.

கோவை
25—4—57

பொதுச் செயலாளர், மத்தியக் கமிட்டி.
(பைகாரா, மேட்டூர், பாபநாசம், விண்டம் சங்கங்கள்)

## ரயில்வே கவனிக்குமா?

உலகம் அறிவியலின் மூலம் நாளொரு வண்ணம் முன்னேறி வருகிறது. எனினும் காரைக்குடி மாயவரம் லைனில் ரயில்களின் வேகம் பதினைந்து மைல்தான். இதுகாறும் நன்னிலத்துக்கும் மாயவரத்துக்கும் இடையே பிரயாண நேரம் ஐம்பது நிமிடங்களாக இருந்தது. ஏப்ரல் 1ந் தேதி முதல் அதையும் ஒரு மணி இருபது நிமிடமாக உயர்த்தி விட்டனர். சில இடங்களில் ரயில்களின் வேகத்தை உயர்த்தும் அரசாங்கத்தார் இந்த லைனில்மட்டும் கருத்தைச் செலுத்தாதது ஏன்?

மாதிரிமங்கலம்
4—4—57

எஸ். கிருஷ்ணமூர்த்தி

## மாற்றுவார்களா?

சேலம் பொதுமக்கள் சிமெண்ட் பர்மிட்டுக்கு அதிகாரிகளிடம் விண்ணப்பம் செய்தால், அவர்களுக்கு உள்ளூரிலேயே சிமெண்ட் எடுக்கும் பர்மிட் கொடுக்காமல் 15, 20 மைல் தூரத்தில் உள்ள வியாபாரிகளிடம் எடுக்கப் பர்மிட் கொடுக்கின்றனர்.

பொதுமக்கள் இரண்டு மூட்டைகளுக்காக இரண்டு மூன்று ரூபாய் செலவு செய்து போய் வாடகை கொடுத்து எடுத்து வருவதால் அவர்களுக்குக் கஷ்டமும் நஷ்டமும் ஏற்படுகிறது. அதனால் பர்மிட்படி மூட்டைகளை எடுக்காமல் விட்டுவிடுகிறார்கள். இது கோட்டா வியாபாரிகளுக்குப் பிளாக் மார்க்கெட்டில் சிமெண்ட் விற்க ஏதுவாகிறது. ஆகையால் அந்தந்த ஊர் வியாபாரிகளிடமே சிமெண்ட் மூட்டைகளைப் பெற அனுமதி கொடுக்கும்படி நமது சர்க்கார் உத்தரவு போடுவார்களா?

சேலம்
15—5—57

வெ. அப்புசாமி

## மணி மொழிகள்!

நாட்டு மக்களுக்கு நற்பயன் ஊட்டக்கூடிய விஷயங்களை அளிப்பதில் நமது 'கல்கி' பத்திரிகை என்றுமே முன்னணியில் நின்று வருகிறது.

அதற்கு ஓர் எடுத்துக் காட்டாக விளங்குகின்றன, சென்ற சில வாரங்களாகக் 'கல்கி'யில் பிரசுரமாகி வரும் நமது பக்திக்குரிய ஸ்ரீ ஜகத்குரு ஆசாரிய சுவாமிகளின் மகத்தான மணிமொழிகள்.

சென்னை
25—3—57

அ. ரா. சீனிவாசன் (சரலன்)

## பரிசுக் கதை

வாரா வாரம் ஒரு லட்சம் பிரதிகள் வெளியாகும் 'கல்கி'யின் ஒரு பிரதிக்குச் சொந்தக்காரன் நான். 21-4-57 கல்கி இதழில் திரு ர. சு. நல்லபெருமாள் அவர்கள் எழுதியுள்ள "சங்கராபரணம்" என் மனத்தைப் பெரிதும் கவர்ந்தது. முந்திய மாதப் பரிசுக் கதைகளைப் படித்து வியந்துள்ளேன். ஆனால், 'சங்கராபரணம்' கதை அவை எல்லாவற்றையும் மிஞ்சி மிளிர்கிறது. நூறு ரூபாயல்ல, பல நூறு ரூபாய்கள் இந்தக் கதைக்குக் கொடுக்கலாம்.

கம்பளை
22—4—57

மோ. ஞானக்கண்

## அரிய விருந்து

கல்கி 19—5—57 இதழ் பார்த்தேன். துறவி லாரென்ஸின் கருத்தை யோகமார்க்கத்துடன் ஒப்பிட்டு ராஜாஜி அவர்கள் எழுதுவது அரிய விருந்து.

திரு ராஜேந்திரன் தம்முடைய தந்தையை நினைவுக்குக் கொண்டு வர அழகான முறையில் முயற்சி செய்கிறார். தலைப்பும் தமிழ் நாட்டை விழிப்புக் கொள்ளச் செய்யும் வகையில் அமைந்திருக்கிறது.

திருச்சி
16—5—57

அகிலன்

ஏப்ரல் 28-ந் தேதி 'கல்கி' இதழில் வந்துள்ள 'எதிர்வீட்டுப் பெண்' அற்புதமான சிறுகதை. ஆயிரம் ஐந்நூறு என்றெல்லாம் பரிசுபெற்ற கதைகளைப் படித்திருக்கிறேன். அவைகளெல்லாம் இதற்கு உறை போடக் காணாது என்று அழுத்தமாகக் கூறுகிறேன்.

கோயம்புத்தூர்
25—4—57

டி. எல். சர்மா

# காலடி தந்த

சேரள ராஜ்யத்திலுள்ள காலடியில் நடைபெற்ற ஒன்பதாவது சர்வோதய மகாநாட்டுக்குப் போய் விட்டு ரயிலில் திரும்பி வந்து கொண்டிருந்தேன். அப்போது மகாநாட்டைப் பற்றியே நினைத்துக் கொண்டு வந்தவன் திடீர் என்று எதிர்காலத்தை நோக்கி ஓர் ஆயிரம் வருஷங்கள் பாய்ந்து விட்டேன். 2957-ம் வருஷம் என்றுதான் வைத்துக் கொள்ளுங்களேன். அந்தக் காலத்தில் ஏதோ ஒரு ஊரில் பள்ளிக்கூட வகுப்பறையில் மாணவர்கள் உட்கார்ந்திருந்தார்கள். ஆசிரியர் ''காலடி என்ற க்ஷேத்திரத்தில் ஆதி சங்கரர் என்ற மகான் பிறந்தார்....'' என்று விளக்கிக் கொண்டிருந்தார்.

அப்பொழுது அந்த வகுப்பிலிருந்த ஒரு மாணவன், ''ஸார்! முதலில் அந்த ஊருக்குக் காலடி என்ற பெயர் எப்படி வந்தது என்று சொல்லுங்கள்?'' என்று கேட்டான்.

ஆசிரியர் ஒரு கணம் திகைத்துப் போனார். மாணவனுக்குத் தக்க சமாதானம் சொல்லாவிட்டால் விடமாட்டான் போலிருந்தது. அவருக்குப் பளீர் என்று ஒரு யோசனை தோன்றியது.

'' இதோ சொல்லுகிறேன் '' என்றார் ஆசிரியர்.

''ஆதிசங்கரர் என்ற மகான் தோன்றிய காலத்துக்குச் சுமார் ஆயிரத்தைந்நூறு ஆண்டுகளுக்குப் பிறகு, வினோபா என்ற மகான் இந்த ஆதிசங்கரர் பிறந்த ஊருக்கு வந்து சேர்ந்தார். எப்படி? வினோபா அடிகள் காலத்தில் ரயில் வசதிகள் உண்டு. மோட்டார் வசதிகள் உண்டு. ஆகாய விமானங்களும் உண்டு. இத்தனையிருந்தும், அந்த வினோபா அடிகள் ஆதி சங்கரர் பிறந்த ஊருக்குக் காலாலேயே நடந்து வந்தார். அதுமட்டுமா? அந்த ஊரில் வெகு வெற்றி

---

1. ஜெயப்பிரகாஷ். 2. கைத் தொழில் பொருட்காட்சியின் முகப்புத் தோற்றம். 3. வினோபாவும் மலையாள மொழி பெயர்ப்பாளர் ஸ்ரீமதி ராஜம்மாவும். 4. மகாநாட்டில் இளநீருக்குரொக்கி. 5.6. கேரளகவர்னர் ராமகிருஷ்ண ராவும் மகாநாட்டுக்கு வந்திருந்த பிரமுகர்களும்.

1

2

3

4

5

போட்டோ: விச்சு

# சர்வோதயம்

கரமாக சர்வோதய மகாநாட்டை நடத்தினார். அப்பொழுதிலிருந்து இந்த ஊருக்குக் காலடி என்ற பெயர் நிலைத்தது. விநோபா அடிகளை காலால் நடந்து வந்தடைந்த ஊராதலினால் 'காலடி!' என்ற பெயர் ஏற்பட்டது!'' என்று அந்த ஆசிரியர் பள்ளி மாணவர்களுக்குச் சண்டப் பிரசண்டமாக அடுக்கிக் கொண்டே போனார்.

இதை உன்னிப்பாகக் கேட்டு வந்த அந்த வகுப்பைச் சேர்ந்த மற்றொரு மாணவன் ''சர்வோதய மகாநாடு என்றால் என்ன ஸார்?'' என்று கேட்டான்.

''2957-ம் வருஷத்து மாணவன் மட்டும் அப்படிக் கேட்கவில்லை. 1957-ம் வருஷத்து நான் கூடத்தான் கேட்கிறேன்'' என்று சொல்வது போலிருந்தது. கண் விழித்துப் பார்த்தேன்.

என் பக்கத்திலிருந்த நண்பர் என்னைத் தட்டி எழுப்பி ''சர்வோதய மகாநாடு என்றால் என்ன?'' என்று கேட்டார்.

கற்பனை உலகிலிருந்து சுய நினைவு பெற்றுவிட்ட நான் இந்தக் கேள்விக்குச் சுருக்கமாக எப்படிப் பதில் சொல்வது என்று ஒரு கணம் யோசித்தேன்! ஆம், சர்வோதயம் என்றால் என்ன என்று விளக்கி அவருக்குச் சுலபமாகப் புரிய வைக்க முடியும் என்று எனக்குத் தோன்றவில்லை. அதனால் ''சர்வோதய மகாநாடு என்றால் பாரத நாட்டிலுள்ள நல்லவர்கள் கூடும் மகா நாடு'' என்று சொன்னேன்.

அவர் என்னை ஒரு மாதிரி பார்த்தார். அதிலிருந்து நான் இன்னும் தூக்கக் கலக்கத்தில் தான் இருப்பதாக அவர் நினைக்கிறார் என்று தோன்றியது. ஆனால் நான் கூறிய விளக்கம் தவறல்ல என்று எனக்கே ஒரு கணத்துக்குப் பிறகு புரிந்தது.

சென்ற வருஷத்துச் சர்வோதய மகாநாடு காஞ்சியில் நடைபெற்றது. அந்த மகாநாட்டுக்கு வந்த ராஜாஜி, மாலை காரில் சென்னைக்குத் திரும்பி

7. தலைவர் தேபரும், மாநாட்டுத் தலைவர் தாதா தர்மாதிகாரியும். 8. கைத்தொழில் பொருட் காட்சியில் ஒரு தோற்றம். 9. திரு கேளப்பன் வரவேற்புரை நிகழ்த்துகிறார். 10. திரு தோத்ரே தலைவரை அறிமுகப்படுத்துகிறார். 11. தண்ணீர்த் தானம் நடைபெறுகிறது!

8

9

எஸ்.வி.எஸ்

10

11

வந்து கொண்டிருந்தார். மகாநாட்டைப் பற்றிக் கூட இருந்த அன்பர்கள் வெகுவாகப் பாராட்டிப் பேசி வந்தார்கள்.

"பழைய காங்கிரஸிலிருந்த நல்லவர்கள் எல்லோரும் விநோபா அடிகளின் இந்த பூதான இயக்கத்தில் ஈடுபட்டு வேலை செய்கிறார்கள். அந்த நல்லவர்கள் எல்லோரும் இந்தச் சர்வோதய மகாநாட்டில் இருக்கிறார்கள். அதனால்தான் சர்வோதய மகாநாடு இவ்வளவு மகிழ்ச்சியையும் மனத் திருப்தியையும் அளிக்கிறது!" என்றார்.

இதைவிட உயர்ந்த பாராட்டுரை வேறு என்ன இருக்க முடியும்? ஆகவே சர்வோதய மகாநாடு என்றால், "நாட்டிலுள்ள நல்லவர்கள் கூடும் மகாநாடு" என்று பதில் சொல்லியதில் தவறு என்ன இருக்கிறது?

மேலும் நான் காலடி சர்வோதய மகாநாட்டுக்குப் போய் வந்ததின் காரணமே அதுதான். "நல்லாரைக் காண்பதுவும் நன்றே. நலமிக்க நல்லார் சொல் கேட்பதுவும் நன்றே" என்று நம் பெரியோர்கள் கூறியிருப்பதை வெகு சுலபமாக நிறைவேற்றிவிட வாய்ப்பிருக்கும்போது அதை நழுவ விடுவானேன் என்றுதான் காலடிக்குச் சென்றேன்.

அந்தக் காலடி தந்த சர்வோதயக் காட்சியை என்னென்பேன்!

"சர்வோதயம்" என் வரைக்கும் ரயிலிலேயே ஆரம்பமாகி விட்டது என்று சொல்ல வேண்டும்!

இந்த வருஷம் காலடியில் நடைபெற்ற சர்வோதயத்தில் ஒரு முக்கியமான முடிவு செய்யப்பட்டது. அந்த முடிவுக்குக் காரண பூதராக விளங்கியவர் திரு ஜெயப்பிரகாஷ் தான். 1957-ம் ஆண்டுக்குள் ஐந்து கோடி ஏக்கர் நிலம் பூதானமாகப் பெற்றுவிட வேண்டும் என்று ஒரு கால வரம்பு முந்தைய மகாநாடுகளில் ஏற்படுத்திக் கொண்டிருந்தார்கள். இத்தகைய கால வரம்பு பூதான ஊழியனுக்குச் சர்வோதய சமாஜத்தை நிர்மாணிக்க விரும்புகிறவனுக்கும் பொருந்தாது. ஒரு தடவை ஒருவன் பூதான ஊழியனாக வந்து விட்டானானால் அவனுக்குக் குறிப்பிட்ட வருஷத்துடன் வேலை முடிந்து விட்டது என்பதில்லை. அவன் ஆயுள் முடிய அந்த வேலையில் ஈடுபட வேண்டியதுதான். அடுத்த பிறவியிலும் சௌகரியப்பட்டால் அந்த வேலையில் ஈடுபட வேண்டியதுதான்! இப்படி அங்கு தீர்மானிக்கப் பட்டது.

இந்த முடிவு, சென்னை சென்ட்ரல் ஸ்டேஷனிலிருந்து காலடிக்குச் சென்ற ஸ்பெஷல் ரயிலுக்கு முன்கூட்டியே எப்படியோ தெரிந்து விட்டது போலிருக்கிறது. அதன் விளைவாக என்னவாயிற்று தெரியுமா? அது தன் காலம், நேரம் யாவற்றையும் காற்றில் பறக்க விட்டது. எட்டாம் தேதி இரவு பதினொரு மணிக்குப் புறப்பட வேண்டிய ரயில் 12-30 மணிக்குத்தான் புறப்பட்டது.

மறு நாள் இரவு 7-30 மணிக்கு அங்கமாலி சேர வேண்டிய ரயில் (அங்குதான் காலடிக்கு இறங்க வேண்டும்) இரவு 12-30 மணிக்குப் போய்ச் சேர்ந்தது! இப்படி ரயில் கால வரம்பைக் கடந்து, தன் விருப்பம்போல் நிதானமாகப் புறப்பட்டு, தன் விருப்பம்போல் சர்வோதய பாணியில் போய்ச் சேர்ந்தது!

இரவு பன்னிரண்டுமணிக்கு அங்கமாலிக்கு ரயில் போய்ச் சேர்ந்தாலும் ரயிலடியில் ஏராளமான தொண்டர்கள் இருந்தார்கள். அங்கமாலி ரயிலடியிலிருந்து நாலு மைல் தூரத்திலுள்ள காலடி முகாமுக்குப் போய்ச் சேர அந்த வேளையிலும் ஏராளமான பஸ்கள் இருந்தன. வடநாட்டிலிருந்து ஏராளமான பிரயாணிகள் வந்திருந்தார்கள். அவர்கள் அத்தனை பேரும் எவ்வித கஷ்டமுமின்றி அங்கமாலியிலிருந்து காலடிக்குப் போய்ச் சேர்ந்தார்கள்.

காலடியில் சர்வோதய மகாநாடு நடக்கும் இடத்தைச் சுற்றிப் பெரிய கொட்டகைகள் அமைத்திருந்தார்கள். அதில்தான் வெளி ராஜ்யங்களிலிருந்து வந்திருந்த ஏராளமான பிரதிநிதிகள் தங்குவதற்கு ஏற்பாடு செய்திருந்தார்கள்.

மறுநாள் அதாவது பத்தாம் தேதி காலை பத்தரை மணிக்கு விநோபா அடிகள் சர்வோதய புத்தகக் கண்காட்சியைத் திறந்து வைத்தார்கள். சர்வோதயம், பூதானம், கிராம தானம், சம்பத்துதானம் முதலியவை சம்பந்தமாக ஏராளமான நூல்கள் வெளியாகியுள்ளன. பாரதநாட்டிலுள்ள எல்லா மொழிகளிலும் வெளியாகியுள்ள நூல்கள் அங்கு அந்தச் சர்வோதயப் புத்தகக் கண்காட்சியில் வைக்கப் பட்டிருந்தன! சர்வோதய சம்பந்த

---

### டீ ஐஸ்கிரீம்

இந்திய சர்க்காரின் வர்த்தக மந்திரி சபையின் ஆதரவில் நடைபெறும் டீபோர்டு ஸ்தாபனத்தார் ரொம்பவும் கெட்டிக்காரர்கள். அவர்கள் பம்பாயில் முதல் தடவையாக டீ ஐஸ்கிரீம் செய்து விற்றார்கள். அதைப் பம்பாய் மக்கள் வெகு ஆவலோடு வரவேற்கின்றனர். ஐஸ் போட்ட டீக்கும், டீ ஐஸ்கிரீமுக்கும் நாளுக்குநாள் புகழ் ஏறிக்கொண்டு வருகிறதாம். புத்துணர்ச்சியும் புது மலர்ச்சியும் அளிக்கவல்லது இந்த டீ என்று பொது மக்கள் உணர ஆரம்பித்திருக்கின்றனர். அமெரிக்க மக்கள் ஐஸ் டீயைத் தேசிய பானமாக உட்கொண்டு வருகின்றனர். நம் நாட்டிலும் விரைவில் இந்தப் பானம் பிரா பல்யமடையும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. டீ போர்டார் அதற்குத் தகுந்த ஏற்பாடுகள் செய்து வருகின்றனர் என்று அறிகிறோம்.

# ஜூன் மாதத்தில் வருகிறது!



ஜூபிடர்

# கற்புக்கரசி

அற்புதமானதோர்
கற்பனைக் களஞ்சியம்



டைரக்ஷன்: A.S.A.சாமி

மாக இத்தனை நூல்களா வெளியாகியுள்ளன என்ற பிரமிப்பே ஏற்பட்டது.

வினோபா அடிகளுக்கு ஆதிசங்கரரிடம் அளவு கடந்த ஈடுபாடு. பகவான் பால்ய பருவ முதல் ஈடுபாடு. ஆதிசங்கரர் உபநிஷதங்களுக்கு எழுதியுள்ள விளக்க நூல்களிலும், பக்திப் பாடல்களிலும், அத்வைத மதத்தை வாதித்த முறையிலும் அளவு கடந்த பற்று. அந்த பக்தியும் பற்றுமே, வினோபா அடிகளை ஆதிசங்கரர் அவதரித்த புனித ஊராகிய காலடியில் ஒன்பதாவது சர்வோதய மகா நாட்டைக் கூட்டும்படி செய்தது.

வினோபா ஆதிசங்கரரிடம் தாம் பெற்ற ஒளியை ''குருபோதம்'' என்று வடமொழி சுலோகங்கள் கொண்ட ஒரு நூலாகச் செய்திருக்கிறார். இந்தக் காலடி சர்வோதய சாஹித்ய கண்காட்சி திறப்பு விழாவில் அந்த நூல் வெளியிடப்பட்டது!

சர்வோதய சாஹித்ய மகாநாட்டைத் திறந்து வைத்து வினோபா அடிகள் அறிவுக்கு விருந்தாக அமையக் கூடிய ஒரு பிரசங்கம் நிகழ்த்தினார். அந்தப் பிரசங்கத்தில் கலைமகளின் உயர்வை வெகு அழகாக விளக்கினார். ''இந்திரனும் அக்னியுமே அறிவுத் தெய்வமாகிய கலைமகளின் அருளை வேண்டினர்'' என்று வேத மந்திரங்களைச் சொல்லி விளக்கினார்.

உலகில் எந்த ஒரு இயக்கமும் 'சப்த சக்தி', அதாவது சொல்லின் சக்தியின்றி வெற்றி பெறுவதில்லை என்பதையும் விளக்கினார். காந்தி மகான் வெற்றி சொல்லின் வெற்றியே யல்லவா? தாம் கண்ட உண்மையைப் பலப் பல பிரசங்கங்களிலும் கட்டுரைகளிலும் விளக்கியதனால் அல்லவா அவர் இயக்கம் வெற்றி பெற்றது. சரஸ்வதியின் அருள் அத்யயனத்தினாலேயே பெறக்கூடும். 'தேர்தலிலேயே கவனம் செலுத்துபவர்களுக்குக் கலைமகளின் பேரருள் கிட்டுவது துர்லபம்' என்றார். அப்போது சபையோரிடையே பெருத்த சலசலப்பும் சிரிப்பும் ஏற்பட்டது.

அன்று பிற்பகல் மகாநாடு துவங்கிற்று. இந்த மகாநாட்டில் வேறு எந்த மகாநாட்டிலும் இல்லாத அதிசயம்! அதாவது அந்த வருஷத்துச் சர்வோதய மகாநாட்டின் தலைவர் யார் என்பது கடைசி நிமிஷம் வரையில் யாருக்குமே தெரிவதில்லை. மகாநாடு ஆரம்பிக்கும் போதுதான் அறிவிக்கப்படுகிறது!

அதுவரை ''இந்த வருஷத்து மகாநாட்டின் தலைவர் யார்? யார்?'' என்ற கேள்வி எங்கும் பரவி மக்கள் ஒருவரை யொருவர் விசாரித்துக் கொண்டிருப்பார்கள்.

சரியாக மூன்றரை மணிக்கு இந்த வருஷத்து மகாநாட்டின் தலைவர் ஸ்ரீ தாதா தர்மாதிகாரி என்று அறிவித்தவுடன் சபையோரிடையே பெருத்த மகிழ்ச்சி ஆரவாரம் அலை அலையாக மோதியது!

''தாதா தர்மாதிகாரி யார்?'' என்பதைப் பற்றி அவருடைய உற்ற நண்பர் திரு தோத்ரே மிக ரஸமாக அறிமுகப்படுத்தினார்.

காந்தி மகான் ஆரம்பித்த ஒத்துழையாமை இயக்கத்தில் தீவிரப் பங்கு கொண்டு தேசப் பணியில் இறங்கியவர். நல்ல அறிவாளி. காந்தி மகானின் அஹிம்சைக் கொள்கைக்குப் புதுப் புது விளக்கங்கள் கொடுத்து எழுதியவர் தாதா தர்மாதிகாரி. அவர் வினோபா அடிகளின் உற்ற நண்பர். அரசியல் துறையிலும் அறிவுத் துறையிலும் வினோபா அடிகளுடன் ஒத்த மனப்பான்மை கொண்டவர். சர்வசேவா சங்கத்தின் முக்கிய உறுப்பினர்களில் ஒருவர். பூதான இயக்கத்தில் தீவிர உணர்ச்சியுள்ளவர்!

பொதுவாக ஒரு மகாநாட்டுக்குத் தலைவர் என்றால் அவர் அல்லவோ தலைமைப் பிரசங்கம் முதலில் நிகழ்த்த வேண்டும். ஆனால் அவர் அப்படிச் செய்யவில்லை. இரண்டு நாளும் யார் யாரையெல்லாமோ அழைத்துப் பிரசங்கம் செய்யச் சொன்னாரே தவிர தமது தலைமைப் பிரசங்கத்தைக்கூடியவரை மறுநாள் மாலைக்குத் தள்ளிப் போட்டுக் கொண்டார்!

இதைப் பற்றி காங்கிரஸ் அக்கிராசனர் திரு தேபர் பேசியபோது குறிப்பிட்டார். நமது தலைவர் எல்லாருக்கும் பிரசங்க தானம் செய்து வருகிறார் என்று நகைச்சுவையோடு கூறினார். பூதான ஊழியர்கள் நிரம்பிய இந்த மகாநாட்டுக்கு இவரைவிடப் பொருத்தமான தலைவர் வேறு யார் இருக்க முடியும்?

காலடி சர்வோதய மகாநாட்டு வரவேற்புக் கமிட்டித் தலைவர் திரு கேளப்பன் ஓர் அருமையான வரவேற்புரை மலையாளத்தில் நிகழ்த்தினார். அதை திரு நாணப்பா ஹிந்தியில் மொழிபெயர்த்துச் சொன்னார். திரு கேளப்பன் உரையில் உள்ளத்தைத் தொடும் படியாக அமைந்த ஒரு விஷயத்தை இங்கே குறிப்பிட வேண்டும்!

'' கேரள நாட்டில் இந்த சர்வோதய மகாநாடு போன்ற பெரிய அளவில் மகாநாடுகள் இதுவரை நடைபெற்றதில்லை. அதனால் எங்களுக்கு இத்துறையில் போதிய அநுபவமில்லை. அதனால் வந்திருக்கும் பெரியோர்களுக்கும் மற்றப் பிற ராஜ்யப் பிரதிநிதிகளுக்கும் பல அசௌகரியங்கள் ஏற்பட்டிருக்கக் கூடும். அவற்றையெல்லாம் தயவு செய்து பொறுத்துக் கொள்ள வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டார். ஆனால் மகாநாட்டுக்கு வந்திருந்தவர்களோ, எத்தகைய அசௌகரியமும் குறையையும் காணவில்லை! அதற்கு மாறாக அனுபவமில்லாத போதே இவ்வளவு சிறப்பாக நடத்தக் கூடியவர்கள் உண்மையில் அநுபவம் பெற்றுவிட்டால் என்ன தான் செய்யமாட்டார்கள் என்ற வியப்பே பலருக்கும் ஏற்பட்டிருந்தது.

கேரளத்தைத் தவிர மற்ற ராஜ்யங்களிலிருந்து சுமார் பதினாயிரம்பேர் வந்திருந்தார்கள். கேரளத்திலிருந்து சுமார் முப்பதினாயிரம்பேர் வந்திருந்தார்கள். இவ்வளவு பெரும் கூட்டத்துக்கு இருக்க இடமும், உண்ண உணவும் ஏற்பாடு செய்து நல்ல பெயர் எடுப்பது என்பது எவ்வளவு பெரிய விஷயம்!

போதாததற்குக் கேரள ராஜ்யத்தில் நடைபெறும் சர்க்கார் கம்யூனிஸ்ட் சர்க்கார். அவர்கள் போதிய உதவி யளித்தாலும், காங்கிரஸ்சர்க்காரிடமிருந்து உரிமையுடன்கோரிப் பெருமளவுக்கு உதவிபெற முடியாதல்லவா? மேலும் கேளப்பன் பிரஜா சோஷலிஸ்ட் கட்சியைச் சேர்ந்தவர்! இத்தகைய தர்ம

சங்கடமான நிலையில் இந்த மகாநாடு இவ்வளவு வெற்றிகரமாக நடந்தது என்றால் திரு கேளப்பனையும் கம்யூனிஸ்ட் சர்க்காரையும்தான் பாராட்ட வேண்டும்!

இந்த மகாநாட்டுக்கு நமது ஜனாதிபதி ராஜன் பாபு அவர்களின் வாழ்த்துரையைக் காங்கிரஸ் தலைவர் தேபர் அவர்களும் நமது அருமைத் தலைவர் ராஜாஜி அவர்களின் வாழ்த்துரையை அடியேனும் எடுத்துக் கொண்டு போயிருந்தோம். ராஜாஜியின் ஆசிச் செய்தியுடன் வினோபா அடிகளின் குடிலுக்குள் நுழைந்தேன். வினோபாஜி என்னைப் பார்த்ததும் ''உன்னைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்'' என்று தமக்கே உரிய புன்முறுவலுடன் சொன்னார்.

அப்பொழுது எனக்கு மெய்சிலிர்த்து விட்டது. வினோபா அடிகள் கோவையிலிருந்த போது பார்த்தது. பிறகு பார்க்கச் சௌகரியப்படவில்லை. அவர்கள் இப்படிச் சொன்னதும் எனக்குத் தர்மசங்கடமாகப் போய்விட்டது.

''இல்லை...நான் ராஜாஜியின் வாழ்த்தைக் கொண்டுவந்திருக்கிறேன்!'' என்று சொல்லித் தப்பித்துக் கொண்டேன்.

ராஜாஜியின் வாழ்த்துக் கடிதத்தைக் கொடுத்தவுடன் அடிகள் பிரித்துப் படிக்கத் தொடங்கினார்கள்.

''தேச நலனைக் கருதியே பாடுபடுகிறோம். இம் முயற்சியில் ஈடுபடுபவர்களின் கட்சிகளும் கொள்கைகளும் வெவ்வேறாக இருக்கலாம்; ஆனால் நோக்கம் மட்டும் ஒன்றே. அதாவது தேச நலன். வினோபா பிறரிடம் அன்பு செலுத்துவதே தேச நலனுக்கும், ஆத்ம வளர்ச்சிக்கும் உகந்த வழி என்று நம்புகிறார். அவரது போதனைகள் பலனளிக்கும் என்று நம்புகிறேன். மகாநாட்டுக்கு என் நல் வாழ்த்துக்கள்.'' (அடுத்த இதழில் முடியும்.)

## பி. பி. ஸி.யின் அதிர்ஷ்டம்!

சிறந்த தமிழ் எழுத்தாளர்களை எங்கேயாவது கண்டுவிட்டால், உடனே அவர்களை அகில இந்திய ரேடியோ, செய்திப் பிரசார இலாகா தூக்கிக் கொண்டு சென்று, தன்னுடைய காரியாலயங்களில் பிடித்துப் போட்டுக்கொள்வது வழக்கம். இந்தக் காரியாலயத்தில் இப்போதெல்லாம் சில அயல் நாட்டு ஸ்தாபனங்களும் போட்டியிடக் கிளம்பி, அ. இ. ரே. ஸ்தாபனங்களை அழ வைக்கத் தொடங்கியிருக்கின்றன! உதாரணமாக அமெரிக்க வெளி விவகார செய்திப் பிரசார இலாகா, ரேடியோ ஸ்தாபனம் இவற்றைக் குறிப்பிடலாம். அப்படியும் தப்பித் தவறி யாராவது சிறந்த தமிழ் எழுத்தாளர்கள் கண்டு மிஞ்சினும், அவர்களை பி. பி. ஸி. ஸ்தாபனம் சத்தம் செய்யாமல் தட்டிக் கொண்டு போய்விடுவதையும் பார்க்கலாம்.



சமீபத்தில், பி. பி. ஸி. அப்படிப்பட்ட சிறந்த தமிழ் எழுத்தாளர் ஒருவரைக் கவர்ந்து சென்றிருக்கிறது. அவர்தான் நமது கல்கி பத்திரிகையில் அடிக்கடி கருத்து நிறைந்த ஹாஸ்யக் கட்டுரைகள், கதைகள் எழுதி வரும் ''சுந்தா'' அவர்கள்.

திருநெல்வேலி ஜில்லாவைச் சேர்ந்த சுந்தா அவர்களின் முழுப் பெயர் எம். ஆர். எம். சுந்தரம் ஆகும். ரசிகமணி டி. கே. சி. அவர்களின் அன்புக்கும் பாராட்டுதலுக்கும் பாத்திரமாய் விளங்கிய எழுத்தாளர்களில் ஒருவர். தமிழ் இலக்கியங்களிலிருந்து டி. கே. சி. அவர்கள் அள்ளித் தந்த திகட்டாத விருந்துகளில், பந்தியின் முதல் வரிசையில் எப்போதும் 'சுந்தா' அவர்களை இலக்கிய அன்பர்கள் காண்பதுண்டு

சுமார் பதினெட்டு ஆண்டுகளுக்கு முன்னர், 1938-ல் ராஜாஜி அவர்கள் தலைமை வகிக்க, தமிழ்த் தாத்தா, காலஞ் சென்ற மகா மகோபாத்யாய உ. வே. சுவாமிநாத அய்யர் அவர்களால், பாரதி தங்கப் பதக்கம் பெற்ற ஆறு சிறந்த கதாசிரியர்களில் ஒருவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர் 'சுந்தா'.

தமிழில் இலக்கியச் சுவையுடன் ஹாஸ்யக் கட்டுரைகளும், கதைகளும் புனைவதில் மட்டும் அல்லாது கவிதைகள் புனைவதிலும் திரு சுந்தா அவர்கள் பிரசித்தமானவர். ஆங்கிலத்திலும் கவிதைகள் கட்டுரைகள் எழுதுவதில் திறமை வாய்ந்தவர். சுந்தா அவர்கள் சிறந்த எழுத்தாளர், கவிதையாளர் என்பதோடு, சிறந்த நாடக ஆசிரியரும் நடிகரும் ஆவார். ரசமான ஹாஸ்யக் கதைகளை சங்கீத உபன்யாசமாகச் செய்வதிலும் புகழ் பெற்றவர். ''நவீன சுயம்வரம்'' என்ற அவருடைய கதாகாலக்ஷேபம் இதற்கு ஓர் சிறந்த எடுத்துக் காட்டாகும்.

1940-ல், திருச்சி அகில இந்திய ரேடியோ நிலையத்தில் எழுத்தாளராகச் சேவையில் அமர்ந்த சுந்தரத்தை 1942-ல் டில்லி அ. இ. செய்தி ஸ்தாபனம் கவர்ந்து கொண்டது. ''ஆல் இந்தியா ரேடியோ...தமிழில் செய்திகள்....வாசிப்பது சுந்தரம்...'' என்ற குரலை அடிக்கடி தமிழ் மக்கள் கேட்டு வர முடிந்தது. இனி இந்தக் குரலை, லண்டனிலிருந்து வாரத்துக்கு ஒரு முறை பி. பி. ஸி யின் தமிழோசை நிகழ்ச்சிகளில் தான் கேட்க முடியும். பி. பி. ஸி. ஸ்தாபனத்தில் சுமார் மூன்று வருட காலத்துக்குப் பதவி பெற்று பிரிட்டனுக்குச் செல்லும் ஸ்ரீ சுந்தா அவர்களுக்குத் தமிழ் மக்களின் ஆசியும், வாழ்த்துக்களும் உரித்தாகின்றன.

— வேலன்

தென்னாற்காடு ஜில்லா போர்டு மெம்பரும், கடலூர் முனிசிபல் கவுன்சிலரும், முருகன் டிரான்ஸ்போர்ட் உரிமையாளருமான ஸ்ரீ எம். முருகேச படையாட்சியும் அவரது மனைவியும் தங்கள் குமாரன் திரு ஜெயராமனுக்கும் கும்பகோணம் திரு என். பக்கிரிசாமி பிள்ளை குமாரி திருமதி அரவிந்தாவுக்கும் மே 6-ந் தேதி புதுப்பாளையத்தில் நடந்த திருமணத்திற்கு விஜயம் செய்த உறவினர், நண்பர்களுக்கும் வாழ்த்துச் செய்தி வழங்கியவர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றனர். இதையே தனித்த நன்றிகூறலாகக் கருதும்படி வேண்டுகின்றனர்.

வாழ்க, ஜெயராமன் - அரவிந்தா!



## READ SOVIET BOOKS AND PERIODICALS




MOSCOW NEWS, the illustrated bi-weekly newspaper published from Moscow and delivered by air in India, carries news about the social, political, economic and cultural life in the Soviet Union. Its contributors are prominent figures and authorities in diverse branches of Soviet life.

"COPIES SENT BY AIR"

*Available with:*

**NEW CENTURY BOOK HOUSE**

199, Mount Road, Madras - C/17 Majestic Circle, Bangalore - 2



V/O MEZDUNARODNAYA KNIGA, Moscow 200, U.S.S.R.



# புதிய கார் விலை இன்றும் உயர்வு

- ரஸ்தா விபத்துக்கள் சகஜம்
  வருமுன் காப்பது நலம்
- கார் உறுப்புக்களை சீர்கெடாமல்
  உன்னிப்பது உயர்வு
- விபத்தை விலக்கலாம் - வழிகாண்பது எளிது

**தி மதருஸ் மோட்டார் இன்ஷ்யூரன்ஸ் கோ., லிட்.**
(டி. வி. எஸ். ஸ்தாபனம்)
**சென்னை**

பண்பாட்டால் விபத்தை விலக்கி பயனடையலாம்

MMI/106




உணவுக்கு உதவியாயிருப்பது ஊறுகாய். அதுபோல, ஒரு சினிமாப் படத்தில் கதாநாயகன், கதாநாயகிக்கு உதவியாயிருப்பவர்கள் மற்ற உப பாத்திரங்கள்.

உணவு ருசி குறைந்து போனால் ஊறுகாயின் தன்மை உயர்ந்து விடும். அது போலக் கதாநாயகன், கதாநாயகி இவர்கள் சரியானபடி ஒரு படத்தில் அமையாவிட்டால், உப பாத்திரங்களின் தன்மை உயர்ந்து விடும்.

"புதையல்" படத்தில் எல்லோரையும் விடப் பிரமாதமாக நடித்திருப்பவர் சந்திரபாபுதான். ஆனால் அவர் இந்தப் படத்தின் கதாநாயகன் அல்ல ; ஒரு உப பாத்திரம்.

தபால்காரன் துரையைப் பரிமளா காதலிக்கிறாள் ; துரையும் பதிலுக்கு அவளைக் காதலிக்கிறான். ஆனால் அவனுக்கு முன்பே துகாராம் பரிமளாவிடம் உள்ளத்தைப் பறி கொடுத்துப் பைத்தியம் பிடிக்கும் நிலையில் இருக்கிறான்.

இக் காதலர்களுக்குத் தன் பேராசையினால், புதையல் பைத்தியத்தினால், பல கெடுதல்களை விளைவிக்கிறான் வெள்ளியம்பலம். பைத்தியத்துக்குத் தூபம் போட்டது போல் ஆயிற்று, பரிமளாவும் துரையும் 'தங்கம்' புதைக்கப்பட்டிருக்கும் இடத்தைப் பற்றிப்பேசிக்கொண்டது. (தங்கம் துரையின் தங்கை. கோரமான விதியின் விபரீதத்தினால் மாண்டவள்.)

"போதும் என்ற மனமே பொன் செய்யும் மருந்து" என்னும் பழமொழியைப் புதைபொருளாகக் கொண்டது "புதையல்."

வெள்ளியம்பலமாக நடிக்கும் டி. எஸ். பாலையா இந்தப் படத்தின் ஜீவநாடியாக விளங்குகிறார். பாத்திரத்தை உணர்ந்து உள்ளபடி நடிக்கும் உயர்ந்த நடிகர் பாலையா.

தபால்காரத் துரையாக, சிவாஜி கணேசன் வருகிறார். பரிமளாவுக்கு வந்த காதல் கடிதத்தை அவளுக்கு பாவத்தோடு படித்துக் காட்டிய போது அவர் நடிப்பு நன்றாயிருக்கிறது. மற்றக் கட்டங்களில் அவர் நடிப்பு சுமார்தான். பரிமளாவுடன் கடற்கரை மணலில் துள்ளி விளையாடி ஓடும் காட்சி வெறும் கேலிக் கூத்தாயிருக்கிறது. 'அதிகப்படி' யென்றும் சொல்லத் தோன்றுகிறது. வெள்ளியம்பலத்தின் ஆட்களுடன் சிவாஜி கணேசன் தனியாளாக நின்று சண்டைபிடிக்கையில் பந்து மாதிரி அவர்களைப் பிடித்துத் தூக்கி எறிவது நம்பத் தகுந்ததாயில்லை.

இந்தப் படத்தில் பத்மினி பல வேஷங்களில் தோன்றுகிறார். முதலில், நெசவுத் தொழில் நடக்கும் இடத்தில் நடனமாடத் தொடங்கி அப்படியே நடனக் குழுவினருடன் சேர்ந்து கொண்டு ஆடுகிறார். ஆனால் ஏனோ மனத்தில் அது பதியவில்லை. குறி சொல்லும் சிறுவனாக நடிக்கும்போது வேஷப் பொருத்தம் மிக நன்றாயிருக்கிறது.

பரிமளாவின் தந்தை பலமுறை அரிவாளுடன் சீறிப் பாய்ந்து மகளை வெட்ட வருகிறான், துரையை அவள் காதலித்தது தவறு என்ற காரணத்தினால். அவ்வளவு சீற்றத்துக்குக் காரணம் ரொம்ப அற்பமானது. போகட்டும். துரை தன் தங்கை மகன் என்று தெரிந்ததும் அவன் சீற்றம் சட்டென்று தணிகிறதே அது அசட்டுத்தனமாயிருக்கிறது.

வெள்ளியம்பலத்தின் இளம் மனைவியாக நடிக்கும் எம். என். ராஜம் படத்தின் முதல் பாதியில் தலைகாட்டி விட்டு மறு பாதியிலும் திரைக்கதையில் தலையிடுகிறார். ஆவேசப் பேச்சு பேசவும் விழிகளை உருட்டவும் அவருக்குச் சிறிது சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது.

துகாராமாக நடிக்கும் சந்திரபாபு அசல் காதல் பைத்தியமாகவே நடிக்கிறார். அப்பப்பா! அவரது சுழலும் விழிகளும், துவளும் உடலும், நெளியும் வார்த்தைகளும், குமுறும் இதயமும், பொருமும் பெருமூச்சும் நம்மைத் திணற வைக்கின்றன. பாவ பூர்வமான நடிப்பு.

இப் படத்தில் நல்ல கட்டங்கள் : காதல் பைத்தியம் துகாராமுக்கு வந்த கடிதங்களை அவன் காரியதரிசி படித்துக் காட்டியபோது. துகாராம் — பரிமளாவின் பதிலை எதிர் பார்த்துத் துடிப்பது. 'பரிமளா' என்று அவர் வாசிக்கக் கேட்ட அளவிலேயே துள்ளி திமிர்த்தது. பிறகு அது பரிமளா சியக்காய்க் கம்

# தெரியுமா உங்களுக்கு?

உலக மக்களின் வாழ்க்கைக்கும், தொழில் துறைகள் இயங்குவதற்கும் பெட்ரோல் எண்ணெய், நிலக்கரி, எரிவாயு இம் மூன்றும் அத்தியாவசியமானவையாக இருக்கின்றன. இயற்கை நமக்கு அளிக்கும் கொடுக்கும் இந்த மூன்று சாதனங்கள் கிடைப்பது நின்று விட்டால் என்ன செய்வது? இந்தக் கவலை இப்போதே பல நாடுகளையும் வாட்டத் தொடங்கி யிருக்கிறது. இன்று ஐரோப்பாவில் உள்ள சில நாடுகளில் நிலக்கரி பற்றாக் குறையாகி விட்டது. பூமியிலிருந்து கிடைக்கும் எண்ணெய்க் கிணறுகளும் நாளுக்கு நாள் வற்றி வருகின்றன. பல கிணறுகள் அடியோடு வற்றி விட்டதாகவும் கூறுகிறார்கள். மேற்படி சாதனங்களின் உற்பத்தி முற்றிலும் நிற்கும் வரையில் காத்திராமல், இப்போதே ஏதாவது தகுந்த முறைகளைக் கைக்கொள்ள வேண்டும் என்ற முடிவுக்கு விஞ்ஞான ஆராய்ச்சி நிபுணர்கள் வந்திருக்கிறார்கள். அந்தச் சாதனங்களுக்குப் பதிலாக, அதாவது ஆக்க வேலைகளுக்கு அணுசக்தியை உபயோகித்துக் கொள்ளும் முயற்சிகள் பல இடங்களிலும் நடந்து வருகின்றன. ஆனால் அதிலும் கஷ்டம் இருக்கிறது. அணுசக்தி உற்பத்திச் சாலையில் விழும் கழிவுப் பொருள்கள் பேராபத்தை விளைவிக்கும் என்று சில விஞ்ஞானிகள் எச்சரித்து வருகிறார்கள். தவிர, அணுசக்தி உற்பத்திக்கு இன்றியமையாத 'யுரேனியம்' பூமியிலிருந்து எக்காலத்தும் கிடைத்து வரும் என்று சொல்வதற்கில்லை. எனவே, சந்தேகத்துக்கும் பீதிக்கும் இடமான அணுசக்தியை நம்பிக் கொண்டிருப்பதால் நிரந்தரமான பலன் ஏற்படாது.

கஷ்டமோ, நஷ்டமோ, ஆபத்தோ எதுவுமின்றிக் கிடைக்கும் சூரிய சக்தியை உபயோகித்துக் கொண்டால், லட்சக்கணக்கான ஆண்டுகளுக்குக் கவலையில்லை! சூரியன் என்றென்றும் இருந்து வரும் அல்லவா? எண்ணெய், எரிவாயு, நிலக்கரி அறவே கிடைக்காத சில பிரதேசங்களில் இப்போதே சூரிய சக்தியை உபயோகிக்கத் தொடங்கி யிருக்கிறார்கள். அந்தப் பிரதேசங்களில் நீர்ப்பாசனத்துக்கும் இயந்திர வகைகளை இயக்குவதற்கும் சூரிய சக்தியையே பயன்படுத்தி வருகிறார்கள். கண்ணாடிகள் மூலம் சூரிய உஷ்ணத்தைப் பன்மடங்கு அதிகப்படுத்தி, அந்தச் சக்தியை உபயோகிக்கும் வழியைக் கண்டு பிடித்திருக்கிறார்கள். இந்தியாவில் சூரிய உஷ்ணத்தைக் கொண்டு இயங்கும் அடுப்புகள் உற்பத்தியாகி யுள்ளன. ஒரு சிறிய வீட்டின் கூரையில் ஒரு நாளைக்கு விழும் சூரிய உஷ்ணம் அல்லது வெய்யில் சுமார் இருநூறு பவுண்டு நிலக்கரிக்கோ அல்லது எட்டு காலன் பெட்ரோலுக்கோ சமம் என்று கணக்கிட் டிருக்கிறார்கள். அதாவது மேற்படி உஷ்ணத்தைக் கொண்டு அவ்வளவு நிலக்கரி அல்லது பெட்ரோலினால் ஏற்படக்கூடிய பலனை அடையலாம். சூரிய உஷ்ணத்தை மின்சார சக்தியாகவும் மாற்ற வழி இருக்கிறது. மனிதர்களும் மற்ற ஜீவராசிகளும் தாவரங்களும் வாழ்வதற்கு சூரிய உஷ்ணம் இன்றியமையாதது. அப்படிப்பட்ட சூரிய உஷ்ணத்தினால் எல்லையற்ற நன்மைகள் ஏற்படுவதற்கு விஞ்ஞானம் வழிகாட்டி யிருக்கிறது என்று நிபுணர்கள் கூறுகின்றனர். சூரிய சக்தியை ஏராளமாகத் தேக்கி வைத்துத் தேவைக்குத் தகுந்தவாறு உபயோகிக்கும் முறைகளையும் கண்டு பிடித்து வருகிறார்கள். எனவே, எண்ணெய், நிலக்கரியைப் போல சூரிய உஷ்ணத்தை மாத்திரமே அடிப்படையாகக் கொண்டு உலக மக்களின் வாழ்க்கை இயங்கும் காலம் அதிக தூரத்தில் இல்லை!



பெனியிலிருந்து வந்த கடிதம் என்று அறிந்ததும் அதிர்ச்சியுற்று அயர்ந்தது—.

"உனக்காக, எல்லாம் உனக்காக—இந்த உடலும் உயிரும் ஒட்டியிருப்பதும் உனக்காக"

என்ற பாடலை பாவத்துடன் பாடுவது,— எல்லாம் பிரமாதம். மாயாண்டிக் கிழவனாக வரும் எம். கே. ராதா குடுகுடுப்பை அடித்து நன்றாய் நடிக்கிறார். தபால்காரத் துரை கடிதத்தைப் படித்துக் காட்டியபோது பத்மினியின் விழிகள் விரிந்தும், வளைந்தும், குனிந்தும் தெளியும் காட்சி கனஜோர்.

கமால் பிரதர்ஸின் தயாரிப்பான "புதையல்" படத்தின் கதை, வசனம் தீட்டியவர் திரு மு. கருணாநிதி எம். எல். ஏ. நல்ல கருத்தை அடிப்படையாகக் கொண்ட கதையைத் தீட்டியதற்கு அவரைப் பாராட்ட வேண்டும். அடுக்குமொழி வசனங்களை விடுத்து, அழகான கருத்துள்ள வசனத்தை அமைத்திருக்கிறார். சில இடங்களில் வசனம் தடம் புரண்டு விடுகிறது.

பொதுவாக எல்லாத் தமிழ்ப் படங்களிலும் நேர்ந்து வரும் குறைதான் "புதையல்" படத்திலும் புதைந்திருக்கிறது. துணிந்து பல இடங்களில் குறைத்திருந்தால் இந்தக் குறைக்கு இடம் இராது. படத்தில் சுவையை ஊட்டவும், ரஸிகர்களின் ஆவலை நீட்டவும் படத்தைப் பொதுவாகக் குறைப்பதுதான் நல்லது என்ற எண்ணம் தமிழ்ப் படாதிபதிகளின் உள்ளங்களில் தலைகாட்டும் நாள் என்று வருமோ?

## மலர்களை நாடும்
## தேனீக்கள் போல்



குழந்தைகள் வண்ண மலர்களை விரும்புகிறார்கள். ஆனால் அவர்களுடைய முதல் ஆசை பார்லேயின் தின் பண்டங்கள் மற்றும் மிட்டாய்களின் மீது தான். அவைகளை நாடி எவ்வளவு ஆத்திரத்துடன் அவர்கள் போகிறார்கள் என்பதை நீங்கள் பார்க்கவேண்டுமே! ருசி வாய்ந்ததும், ஆரோக்ய மளிப்பதுமான இவைகள், புதுமை கெடாதபடி சுகாதார முறையில் தனித்தனியாகச் சுற்றப்பட்டுள்ளன.



*பார்லேயின்*

# மிட்டாய்கள் மற்றும் டாபிகள்

இனிய கனிசுவை வாய்ந்தவை



S.TA

# மாதர்குல திலகங்கள்



இன்றைக்கு ஏறக்குறைய நாற்பத்தெட்டு ஆண்டுகளுக்கு முன், 1909-ம் ஆண்டு தேசம் முழுவதும் ஒரு பெரிய வதந்தி கிளம்பிப் பாரத மக்களை நடுநடுங்க வைத்தது. "அந்த வருஷம் ஜனவரி மாதம் முடிவுக்குள் சமுத்திர ஜலம் பொங்கிப் பாரத தேசம் கூண்டோடு கைலாசமாகச் சமுத்திரத்திலே மூழ்கிப் போகப் போகிறது!" என்று சிலர் ஜோசியம் வெளியிட்டனர். பாமர மக்கள் என்றல்லாமல் படித்தவர்களும் இந்த வதந்தியை உண்மை என்றெண்ணி, பிரளயத்துக்கு முன்னால், பார்க்க வேண்டிய உறவினர்களைப் பார்த்துவிடக் கிளம்பினார்கள்.

பாரத தேசம் இவ்வாறு ஒரு பெரும் பீதியில் கொந்தளித்ததுதான் காரணமோ என்னவோ, சிலருக்கு அசாத்தியமான துணிச்சலையும் உண்டாக்கிற்று. அப்படித் துணிச்சலுடன் அந்த வருடம் அதே மாதத்தில் "யார் என்னைத் தடுத்தாலும் கேட்கமாட்டேன். ஹரி கதா காலட்சேபம் செய்யத்தான் செய்வேன்! வரப்போகும் பிரளயத்தில் எப்படியும் நானும் மூழ்கிப் போக வேண்டியதுதானே? ஹரி கதை செய்துவிட்டு மூழ்கிப் போவதே மேல்!" என்ற வைராக்கிய உணர்ச்சியுடன் கிளம்பியவர்தான் ஸ்ரீமதி சரசுவதிபாய் அவர்கள். சரசுவதி பாய் அப்போது சிறுமி. ஹிந்துஸ்தானி சங்கீதத்தில் பயிற்சி பெற்று, கர்நாடக சங்கீதத்திலும் முன்னணிக்கு வந்து கொண்டிருந்தார். காலஞ் சென்ற ஜஸ்டிஸ் ஸர் ஸி. சங்கரன் நாயர் அவர்களுடைய மனைவியாரின் நிர்வாகத்தில் மாதர் சங்கம் ஒன்று இயங்கி வந்தது. அந்தச் சங்கத்துக்கு அடிக்கடி செல்லும் வாய்ப்பு சிறுமி சரசுவதி பாய்க்குக் கிடைத்தது. வெறும் பாட்டுக்களைப் பாடாமல் புராண இதிகாசங்களிலிருந்து ஒரு கதையைச் சொல்லி இடை இடையே பாட வேண்டும் என்ற ஆவல் சரசுவதிபாய்க்கு ஏற்பட்டது. அவ்வாறே "கருட கர்வ பங்கம்" என்ற கதையை அந்தச் சங்கத்தில் சங்கீத உபன்யாசமாக ஒரு முறை நிகழ்த்தினார். அந்த முதலாவது காலட்சேபத்தின் சிறப்பு பற்றிய செய்தி விரைவில் எங்கும் பரவிற்று. மாதர் சங்கத்தில் நடந்த சிறப்பு ஆனதால் செய்தி துரிதமாகப் பரவியதில் ஆச்சரியம் என்ன?

"ஒரு பெண்மணி சங்கீத உபன்யாசம் செய்கிறாள்!" என்ற செய்தி கேட்டு, பாகவதர்களும், வித்வான்களும் திடுக்கிட்டனர்.

சரசுவதி பாயின் பெற்றோரை அணுகி, "ஒரு பெண்மணி கையில் சப்ளாக் கட்டைகளை வைத்துக்கொண்டு கதாகாலட்சேபம் செய்வதென்றால் அது சரியல்ல. வேண்டாம்...இந்த வழக்கமல்லாத வழக்கம்!" என்று ஆட்சேபம் தெரிவித்தனர். வேறு சிலர், "ஏன் பிரளயம் வராது? இப்படி ஒரு பெண் காலட்சேபம் செய்யக் கிளம்பினால் நன்றாகத்தான் வரும்!" என்றும் பேசிக் கொண்டார்கள். ஆனால் ஸ்ரீமதி சரஸ்வதி பாய் அவர்களோ "நான் ஹரியின் ஆத்மார்த்திக பக்தை. அவருடைய புண்ணிய சரித்திரங்களை உபன்யாசம் செய்யத்தான் செய்வேன். எல்லாமே மூழ்கப் போகிறது. இதனால் நானும் மூழ்கினாலும் சரி!" என்று உறுதி கொண்டு, சென்னை தங்கசாலைத் தெருவில் பகவத் கானாம்ருத வர்ஷணி சபையில் அதே பிரளய வருஷம் பிப்ரவரி மாதம் "கருட கர்வபங்கம்" என்ற விஷ்ணு கதையைச் சங்கீத உபன்யாசமாக பிரவசனம் செய்து ரூ. 640 சன்மானமும் பெற்றார். அதன் பிறகு மெள்ள மெள்ள அவருக்குத் தோன்றிய எதிர்ப்புகளும் மறையத் தொடங்கின. யாரும் பிரளயத்தில் மூழ்கவும் இல்லை. ஒருவேளை சரசுவதி பாய் அவர்களின் ஹரிகதைகளைப் பாரத மக்கள் கேட்கவேண்டும், கேட்டுப் பயனடைய வேண்டும் என்பதற்காகத்தான், கடவுளருளால் பிரளயமும் ஏற்படவில்லை போலும்!

காயனபடு, கீர்த்தனபடு, சங்கீத சம்ஸ்கிருத வித்யாரத்ன, ஹரி கதா பிரசங்கமார்க்க தர்சினி, கீர்த்தன காண்டீரவ, சங்கீத மானிஷினி, சங்கீதரத்ன, சம்ஸ்கிருத பாஷா விசாரத, அபிநவ சரஸ்வதி, ஹரிகதா கலாநிதி, சங்கீத சித்தாமணி என்ற பட்டங்கள் பெற்ற பெருமை தரும் மாதர் திலகம் ஸ்ரீமதி சரசுவதிபாய் அவர்கள் தமது 63-வது வயதிலும், அன்று போல் இன்றும் அற்புதமாக ஹரிகதாகாலட்சேபங்கள் செய்து வருகிறார். லோகமான்ய திலகர் கையால் விருது பெற்ற மாதர் குல திலகமே ஸ்ரீமதி சரசுவதி பாய். உபன்யாசங்கள் மூலம், சங்கீதத்துக்கும், பக்தி மார்க்கத்துக்கும் அவர் செய்து வரும் பணி இன்னும் நெடுங்காலம் நீடித்துக் கிடைத்து வரப் பிரார்த்திக்கிறோம்.




# கார் டயர் தேய்ந்து வழுக்கையாவது இயற்கையே



மேலும் மேலும் தேய்ந்தால் அபாயம். புதிய டயர் வாங்கும் செலவும் அதிகம். சுமார் எட்டு அல்லது பத்தாயிரம் மைல் ஓடித் தேய்ந்த டயர்களை சுந்தரம் (T V S) புதுப்பித்து உருவாக்குவார்கள். செலவு படிக்குப்பாதி குறைவு. புது டயர் வாங்கும் அதிகச் செலவை தவிர்க்கலாம். விலைவாசி உயர்ந்த இக்காலத்தில் சிக்கன முறையே சிறந்த முறை. பதினைந்து வருடங்களில் கோடிக்கோடி மைல் உழைப்பில் உருவாகிய

TVSZ 94 TM



## சுந்தரம் TVS புதுப்பிக்கும் முறை

**சிக்கனம் பெரிது, உழைப்பும் உயர்ந்தது**

சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிட்.
(டி. வி. எஸ். ஸ்தாபனம்)
புதுக்கோட்டை சென்னை



அத்தியாயம் 22

## சந்தகரின் குழப்பம்

காவிரிப்பூம் பட்டினத்தில் வைகை மாலை இருந்த வீதியில் ஒரு மனிதர் ஒவ்வொரு மாளிகையையும் பார்த்தவண்ணமே வந்து வைகைமாலையின் வீட்டு வாசலில் தயங்கி நின்றார். துல்லியமான வெள்ளை வஸ்திரம்; நெற்றியில் பளீரென்று துலங்கும் விபூதிப் பட்டை; அதனிடையே அகன்ற குங்குமப் பொட்டு; ஏதோ போதையில் ஆழ்ந்தவை போன்ற கண்கள்; குட்டையான தாடி; திரி திரியாகத் தோளில் விழுந்திருக்கும் கேசத் தோடுகூடிய பரட்டைத்தலை; இவைதான் அந்த மனிதரின் அங்க லட்சணங்கள். அவருடைய முகமும் கண்களும் ஒருபுறம் அவரை முரட்டு மனிதராகவும், இன்னொரு புறம் அடக்கமான புத்திசாலி போன்றும் எடுத்துக் காட்டின. பொதுவாகப் பார்க்கப் போனால் அவரைப் பார்ப்பவர்களில் ஒரு சாரார் அவரிடம் மதிப்பும் மரியாதையும் வைக்கலாம், அல்லது வெறுப்பும் பயமும் கொள்ளலாம் என்று நினை[illegible] வண்ணம் தீர்[illegible] உருவம். அந்த வீட்டு வா[illegible] நேரம் நின்ற அந்த மனித[illegible] ஏதோ தீர்மானத்துக்கு வந்தவர் [illegible] அந்த வீட்டுக்குள் சென்று இடைகழியில் நின்றுகொண்டே 'அம்மா' என்று குரல் கொடுத்தார். உள்ளே இருந்து 'யார்?' என்று கேட்டுக் கொண்டே சுதமதி வெளியே வந்தாள்.

அந்த மனிதர் சுதமதியைப் பார்த்ததும் தயங்கியபடியே, "இதுதானே வைகைமாலையின் வீடு...." என்று கேட்டார்.

"ஆம்" என்றாள் சுதமதி.

அவர் சிறிதுதயக்கத்தோடு, "தாங்கள் தான் வைகைமாலையோ?" என்றார்.

"இல்லை-அவள் என் தங்கை-தாங்கள் யாரோ?" என்று வினவினாள்.

"நான் குடந்தைக்குச் சமீபமாக உள்ள கோடீச்சுவரத்தைச் சேர்ந்தவன்...." என்றார்.

"கோடீச்சுவரத்தைச் சேர்ந்தவரா? அப்படியென்றால் தங்களுக்கு அவ்வூரிலுள்ள சோதிடர் சந்தகரைத் தெரிந்திருக்க வேண்டுமே?" என்றாள்.

"அந்தச் சந்தகன்தான் நான்" என்றார் அந்த மனிதர் அமைதியாக.

"ரொம்ப சந்தோஷம். தங்களைப் பற்றி நிறையக் கேள்விப் பட்டிருக்கிறேன். தங்களை நெடுநாட்களாகச் சந்திக்க வேண்டுமென்ற ஆவல் எனக்கு. தாங்கள் பூதுகருக்கு நெருங்கிய நண்பரல்லவா?" என்றாள் சுதமதி.





''நெருங்கிய நண்பர்தான். அவரைப் பார்க்கத்தான் இங்கு வந்தேன்.......'' என்றார் அவர்.

''அவர் இங்கு இல்லை. நான்கு நாட்களுக்கு முன்புதான் எங்கோ போனார். தங்களைப் பார்த்தால் மிகவும் தெய்வ பக்தியுள்ளவர் போல் தோன்றுகிறது. தங்களுடைய நெருங்கிய நண்பரான அவர் ஏன் இப்படி இருக்கிறாரோ, தெரியவில்லை!'' என்றாள் சுதமதி ஒரு பெருமூச்சு விட்டுக் கொண்டே.

''அவருடைய கொள்கையெல்லாம் எனக்கும்தான் பிடிக்கவில்லை. ஏனோ அந்த மனிதரிடம் எனக்கு ஒரு பற்றுதல். அவர் எங்கே போயிருக்கிறார் என்று உங்களுக்குத் தெரியுமா?'' என்றார்.

''அவர் எங்கே போயிருக்கிறாரோ, எனக்குத் தெரியாது. ஒரு வேளை வைகை மாலையிடம் சொல்லி விட்டுப் போயிருக்கலாம்'' என்று அவள் சொல்லிவிட்டு உள்ளே செல்லத் திரும்பும் போது வைகைமாலை உள்ளேயிருந்து வந்து கொண்டிருந்தாள்.

வைகை மாலையைக் கண்டதும் சுதமதி, ''உன்னைக் கூப்பிடலாமென்றுதான் நினைத்தேன், நீயே வந்து விட்டாய். இவர் கோமுச்சுவரத்திலிருந்து வந்திருக்கிறார். அடிக்கடி அவர்தான் சொல்லியிருக்கிறாரே,- சோதிடர் சந்தகர் என்று, - அவர் இவர்தான். பூதுகனைத் தேடிக் கொண்டுதான் வந்திருக்கிறார். அவர் எங்கே போயிருக்கிறார் என்று உனக்குத் தெரியுமா?'' என்றான்.



வைகைமாலை மிகப் பணிவோடு சந்தகரை வணங்கி விட்டு, "அவர் எங்கே போயிருக்கிறார் என்று எனக்குத் தெரியாது. எங்கோ வெளியூர் செல்ல வேண்டிய அவசர வேலை இருப்பதாகச் சொல்லிச் சென்றார்" என்றாள்.

"எந்த ஊருக்குப் போயிருக்கிறாரென்பது தெரியாது போலிருக்கிறது. அந்த மனிதர்தான் போகிற இடத்தைச் சொல்லாமலேயே மனத்துக்குத் திகிலையும் குழப்பத்தையும் ஏற்படுத்தி விடுகிறார். பத்து நாட்களுக்கு முன் எங்கோ வெளியூர் சென்று விட்டு வருவதாக என்னிடம் சொல்லி விட்டுக் கிளம்பியவர்தான். இரண்டு நாட்களுக்கு முன் தான் அவர் இங்கு காவிரிப்பூம் பட்டினத்துக்கு வந்திருக்கிறார் என்று எனக்குத் தகவல் கிடைத்தது. நான் இங்கே வந்து பார்க்கும்போது இங்கும் அந்த மனிதர் இல்லையென்றால்...."

"நீங்கள் தான் பெரிய சோதிடராயிற்றே. அந்த மனிதர் எங்கே இருப்பார் என்பதை உங்கள் சோதிட சாஸ்திரம் சொல்லி விடாதா?"

**அருள் வாக்கு**

நாம் ஒருவரே ஆனாலும் நண்பனைக் கண்டு பிரியம் அடைகிறோம். அப்போது ஒரு மாதிரியாகிறோம். ஒருவன் தப்பு செய்யும்போது கோபம் உண்டாகிறது. அது வேறுமாதிரி. நம்முடைய குழந்தைகளுக்கு உபாதி உண்டாகும் போது கருணை உண்டாகிறது. அது வேறு மாதிரி அல்லவா? இதைப் போலத்தான் ஒரே மூர்த்தி மூன்று வேலை செய்ய மூன்று குணங்களைக் கொண்டு மும்மூர்த்தியானது.

**ஸ்ரீ சங்கராச்சாரியார், காமகோடி பீடம்.**

''சோதிடர்கள் என்றால் வாழ்க்கையில் எல்லாவற்றையுமே சோதிடத்தின் மூலமாக அறிந்து கொண்டு விடுவார்கள் என்று நினைப்பது பிசகு. அப்படியெல்லாவற்றையுமே தெரிந்து கொண்டு விடுவதானால் அவன் மனிதப் பிறவியே இல்லை; தெய்வ அம்சம்தான். நான் சோதிடன் தான். ஆனால் சொந்த விஷயங்களுக்காகச்சோதிடம் பார்ப்பதில்லை. அதிலும் பௌத்தர்களுக்கு இவ்விஷயங்களிலெல்லாம் நம்பிக்கையில்லை. நம்பிக்கை இல்லாத ஒரு மனிதர் விஷயமாக நான் சோதிடக் கலையைப் பயன்படுத்துவதும் இல்லை'' என்றார் சந்தகர்.

''அதுதான் சரியான வழி'' என்றாள் சுதமதி. ''ஊருக்கெல்லாம் வைத்தியம் செய்யும் வைத்தியன் தன்னுடல் நலத்துக்காகத் தன் மருந்தையே உபயோகப் படுத்துவதில்லை. அதிருக்கட்டும்; தங்களுக்குச் சிறிது நேரம் இங்கே இருந்து பேச அவகாசமுண்டா?'' என்று கேட்டாள்.

''ஏன்?''

''உங்களைப் பற்றிக் கேள்விப்பட்டதிலிருந்து தங்களிடம் சில விஷயங்களைக் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டுமென்று ஆவல்'' என்றாள் சுதமதி.

''சோதிடம் சம்பந்தமாகவா?'' என்றார் சந்தகர்.

''ஆமாம்'' என்றாள் சுதமதி.

உடனே சந்தகர் தம் கக்கில் செருகியிருந்த ஒரு சிறு துணிப் பையை எடுத்துக் கொண்டே கீழே தரையில் அமர்ந்து துணிப் பையைப் பிரித்து அதிலிருந்த சோழிகளைக் கீழே கொட்டினார்.

சுதமதி அவருக்கு எதிரே உட்கார்ந்து கொண்டு, ''முக்கியமாக உங்களை நான் கேட்க நினைப்பது....'' என்று சொல்லிக்கொண்டு வரும்போதே சந்தகர் இடைமறித்து, ''அதையெல்லாம் நீங்கள் சொல்ல வேண்டாம். நீங்கள் என்ன நினைக்கிறீர்கள், என்ன உங்களுக்கு நடக்க வேண்டும், அதற்கென்ன பரிகாரம் செய்யவேண்டுமென்பதெல்லாம் நானே சொல்லுகிறேன், பாருங்கள்'' என்று சொல்லிப் பையிலிருந்து கொட்டிய சோழிகளைக் கைகொண்ட வரையில் எடுத்துக் குலுக்கி வைத்து, நிமிர்ந்திருக்கும் சோழிகளை ஒருபுறமாகவும், கவிழ்ந்திருக்கும் சோழிகளை ஒருபுறமாகவும் பிரித்து எண்ணி வைத்தார். பிறகு, ''நீங்கள் நினைப்பது வெளியூர் சென்றிருக்கும் ஒரு மனிதரைப் பற்றி. அதுவும் கடல்கடந்து சென்ற ஒரு மனிதரைப் பற்றி நினைத்திருக்கிறீர்கள். அவர் எங்கே இருக்கிறார், எப்பொழுது வருவார் என்ற கவலைதான் உங்களுக்கு. இல்லையா?'' என்றார்.

சுதமதி மிகவும் ஆர்வமும் சந்தோஷமும் கொண்டவளாய், ''ஆமாம். அந்தக் கவலைதான் எனக்கு. அவர் சிங்களம் சென்று மூன்று வருஷங்களாகி விட்டன. குதிரை வியாபாரம் செய்பவர். வியாபாரத்துக்காக முந்நூறு குதிரைகள் கொண்டு சென்றார். சீக்கிரம் திரும்பி வருவதாகத்தான் போனார். வருடங்கள் தான் ஓடிக் கொண்டிருக்கின்றன. அவரை எதிர்பார்த்து எதிர்பார்த்து மனம் ஒடிந்து விட்டது. வாழ்க்கையே வெறுத்து விட்டது. சிங்களத்திலிருந்து அடிக்கடி வரும் முத்து வியாபாரியை நான் விசாரித்ததில் அவர் கொண்டு சென்ற குதிரைகள் எல்லாவற்றையும் அங்குள்ள சிங்கள அரசரிடமே விற்று விட்டுப் பெருத்த செல்வந்தரானதோடு அந்த அரசருக்கே உற்ற நண்பராகிப் பௌத்த சமயத்திலும் சேர்ந்துவிட்டார் என்று சொல்லுகிறார்கள். அவர் தம்முடைய செல்வத்தினால் சிங்களத் தீவில் அனுராதபுரத்துக்குச் சமீபமாக உள்ள மகாமேகத் தோட்டத்தில் புத்தருக்கு ஆலயம் ஒன்று கட்டியிருப்பதாகவும் சொன்னார். அவர் புத்த சமயத்தில் சேர்ந்தது பற்றி எனக்குக் கவலை இல்லை. ஆனால் என்னை இப்படி அடியோடு மறந்திருக்க வேண்டாம்; நான் கூட அந்த முத்து வியாபாரியின் மூலமாக அவருக்கு ஒரு ஓலை எழுதி அனுப்பினேன். அதற்கும் பதில் இல்லை. நீங்கள் எனக்குச் சொல்லவேண்டியதெல்லாம், அவர் திரும்பி வருவாரா? எப்பொழுது? அல்லது அவர் திரும்பி வரவே மாட்டாரா? எனக்குள்ள சிறிது நம்பிக்கையையும் விட்டு விடலாமா என்பது தான்'' என்றாள்.

சந்தகர் சிரித்துக் கொண்டே, ''தாங்கள் பேச வேண்டாம், எல்லாவற்றையும் நானே சொல்லுகிறேன் என்று சொன்னேனே? விவரங்களையெல்லாம் நீங்களே சொல்லி விட்டால் பிறகு நான் என்ன சோதிடன்? போகட்டும். ஏதோ

தெரியாமல் சொல்லி விட்டீர்கள். இதோ அவரைப் பற்றி மற்ற விவரங்களைச் சொல்லுகிறேன்'' என்று சொல்லி மறுபடியும் சோழியைக் குவித்து அதிலிருந்து இரண்டு பிடி சோழியை எடுத்துக் குலுக்கித் தனித் தனியாக வைத்துப் பிரித்து எண்ணினார். பிறகு, ''அந்த மனிதர் சௌக்கியமாகத்தான் இருக்கிறார். அவர் புத்தமதத்தில் சேர்ந்து விட்டாரே தவிர இன்னும் துறவியாகி விடவில்லை. துறவியாகலாமா என்று யோசித்துக் கொண்டிருக்கிறார். அவர் துறவியாக முடியாது. ஏனென்றால் இதோ பாருங்கள். இதோ இந்தச் சோழியை எண்ணுங்கள். ஏழு. அதாவது சப்தம கேந்திரம். ஒன்று—சூரியன்; இரண்டு—சந்திரன்; மூன்று—செவ்வாய்; நான்கு—புதன்; ஐந்து—குரு; ஆறு—சுக்கிரன். சுக்கிரன் பலமாக நிற்கிறான். இப்படி சுக்கிரன் பலமாக நின்றால் அவன் காதல் கொண்ட பெண்ணை மறப்பது துர்லபம். ஆமாம், துறவி உடைக்குள் புகுந்தாலும் அந்த நெஞ்சு மங்கையை மறந்து விடாது..''



பம்பாய் மாதுங்கா நகரம் திருமணக் கூடாரத்தில் மூழ்கிக் களித்தது. தென்னிந்திய கல்வி ஸ்தாபனத்தின் நிர்வாக சபை அங்கத்தினரும், விஜேடைப். மெஷினரி ஸ்தாபனத்தின் மானேஜருமான திரு வி. ஜி. ராமன் அவர்கள் அருமைப் புதல்வி சௌபாக்கியவதி லலிதாவுக்கும் திருஜி. ராமநாதய்யரின் புதல்வர் திரு ஆர். கணேசன் பி. ஏ. அவர்களுக்கும் மே மாதம் 6ந்தேதி வெகு விமரிசையாகத் திருமணம் நடந்தேறியது. பம்பாய் நகரத் தொழில் அதிபர்களும், பிரமுகர்களும் விஜயம் செய்து மணமக்களை ஆசிர்வதித்தனர்.

''மங்கையை மறக்காது என்றால்! என்னைத்தானே, அல்லது வேறு யாரையாவது..?'' என்று சுதமதி மிகுந்த கவலையோடு கேட்டாள்.

''வேறு யாராவதா? வேறு யார் இருக்கப் போகிறார்கள்? இதோ அதையும் பார்த்துச் சொல்கிறேன்'' என்று சொல்லி மறுபடியும் சோழியை யள்ளி வைத்து எண்ணிப் பார்த்து விட்டு, ''கவலையே பட வேண்டாம். அது நீங்களேதான். கொஞ்ச நாட்களில் அந்த மனிதர் தாமே திரும்புவார் பாருங்கள். எல்லாம் பராசக்தியின் அருள் இருக்கிறது'' என்றார் சந்தகர் ஒரே முடிவாக.

சுதமதி ஆறுதல் அடைந்தவளாக, ''சிறிது நாட்களில் என்றால் எத்தனை நாட்களில்?'' என்று கேட்டாள்.

சந்தகர் சிறிது அலுப்பு அடைந்தவர் போல், ''எவ்வளவு நாட்களா? அதையும் பார்த்துச் சொல்லுகிறேன்'' என்று கூறி, சோழியைக் குலுக்கிப் போட்டு எண்ணினார். ''மூன்று மாதத்துக்குள் திரும்பிவிட வேண்டிய அறிகுறிகள் தென்படும். ஆனால் ஐந்து மாதத்துக்குள் திரும்பி வந்து விடுவார்'' என்றார்.

சுதமதி மன நிம்மதி அடைந்தவளாக, ''அப்படியாவது உங்கள் வாக்குப் பலிக்கட்டும்'' என்றாள்.

இவை எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்த வைகைமாலை, ''அக்காளின் மணவாளர் எங்கிருக்கிறார், எப்பொழுது வருவார் என்று சொன்னீர்கள். நான் கேட்டால்கூட 'அவர்' எங்கேஇருக்கிறார் எப்பொழுது வருவார் என்று உங்களால் சொல்ல முடியாதா?'' என்றாள்.

சந்தகர் சிறிது யோசனை செய்துவிட்டு, ''சரி! பூதுகன் விஷயமாக நான் சோதிடம் பார்ப்பதில்லை யென்று வைத்துக் கொண்டிருந்தேன். நீங்கள் வேண்டிக் கொள்வதனால் உங்களுக்காக வேண்டுமானால் பார்க்கிறேன்'' என்று சொல்லிச் சோழியைக் குலுக்கிப்போட்டு எண்ணிப் பார்த்து விட்டு ஏதோ திகைப்படைந்தவர் போல் யோசனையில் ஆழ்ந்தார்.

அவர் முகத்தில் ஏற்பட்ட கலவரக் குறியை அறிந்த வைகைமாலை பயம் அடைந்தவளாய், ''என்ன யோசிக்கிறீர்கள்?'' என்று கேட்டாள்.

சந்தகர் தம்மைச் சமாளித்துக் கொண்டவராக, ''ஜெகன்மாதா கொஞ்சம் யோசிப்பதற்கு இடம் வைத்து விட்டாள். சில சமயங்களில் சோழிகள்

சிக்கலாக வரும். அப்பொழுது கொஞ்சம் யோசித்துப் பதில் சொல்ல வேண்டியிருக்கும். பூதுகன் வடதிசை போயிருக்கிறார். சௌக்கியமாகத்தான் இருக்கிறார். கூடிய சீக்கிரம் திரும்பி வந்து விடுவார்'' என்று சொல்லி விட்டுச் சோழிகளை எடுத்துப் பையில் போட்டுக் கொண்டார். பிறகு, '' நான் கொஞ்சம் அவசரமாகச் செல்ல வேண்டும். பிறகு வருகிறேன் '' என்று கூறி எழுந்தார்.

'' திடீரென்று நீங்கள் இப்படிக் கிளம்பியது விநோதமாயிருக்கிறது. இந்த வீட்டிலேயே நீங்கள் இன்று விருந்து சாப்பிட வேண்டும் என்று எங்கள் ஆவல் '' என்றாள் சுதமதி.

'' விருந்தா ? அதற்கு இது நேரமில்லை. நல்ல சமயத்தில் விருந்து வைக்கச் சொல்லி நான் சாப்பிடுகிறேன். இப்பொழுது நான் அவசரமாகச் செல்ல வேண்டும். அதிருக்கட்டும், சிங்களத்திலிருந்து ஒரு முத்து வியாபாரி வருவதாகச் சொன்னீர்களே, அவன் யார்? அவன் பெயர் என்ன?'' என்று கேட்டார் சந்தகர்.

'' அவர் மரூர்ப்பாக்கத்தில் கடை வைத்திருக்கிறார். குணசிங்கர் என்பது அவருடைய பெயர் '' என்றாள்.

'' சரி, உங்களுடைய மணவாளரைச் சீக்கிரம் இங்கு வந்து சேருவதற்குரிய சில விஷயங்களை அவரிடம் சொல்லி அனுப்பினால் நலமாக இருக்கும் என்றுதான் கேட்டேன். சரி! நான் போய் வருகிறேன்'' என்று சொல்லி எழுந்தார்.

சுதமதி அவருக்குச் சந்தோஷத்தோடு விடை கொடுத்து அனுப்பினாள். ஆனால் வைகைமாலையின் முகத்தில் மட்டும் ஏதோ சிறிது கலக்கம் நிறைந்திருந்தது. அவள் தயக்கத்தோடும் குழப்பத்தோடும் அவருக்கு விடையளிப்பவள் போல் கைகுவித்து வணக்கம் செய்தாள்.

அவசரமாகப் புறப்பட்ட சந்தகர், வைகைமாலையின் முகத்தில் தோன்றியிருந்த கலவரத்தைக் கண்டதும் சிறிது தயங்கி, ''கவலைப்பட வேண்டாம். பூதுகன் வட திசையில் காஞ்சிபுரத்துக்குச் சமீபமாக இருக்கிறார் என்று நினைக்கிறேன். அவர் அத்திசையில் இருக்கிறார் என்று தெரிந்ததும் அவரைப் போய்ப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் ஏற்பட்டு விட்டது. ஆகையால்தான் இவ்வளவு அவசரமாகப் புறப்பட்டேன்'' என்று கூறினார்.

வைகைமாலையின் முகத்தில் சிறிது தெளிவு ஏற்பட்டது. அவள், '' சந்தோஷம்! அவர் எங்கேனும் சுகமாக இருக்க வேண்டுமென்றுதான் இறைவனைப் பிரார்த்திக்கிறேன் '' என்றாள்.

'' எல்லாவற்றுக்கும் பராசக்தியின் பேரருள் இருக்கிறது '' என்று சொல்லிக் கொண்டே அங்கிருந்து புறப்பட்டார் சந்தகர்.

அவர் விசையால் உந்தப்பட்ட பொம்மைபோல் எங்கு செல்கிறோம் என்று அறியாமல் மரூர்ப்பாக்கத்துக்கு வந்தபோது சுதமதி சொல்லிய குணசிங்கன் என்னும் சிங்கள தேசத்து முத்து வியாபாரியைப் பற்றிய நினைவு அவருக்கு வந்தது. அவர் ஏதோ தீர்மானத்துக்கு வந்தவர்போல் அந்த முத்து வியாபாரியின் கடையை நோக்கி வேகமாக நடந்தார்.

கடைவீதியில் அதிகக் கூட்டம் இல்லை. இந்திர விழா நடந்து மூன்று நாட்களாகி விட்டன. வியாபாரத்தின் விருவிருப்பு கொஞ்சம் தளர்ந்திருந்தது. கடைகளைத் திறந்து வைத்துக் கொண்டிருந்த வியாபாரிகள் தங்களுக்குப் பக்கத்திலுள்ள வியாபாரிகளோடு விளையாட்டாகவும், வேடிக்கையாகவும் பேசிப் பொழுதைக் கழிக்க நேரம்



கிடைத்தது. குணசிங்கனின் கடையை அடைந்தபோது அவன் பக்கத்துக் கடைக்காரனோடு ஏதோ தர்க்கம் செய்து கொண்டிருந்தான். அவனுடைய சம்பாஷணை சந்தகரின் கவனத்தைக் கவர்ந்து விடவே அங்கிருக்கும் முத்துக் குவியல்களைக் கவனிப்பவர்போல் சம்பாஷணையில் கவனம் செலுத்தலானார்.

சிங்களத்திலிருந்து வந்திருக்கும் குணசிங்கன் புத்த மதத்தில் மிகுந்த பற்றுள்ளவன். புத்த மதத்தைப் பற்றி யாரேனும் தாழ்மையாகப் பேசினால் அவனுக்குப் பொறுக்காது. அதிலும் காவிரிப்பூம் பட்டின புத்த விஹாரத்தில் நடந்த கொலையின் காரணமாக, புத்த மதத்துக்கு விரோதமாக இருந்த பிற மத வாதிகள், அம்மதத்தையே மிகவும் ஏளனமாகப் பேசத் தலைப்பட்டனர். "புத்த பிக்ஷுணிகளும் புத்தபிக்குகளும் வெளியே பயிரை மேய்வதுபோல் தகாத மார்க்கங்களில் இறங்கலாமா?" என்று கேட்டார் பக்கத்துக் கடை வியாபாரி.

"ததாகதர் ஒரு பிக்ஷுகூட இல்லாத இடத்தில் பிக்ஷுணிகள் வசிக்கக்கூடாது என்று சொன்னதற்குக் காரணம் வேறு. பெண்களாகிய பிக்ஷுணிகளின் சீலம் காப்பாற்றப்படவேண்டும் என்பதற்காக அவர்கள் பிக்ஷுக்களின் பார்வையில் இருப்பது நல்லது என்ற நோக்கத்தில் அவர் சொன்னார்........" என்றான் குணசிங்கன்.

இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த சந்தகர் திடீரென்று அவர்கள் சம்பாஷணையில் கலந்து கொள்கிறவர் போல், "இப்படிப்பட்ட ஊழல்கள் எல்லா மதத்திலும் தான் உள்ளன. போலி வேடம் தரித்தவர்கள் எங்குதான் இல்லை? அவர்களால் ஏற்படும் ஊழல்களை ஒரு உன்னதமான மதத்தின் பேரிலேயோ அந்த மதத்தை ஸ்தாபித்த மகா புருஷர்கள் பேரிலேயோ சாட்டுவது அழகாகாது. இனி இத்தகைய ஊழல்கள் நடைபெறாத வண்ணம் அம்மதத்தைச் சேர்ந்தவர்கள் பாதுகாப்பளிப்பது தான் நல்லது" என்றார்.

தங்கள் சம்பாஷணைக்கு இடையே புகுந்த மனிதரை முத்து வியாபாரியும் அவன் கடைக்குப் பக்கத்துக் கடையிலுள்ளவனும் வியப்போடு பார்த்தனர். முத்து வியாபாரி குணசிங்கனுக்குச் சந்தகரின் வார்த்தைகள் ஆறுதலளித்தன. விபூதிப் பட்டையும், குங்குமப்பொட்டும் தீர்க்கமாக அணிந்து வந்திருக்கும் சந்தகரின் வார்த்தைகள் அந்தப் பக்கத்துக் கடை வியாபாரிக்கு மிகுந்த ஆச்சரியத்தை யளித்தன. இப்படிப்பட்ட கோலத்தில் இருப்பவர் புத்தமதத்துக்கு ஆதரவாகப் பேசுவது அவனுக்குச் சிறிது ஆச்சர்யத்தை யளித்தது. இருப்பினும் சந்தகரின் தாடியும் அவர் அணிந்து கொண்டிருக்கும் விபூதி முதலான சின்னங்களும் அவரிடம் சிறிது மரியாதை காட்டும் வண்ணமாகத் தானிருந்தன.

அவன் சந்தகரைப் பார்த்து, "நான் ஒரு மதத்தைச் சேர்ந்தவனாயினும், பிற மதத்தை வெறுக்க வேண்டுமென்ற நோக்கம் கொண்டவனல்ல. ஆனாலும் இந்த புத்த மதத்தினரின் போக்கு எனக்கு வரவரப் பிடிக்கவில்லை. உங்களைப் பார்த்தால் வெளியூர் மனிதர் போலத் தோன்றுகிறது. அதிலும் சைவ சமயத்தைச் சேர்ந்தவராகவும் காணப்படுகிறீர்கள். உங்களுக்கு இந்த ஊரில் அதிலும் புத்த விஹாரத்தில் நடந்த கொலையைப்பற்றி அதிகம் தெரிந்திருக்காது" என்றான்.

"ஏதோ கொஞ்சம் கேள்விப் பட்டிருக்கிறேன். அந்த விஹாரத்தில் பிக்ஷுணிக் கோலத்திலிருந்த பெண் தான் இந்தக் கொலைக்குக் காரணமாக இருப்பாளோ



என்று பலர் சந்தேகிப்பதாகவும் அறிந்தேன். ஒரு பெண்ணைக் காணோம் என்றவுடனேயே அவள் மீது பழி சுமத்துவது அவ்வளவு நீதி ஆகாது. ஒரு அழகான பெண்மீது எத்தனையோ பேர்களுக்குக் கண்ணிருக்கும். அந்தப் பெண்ணைக் கடத்திக்கொண்டு போவதற்காக யாரேனும் முயற்சித்திருக்கலாம். அந்தப் பிக்ஷுணியைக் கடத்திச் செல்ல நினைத்தவர்கள் அந்தப் பிக்ஷுவைக் கொலை செய்திருக்கலாம்....'' என்றார் சந்தகர்.

''நீங்கள் சொல்வதும் சரிதான். அப்படித்தான் நடந்திருக்க வேண்டும்'' என்றான் முத்துக் கடை வியாபாரி.

'' பிக்ஷுணி மாத்திரம் காணமல் போயிருந்தால் நீங்கள் சொல்வது சரியாக இருக்கலாம். ஒரு பிக்ஷுவும் கண் மறைவாகி விட்டாரென்றால் அதைப் பற்றி நாம் என்ன சொல்வது?'' என்றான் பக்கத்துக் கடைக்காரன்.

'' ஓகோ! புத்த பிக்ஷுவையும் காணோமா! அப்பொழுது இதில் ஏதோ ரகசியம் இருக்கத்தான் வேண்டும். அந்த புத்த பிக்ஷு யார்? அவர் எந்த ஊரைச் சேர்ந்தவர் என்பது ஏதாவது தெரியுமா?'' என்று கேட்டார் சந்தகர்.

'' கொலையுண்ட பிக்ஷு காஞ்சிபுரத்தைச் சேர்ந்தவராம். காணமல்போன பிக்ஷு தஞ்சையைச் சேர்ந்தவராம். அவர் தஞ்சை மன்னர் சேனாபதியாக இருந்து திடீரென்று துறவறத்தில் புகுந்தவராம்'' என்றான் முத்து வியாபாரி.

''ஓகோ! கலங்கமாலரையரா! அவர் ஒரு புத்த துறவியாகி விட்டார் என்று கேள்விப் பட்டிருக்கிறேன். பாவம்! இப்படிப்பட்ட மனிதர்கள் துறவறத்தை ஏற்பதென்றால் ஏன் அம்மதத்தில் ஊழல் ஏற்படாது?'' என்றார் சந்தகர்.

பக்கத்துக் கடை வியாபாரி சந்தகர் தமக்கு அநுகூலமாகப் பேசுவதாக எண்ணிக் கொண்டே, ''அப்படிச் சொல்லுங்கள். அரசாங்க அதிகாரவர்க்கத்திலுள்ளவர்கள் பயிற்சியில்லாமல் கூட தர்ம விதிகளை அறிந்தவர்கள் போல் துறவறம் மேற்கொண்டு விடலாம். அதைப் பற்றித்தான் அந்த நாஸ்திக வாதம் பேசும் பூதுகன் கூட அடித்துப் பேசி வாதம் செய்தான்'' என்றான்.

பூதுகன் என்ற பெயரைக் கேட்டதும் சந்தகர் சிறிது திகைப்படைந்தவராகப் பரபரப்போடு அந்த வியாபாரியின் முகத்தைப் பார்த்தார். அந்தச் சமயம் அந்தக் கடை வாசல் அருகே கம்பீரமாக வந்து நின்ற குதிரையிலிருந்து ஒரு வாலிபன் இறங்கிக் குதிரை கடிவாள வாரை அதன் முதுகின் மேலேயே போட்டு விட்டுக் கடையை நோக்கி வந்தான்.

**(தொடரும்)**

# கிறிஸ்துவத் துறவி லாரென்ஸ்

ராஜாஜி



3

"சர்வ வல்லமை யுள்ளவனும் அன்பனுமான பகவானைத் துணைவனாக அமைத்துக் கொண்டு எல்லாவற்றையும் அவனுக்கு அர்ப்பணமாகச் செய். எந்தக் காரியத்தையும், சிறியதாயினும் பெரியதாயினும், அவனிடம் அன்பு செலுத்தி அவனுக்காகச் செய்.'' இவ்வாறு லாரென்ஸ் துறவி உபதேசித்தார்.

எப்போதும் பகவானைப் பக்கத்தில் இடைவிடாமல் நிறுத்திக் கொள்ளும் இந்த அப்பியாசம் கீதையில் உபதேசிக்கப்பட்ட யோகமேயாகும்.

'மத்பர'னுயிருந்து 'மதர்த்தம்' எல்லாக் காரியத்தையும் என்னையே நம்பி, எனக்காகவே செய் — என்று கண்ணன் உபதேசித்ததற்கும் லாரென்ஸ் துறவி உபதேசித்த மார்க்கத்துக்கும் வேறுபாடில்லை. இரண்டும் ஒன்றேதான்.

உபதேசித்த நெறியின்படியே லாரென்ஸ் துறவி தம் வாழ்க்கையை நடத்தினர். சமையல் வேலையாயினும், பாத்திரங்கள் தேய்த்துச் சுத்தம் செய்வதாயினும் குளிப்பதாயினும் பேசுவதாயினும் தூங்குவதாயினும் எல்லாம் பகவானுடைய பிரீதிக்காக என்று கருதிச் செய்து வந்தார். அதில் பிறருக்கு விளக்க முடியாத ஆனந்தம் அடைந்து வந்தார்.

மற்றத் துறவிகளைப் போல் அவர் முகத்தில் துன்பக் குறி ஏதும் தென்பட மாட்டாது. இவர் துறவி என்று யாரும் அவரைப் பார்த்தால் அறிய மாட்டார்கள். பாமர மக்களின் முகத்தைப் போலவே இருந்தது அவர் முகம். பக்திக்காக எந்தத் தனி வேஷமும் அவர் போடவில்லை.

சாதாரணமாக, பக்த கோஷ்டியைச் சேர்ந்தவர்கள் மற்றவர்களைப்போல் பேச மாட்டார்கள். அவர்களுடைய எல்லா நடவடிக்கையும் சாதாரண ஜனங்களைப்போல் இராது. ஆனல் லாரென்ஸ் துறவி எல்லாரையும் போலவே இருந்தார். அவருடன் சம்பாஷித்த ஒரு பெரியவர் எழுதி யிருக்கிருர்:

''ஒரு பாமரனைப் போல்தான் இருந்தார். ஆயினும் அவருடைய ஞானமும் தீவிர மேதையும் அந்தப் பாமர வெளித் தோற்றத்தை ஊடுருவிப் பிரகாசிப்பதைக் கண்டேன்.''

"என்னுடைய வழிபாட்டு முறை துறவிகளுக்குத்தான் சாத்தியம் என்று எண்ண வேண்டாம். சாதாரண மக்களுக்கு எட்டாத ஒரு ஞான மார்க்கம் என்று எண்ணவேண்டாம். என்னைப் போலவே பகவானிடம் யாருமே காதல் கொள்ளலாம். யாருமே என்னைப் போல் பக்தியும் செலுத்தலாம்.'' இவ்வாறு சொல்லுவார் லாரென்ஸ் துறவி.

''உள்ளத்தைக் குழந்தை உள்ளமாகச் செய்து கொண்டு, தாயை நாடிக் குழந்தை செல்வதுபோல் ஆண்டவனை எதற்கும் நாட வேண்டும். இது எவராலும் செய்ய முடியும். தானாக நிற்க முடியாத குழந்தை தாயைப் பிடித்துக் கொண்டு நிற்பதைப் போல், நாம் ஆண்டவனைப் பற்றிக் கொண்டு நிற்க வேண்டும். குழந்தை தாயைச் சார்வது போல் நாம் ஆண்டவனேடு ஒன்றுதல் வேண்டும். மனம் வைத்தால் இதில் கஷ்டமில்லை. சுகமே காணலாம். இவ்வாறு செய்யாமல் போனல் உண்மையில் யாருமே சுக வாழ்க்கை நடத்த முடியாது.''






அன்புக்குரிய சுஜாதா,

பெண்கள் கல்வி, ஆண்கள் கல்வி இவைகளைப் பொறுத்த வரையில் நமக்கு அதிகம் சிரமமில்லை. பிற்படி கல்வி முறைகளைப் பற்றிய பல திட்டங்களை ஒரு மாதிரியாக நிர்ணயித்து விடலாம். ஆனால் மூன்று வயது முதல் பன்னிரண்டு வயது வரையில் உள்ள குழந்தைகளுக்குப் பாடத் திட்டங்கள் அமைப்பது எளிதல்ல.

மூன்று வயது முதல் பன்னிரண்டு வயது வரையில் அவர்கள் புத்தியாகிய வேருக்கு அளிக்கப்படும் உரமும் தண்ணீரும் தான் கல்வி. குழந்தைகள் குடும்பத்தின் பொக்கிஷம், நாட்டின் எதிர்காலக் குடிமக்கள், அதே சமயம் குடிகளின் மன்னர்கள். அறிவும், ஆற்றலும் பெற்ற குழந்தைகளைக் கண்டு பெற்றோர் அடையும் ஆனந்தம் தனிப்பட்டது.

காந்திஜி குழந்தை உள்ளத்தில் உற்சாகமாகக் கல்வியைப் பதிய வைக்கும் திட்டத்தைத்தான் ஆதாரக் கல்வி என்று வகுத்தார்!

பத்திரிகைகளில் கார்ட்டூன் படங்களை மிருகங்களாகப் போடுவது மனத்தைக் கவருமென்று ஒரு அறிஞர் சொன்னார். குழந்தைகளுக்கு வர்ணங்களில் ஆசை அதிகம். கை வேலைகளாக அநேக சாமான்கள் தயாரித்து அவைகளின் பெயர்களை எண்ணிக்கையாகவும், எழுத்துக்களாகவும் சொல்லிக் கொடுப்பதுதான் உற்சாகத்தைக் கொடுக்கும்.

புஸ்தகங்கள் வழுவழுப்பான அட்டைப் படத்துடன் இருந்தால் குழந்தைகள் ஆனந்தமாகக் கையைத் தட்டிச் சிரித்துக் கொண்டு பார்க்கிறார்கள். குறிக்கும் பொருளின் படங்களும் இருந்து விட்டால் கேட்க வேண்டாம். இம்முறைகளைப் பற்றி அநேக அறிஞர்கள் ஆராய்ச்சி செய்து வருகிறார்கள். நம் நாட்டிலும் குழந்தைகளை மதித்து அவர்கள் கல்வியில் சிரத்தை காட்டும் காலம் வந்து கொண்டிருக்கிறது.

நான் சொல்ல வந்தது மக்கள் செல்வத்தைப் பெற்ற அன்னைமாருக்குச் சில வார்த்தைகள், 'வீட்டில் விஷமம் பொறுக்கவில்லை, பள்ளிக்கூடத்தில் போட்டால் வாத்தியாருக்குப் பயப்படும்' என்று சிலர் சொல்வதைக் கேட்கிறோம். அவர்களை அடக்கி ஒடுக்கப் பள்ளிக்கூடம் அனுப்புவது சரியா? அல்லது அவர்கள் அறிவு வளர்ந்து மனம் விகசிதமாகப் பள்ளிக்கு அனுப்புவது சரியா? முதலில் சொன்ன மனப்பான்மை ஒரு தாய்க்கு இருப்பது தவறு.

சின்னக் குழந்தைகள் செய்யும் குறும்புத்தனங்களைச் சகிக்க முடியாத தொந்தரவாக மதிக்கும் தாய்மார்கள் உண்மையில் தாய்மார்களே அல்ல. ஒரு வீட்டுக்கு லக்ஷணம் குழந்தைச் செல்வம்தான். குழந்தையில்லாத வீடு பாலை வனத்துக்கு ஒப்பாகும். குழந்தைகள் செய்யும் குறும்புகளைச் சகிக்கப் பொறுமையில்லாமல் வெறுப்புக் கொள்ளும் சுபாவம் ஒரு தாய்க்கு ஏற்றதல்ல.

குழந்தைகளின் உடல் நலத்தை நாம் போஷிக்கின்றோம். அவர்கள் உடல் வளர்ச்சியுடன் உள்ளத்தையும் வளரச் செய்யும் பொறுப்பைப் பள்ளிக்கூடம் ஏற்கிறது. இப்பெரும் பொறுப்பை ஏற்கும் பள்ளிக்கூடம் சரியான முறையில் நடக்கிறதா? குழந்தைகளின் மனம் நேர்ப் பாதையில் செல்லுகிறதா என்று நாம் கவனிக்க வேண்டுமல்லவா?

எனக்குத் தெரிந்த இரண்டு சகோதரர்கள் ஒரு வீட்டில் ஒரு குடும்பம் நடத்துகிறார்கள். அவர்கள் இருவருக்குமாகப் பதினொரு குழந்தைகள். நான் அவர்கள் வீட்டுக்குப் போயிருந்த சமயம் குழந்தைகள் எங்கே படிக்கிறார்கள், எந்த வகுப்பு என்று கேட்டேன். குழந்தைகளின் அன்னை, "யார் கண்டார்கள்? வீட்டில் அவைகள் படுத்துகிற பாடு பொறுக்க முடியவில்லை. பள்ளிக்கூடத்தில் கொண்டு போய்த் தள்ளி விடுகிறோம். அவர்கள் அப்பா அவர்களுக்குச் சம்பளத்தைக் கட்டித் தொலைத்து விடுகிறார்" என்றாள். இதைக் கேட்கும் போது ஒரு அன்னை எவ்வளவு பொறுப்பற்ற நிலையில் இருக்கிறாளென்று வருந்தினேன்.

சமீபத்தில் குழந்தைகளுக்காக நடத்தப்படும் ஒரு பள்ளிக்கூட விழாவில் கலந்து கொள்ளும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அவர்கள் ஆரோக்கியம், அறிவு இரண்டுமே ஒன்றாக வளருமாறு அமைக்கப்பட்ட கல்வித் திட்டம் அங்கு கண்டேன். குழந்தைகளுக்காக நடத்தப்படும் விளையாட்டுப் போட்டியில் வெறும் ஓட்டப் பந்தயமில்லை. தவளை மாதிரி தத்தி ஓடவும், பட்சிகள் மாதிரி பறக்கவும் கவர்ச்சிகரமான போட்டிகள் நடைபெற்றன. இம்மாதிரி பள்ளிகளுக்குக் குழந்தைகள் ஆசையாகப் போவார்கள்.

பத்துக் குழந்தைகளாகச் சேர்ந்து படிக்கும் அறிவு வீட்டில் பெறமுடியாது. ஒரு குழந்தை மற்றக் குழந்தைகளுடன் சண்டை போடாமல் பழகத் தெரிந்து கொண்டால்தான் பிற்காலத்தில் அவர்களுக்கு ஒற்றுமையாக வாழத் தெரியும்.

இப்படிக்கு,
**பூமாதேவி**



# காரணங்களை
# கவனியுங்கள்

புத்திசாலிகள் ஸெவன் ஓ'க்ளாக் பிளேடுகளை உபயோகிப்பதற்கு காரணங்கள் மூன்று உள.

1. அவைகள் அதிகூர்மையானவையாதலால் நாள் முழுவதும் அப்போதுதான் க்ஷவரம் செய்துகொள்ளப்பட்டது போன்ற தோற்றத்தை அளிக்கிறது.
2. அவைகள் உயர்ந்த ரக எஃகினால் தயாரிக்கப்படுவதால் ஒவ்வொரு பிளேடும் அநேக க்ஷவரங்களுக்கு ஈடு கொடுக்கிறது.
3. அவைகள் தரம் குன்றாதவை. நீங்கள் வாங்கும் ஒவ்வொரு பிளேடும் இதற்கு முன் வாங்கப்பட்டதுபோல் சிறந்ததுதான்.

மேற்கூறிய மூன்று காரணங்களை ஆதாரமாகக் கொண்டு ஸெவன் ஓ'க்ளாக் பிளேடுகளை வாங்குவதன் மூலம் பணத்தை சேமியுங்கள்.




**7 o'clock BLADES**

**இன்றே ஸெவன் ஓ'க்ளாக் பிளேடுகளை வாங்குங்கள்**

ஈழ நாட்டுப் பிரயாண

# பாரதமும்



இந்தப் பரந்த உலகத்தில் முதன் முதலில் மனித குலத்தில் நாகரிகம் பிறந்தது பாரத நாட்டில்தான். கடவுள் அறிவு பிறந்தது இந்தப் புண்ணிய பூமியில்தான். உலகமெல்லாம் மக்கள் வன விலங்குகளைப் போல் வசித்து வந்த காலத்தில் இந்த நாட்டு மக்கள் அறிவிலும், அன்பிலும் சிறந்து விளங்கினார்கள். ஐயாயிரம் ஆண்டுகளாக மக்கள் ஓரே நாகரிகத்தில் வாழ்ந்து உயர்ந்து ஓங்கி வருவது இந்த நாட்டில்தான். பதினாயிரம் ஆண்டுகளாக ஒருவர் பின் ஒருவராகப் பல முனிவர்களும் மகா புருஷர்களும் தோன்றி இந்த நாட்டின் நாகரிகத்தை, மக்களின் அறிவை வளர்த்து வந்திருக்கிறார்கள். அந்த முனிவர்களின் பரம்பரையில் வந்த மகாபுருஷர்தான் புத்தர்.

இரண்டாயிரத்து ஐந்நூற்று எண்பது ஆண்டுகளுக்கு முன்னால் வட இந்தியாவில் கபிலவாஸ்து என்னும் புண்ணிய பூமியில் அம்மகான் தோன்றினார். மன்னர் மகனாகப் பிறந்தாலும் மக்கள் வறுமை, நோய், மூப்பு முதலிய துன்பங்களால் அவதிப் படுவதை உணர்ந்து வேதனைப்பட்டார். அரசைத் துறந்தார்; அருமை மனைவியையும், மகனையும் துறந்தார்; ஏன்? உலகையே துறந்தார். மக்கள் படும் துன்பங்களைப் போக்குவதற்காக வெகு நாட்கள் தவம் செய்து ஞான ஒளி பெற்றார். துன்பத்தையும் துயரத்தையும் ஒழிக்கும் மார்க்கம் அஹிம்சையும் அன்பும்தான் என்பதைக் கண்டார். அந்த உண்மையை மக்களிடம் பரப்பினார். அந்தக் காலத்தில் கடவுளின் உண்மைத் தத்துவத்துக்கு மதிப்புக் கொடுப்பதை விடவீண் சம்பிரதாயங்களுக்கும் சடங்குகளுக்கும் மதிப்புக் கொடுக்கும் வழக்கம் ஓங்கி நிலவி வந்தது. அதையும் நீக்குவதற்கு அரும்பாடு பட்டார்.

பிற்காலத்தில் புத்தரின் லட்சியங்களே புத்த மதமாகி விட்டது. பாரதத்திலிருந்து பர்மா, ஜப்பான், சீனம் ஆகிய நாடுகளுக் கெல்லாம் புத்த மதம் சென்று பிரபலமாகியது. பாரத நாட்டிலோ அதன் செல்வாக்கு குறைந்து விட்டது.

காரணம்: பாரதத்தில் அதற்கு முன்பாகவே இந்து மதம் தழைத்தோங்கி இருந்தது. புத்த மதத்தில் இருந்த கொள்கைகளை இந்து மதம் தன்னுடன் சேர்த்

# புத்தரும் பக்தர்கள்



துக் கொண்டுவிட்டது. புத்த மதம் மறைந்து விட்டது. ஆனால் பாரத நாட்டின் தென் பகுதியில் உள்ள இலங்கைத் தீவில் மட்டும் இப்பொழுதும் புத்தமதம் இருந்து வருகிறது.

இலங்கையில் உள்ள பௌத்தர்களுக்கு, இலங்கை என்ன? உலகில் உள்ள பௌத்தர்களுக்கெல்லாம் புண்ணியஸ்தலமாக விளங்கி வருவது கண்டிதான். இவ்வளவு சிறப்பு அதற்கு எப்படி வந்தது? மகான் புத்தரின் பல் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் இடம் புகழ் பெற்ற இந்தக் கண்டிதான். பகவான் புத்தரின் பல்லை வைத்து எழுப்பியிருக்கும் ஆலயத்துக்குத் தான் 'புத்தர் தந்த ஆலயம்' என்று பெயர். இந்தப் புனிதமான புத்தர் பல் ஆலயத்துக்குத்தான் நாம் இப்பொழுது செல்லப் போகிறோம்.

இந்த ஆலயத்துக்குள் பார்க்க வேண்டிய அபூர்வக் காட்சிகள் பல இருக்கின்றன. இது வரை இலங்கையில் பார்த்த சில புத்த கோவில்களுக்கும் இதற்கும் வித்தியாசங்கள் இருந்தன. அவைகள் எல்லாம் கோவில் என்னும் புனித சொல்லுக்கு ஏற்பத் தூய்மையுடன் விளங்கவில்லை. இந்தக் கோயில் அதற்கெல்லாம் மாறாகத் தனி எழிலுடன் விளங்கியது. மனத்துக்கு அளவற்ற இன்பத்தைக் கொடுத்தது. நகர்ப்புறங்களில் நடமாடும் தமிழ்நாட்டு நாகரிக மங்கைகளைப் பார்க்கிறோம். அவர்களிடம் தமிழ் நாட்டின் பெண்மையின் அழகைவிட நவநாகரிகத்தின் கோரமே அதிகமாக இருக்கிறது. இந்தச் சமயத்தில் அன்பும் பண்பும், அடக்கமும் நாணமும் கொண்ட தமிழ்ப் பெண்மணிகளைப் பார்த்தால் நமக்கு என்ன தோன்றுகிறது. வெறும் மணல் பரப்பாகத் தோன்றும் பாலாற்றில் வெள்ளம் பெருகி அதன் இரு கரைகளும் பசுமை பெற்று விட்டது போல மகிழ்ச்சி ஏற்படுமல்லவா? கண்டி புத்தர் தந்த ஆலயத்துக்குள் நுழைந்ததும் அப்படிப்பட்ட உணர்ச்சிதான் உண்டாயிற்று. கண்டி நகரில் இதர இடங்களில் துலங்கி வரும் பழமை இந்த ஆலயத்துக்குள் இன்னும் பரிசுத்தமாகத் தெரிந்தது. ஆலயத்தை இப்பொழுது புனர் நிர்மாணம் செய்து வருகிறார்கள். ஆனால் அதன் பழமை கெடாமல் புது மெருகு கொடுத்து வருகிறார்கள்.

கோயிலுக்கு வெளியில் பூ, பழம், சாம்பிராணி, வத்தி முதலிய பூஜைக்கு உரிய பொருள்களை விற்கும் சிறுகடைகள் இருக்கின்றன. விற்பனை செய்பவர்களில் பெண்களும் இருக்கிறார்கள். அவர்கள் விற்கும் தாமரை மலரின் நிறங்களுடன் போட்டியிட்டன அவர்கள் அணிந்திருந்த பட்டாடைகள். மாலை நேரத்தின் மஞ்சள் வெய்யிலும், கோயிலின் நீண்ட நிழலும், அந்த நிழலுக்கு மத்தியில் செல்லும் துவராடை அணிந்த பௌத்த பிக்குகளும், கோயிலின் கண்டா மணிகள் அசைந்து அசைந்து ஒலிக்கும் இனிய ஓசையும், முரசங்கள் மாறி மாறி எழுப்பும் கம்பீர ஒலியும் சேர்ந்து ஒரு விசித்திர உலகையே நிர்மாணித்து விடுகின்றன.

ஆலயத்தைச் சுற்றிலும் இல்லற வாழ்க்கைக்கு வேண்டிய எல்லாக் காரியங்களும் குறைவின்றி நடந்து கொண்டுதான் இருக்கின்றன. நவீன உலகத்துப் பண்பும் தெய்விகப் பண்பும் ஒன்றிலே ஒன்று தோய்ந்து கிடந்தன. இவைகள் எல்லாம் சேர்ந்து சற்று இரைச்சலை ஏற்படுத்தினாலும் அந்த இடம் என்னமோ ஏகாந்தமாக இருந்தது. அங்கு மோனம் திகழாமல் போனாலும் அமைதி நிலவியது. இந்தமாதிரி ஒரு அதிசயச் சூழ்நிலையில் எட்டு கோண அமைப்பில் கட்டப்பட்டிருக்கும் புத்தர் கோயில் நம்மை 'வருக! வருக!' என்று வாய் பேசாமல் வரவேற்கிறது.

படிகள்மீது ஏறி மேலே சென்றோம். தமிழ் நாட்டின் கோயில்களில் காணும் காம்பீர்யம் இல்லை. ஆனாலும் கோயிலுக்குள் இருக்க வேண்டிய பேரின்ப மோனம் திகழ்ந்தது. இந்த ஆலயத்துக்குள் நடக்கும் புத்தர் விக்கிரக வழிபாடும், அதன் அலங்காரங்களும் ரஸமாக இருக்கின்றன. கோயிலின் மேலே சிறு சிறு ஓடுகள் வேய்ந்த கூரை. அதன் நடுவில் தூபகலசம். அந்தக் காட்சியைப் பார்த்தால் களங்கமற்ற சிறுவர்கள் கலகல வென்று கைகொட்டிச் சிரிப்பது போலவும், அந்த இன்ப ஒலிகள் அலை அலையாகப் பரவி ஆகாயத்தை நோக்கி உயர்ந்து செல்வது போலவும் இனம் தெரியாததோர் அற்புத உணர்ச்சி நமது உள்ளத்தில் எழுகிறது.

கோயிலின் சுவர்களில் உள்ள பல நிறப்பட்ட ஓவியங்கள் நம் கவனத்தைக் கவருகின்றன. இந்த உலகில் பாவம் செய்பவர்கள் நரகத்தில் அனுபவிக்கும் தண்டனைகளைச் சிறப்பாக எடுத்துச் சித்திரிக்கும் வண்ண ஓவியங்கள். கோயிலுக்குள் செல்வோர்களுக்கு அறிவு புகட்டுவது போல இந்த ஓவியங்கள் காட்சி தருகின்றன. இந்தச் சித்திரங்களை ஒரு முறை கூர்ந்து பார்த்து

விட்டால், நரகத்திலும் சொர்க்கத்திலும் நம்பிக்கை இல்லாதவர்களுக்குக் கூடப் பாவம் செய்வதற்குத் தோன்றாது. சாதி சமய வேறுபாடின்றி எல்லா மக்களும் இந்தக் கோவிலுக்குள் சென்று வழிபட்டு வருகின்றனர்.

கோவிலுக்குள் பிரவேசித்து விட்டோம். புத்த தேவனின் பல் வைக்கப்பட்டிருக்கும் இடத்துக்கு மக்கள் கையில் புஷ்பங்களுடன் அதாவது செந்தாமரை மொட்டுகளுடன் செல்லுகின்றனர். அந்தக் கோவிலில் உள்ள ஆறு கர்ப்பக்கிருகங்களின் மத்தியில் உள்ள கர்ப்பக்கிருகத்துக்குச் செல்லுகின்றனர். அலங்காரமான கர்ப்பக்கிருகப் பெரிய கதவுகள் நமக்குக் கலை உணர்ச்சியையும் பக்தி உணர்வையும் ஊட்டுகின்றன. கதவுகளின் இரு புறங்களிலும் உள்ள யானைத் தந்தங்கள் நம் கவனத்தைக் கவருகின்றன. இந்தச் சமயத்தில் கர்ப்பக்கிருகத்தின் கதவு திறக்கப்படுகிறது. உள்ளே இருந்து ஒரு புத்த சந்நியாசி நம்மை வரவேற்பது போல எட்டிப் பார்த்து விட்டுத் திரும்பிக் கொள்கிறார். புத்தர்பிரானின் பல் வைத்திருக்கும் கர்ப்பக்கிருகக் கதவுகள் பொன்னாலும் வெள்ளியாலும் இழைக்கப்பட்டு மின்னுகின்றன. கர்ப்பக்கிருக அறையின் உள்ளே கண்டியின் கலை நுணுக்கம் நிறைந்த வெள்ளி மேஜை ஒன்று இருக்கிறது. அதன்மீது கண்கவர் வனப்புகளுடன் கூடிய ஏழு அடுக்குகள் கொண்ட தங்கப் பெட்டியில் புத்தரின் பல்லை வைத்துப் போற்றிக் காப்பாற்றி வருகிறார்கள்.

இந்தப் பெட்டிக்கு முன்னால்தான் மக்கள் மலர்களைப் போட்டுவிட்டு அருகில் இருக்கும் உண்டியில் பணத்தையும் போட்டு விட்டு வணங்கிச் செல்கின்றனர். சாதாரண நாட்களில் புத்தரின் பல் இருக்கும் பெட்டியைத் திறக்கமாட்டார்களாம். ரொம்பவும் விசேஷமான நாட்களில் மட்டும்தான் மக்களுக்கு அதைத் திறந்து காண்பிப்பார்களாம்.

இந்தக் கோவிலுக்குள் சென்று மக்கள் புத்தபிரானின் சந்நிதிக்கு எதிரில் மலர் தூவி மண்டியிட்டு வணங்கும் காட்சி மறக்க முடியாத அழகுக் காட்சி. கணவன், மனைவி, குழந்தைகளுடன் வந்து மண்டியிட்டு வணங்குவதைப் பார்த்தால் பக்தியில்லாதவர்களுக்குக் கூட பக்தி ஏற்பட்டுவிடும். இந்தக் கோவிலில் வழிபடுகிறவர்கள் தங்கள் மன உணர்ச்சிகளைத் தங்கள் அவயவங்களின் அசைவுகளின் மூலம் வெளியிடுவதும் அழகாகக் கைகளைக் குவித்து வணங்குவதும் பார்ப்பவர்களுக்கு மெய்சிலிர்ப்பை உண்டாக்குகிறது.

## தொல்பொருள் கலை மண்டபம்

பழமையான பெருங்குலத்தில் வந்த கண்டி அரசர் அவர். அவர் எவ்வளவோ அரும்பாடுபட்டு ஓலைச்சுவடிகளைச் சேகரித்தார். அந்த ஓலைச்சுவடிகள் எல்லாம் விலை மதிக்க முடியாத பொக்கிஷங்கள். அந்த மன்னர் ஆட்சி முடிந்து விட்டது. ஆனால் அவர் அரும் பாடுபட்டுச் சேர்த்த ஓலைச் சுவடிகள் இந்தக் கண்டி தொல்பொருள் கலை மண்டபத்தில் இருக்கின்றன. இந்த ஓலைச் சுவடிகளில் என்ன என்ன இலக்கியங்கள் இருக்கின்றனவோ? இதிகாச புராணங்கள் இருக்கின்றனவோ? காவியங்களும் கணித சாஸ்திரங்களும் இருக்கின்றனவோ? ஒப்பற்ற அரசியல் சாஸ்திரங்களும் உடற்கூறு சாஸ்திரங்களும் இருக்கின்றனவோ? அவற்றையெல்லாம் யார் கண்டார்கள்?

கலைமகள் கோவில் கொண்டிருப்பது போன்ற அழகான இந்தத் தொல் பொருள் கலை மண்டபத்தில் ஓலைச் சுவடிகள் வரிசை வரிசையாக அடுக்கி வைக்கப்பட்டிருக்கும் அழகைப் பார்த்தால் பிரமிப்பும் வியப்பும் உண்டாகத்தான் செய்கிறது. இந்த ஓலைச் சுவடிகளைச் சாதாரண மரக்கட்டைகளைக் கொண்டா மூடிக் கட்டி யிருக்கிறார்கள்? பொன், வெள்ளி, நவரத்தினங்கள் பதித்த சந்தனக் கட்டைகளால் அல்லவா அந்தச் சுவடிகளை அழகுடன் மூடி வைத்திருக்கிறார்கள்? இன்னும் சில ஓலைச் சுவடிகள்மீது யானைத் தந்தங்களைப் பலகைகளாகச் செய்து அவற்றைக் கொண்டல்லவா கட்டப் பட்டிருக்கின்றன! கலைமகளை எவ்வாறு போற்றி யிருக்கிறார்கள் கண்டி மன்னர்கள் என்பதற்கு இந்த ஓலைச்சுவடிகளே சிறந்த அத்தாட்சி!

கண்டி மன்னர்களின் 'நானோவக்க மண்டபம்',—அதாவது மன்னரும் மக்களும் கூடி இருந்து நீதி வழங்கும் அரச நீதி மன்றம்,—சரித்திர முக்கியத்துவம் வாய்ந்தது. இந்தப் புகழ் பெற்ற மணி மண்டபத்தை ஆயிரத்து எழுநூற்று எண்பத்து நாலாம் ஆண்டில் ராஜாதி ராஜசிங்கன் என்னும் அரசன் கட்ட ஆரம்பித்தான். அவன் காலத்தில் இந்த மண்டபம் கட்டி முடியவில்லை. அவனுக்குப் பின் வந்த விக்கிரமசிங்கன் காலத்தில் இந்த மண்டபம் கட்டி முடிக்கப்பட்டது. மண்டபத்தின் தூண்களில் மிகச் சிறந்த கலை சொட்டும் சிற்பங்கள் கொஞ்சுகின்றன. கண்டியின் கலை நுணுக்கத்தின் சிகரமாக அவை காட்சி தருகின்றன. இந்த மணி மண்டபத்தில் அமர்ந்துதான் கண்டி மன்னர்கள் நீதி செலுத்தி வந்தார்களாம். யார் செய்த பாவத்தாலோ அடிமைப்பட்ட பாரதம் காந்தி மகானின் அன்பு வழியால் அஹிம்சைப் போரால் இருநூறு ஆண்டுகளுக்குப் பின் சுதந்திரம் பெற்றது. அந்த வேகத்தில் இலங்கைத் தீவுக்கும் சுதந்திரம் கிடைத்தது. சுதந்திரம் பெற்ற அந்த 1948-ம் ஆண்டில் இலங்கைச் சுதந்திரப் பிரகடனத்தை இந்தச் சரித்திரப் பிரசித்தி பெற்ற மண்டபத்தில்தான் வெளியிட்டார்களாம்.

இந்த மண்டபத்துக்கு அருகிலேயே பழைய அரசர்களின் மாளிகை ஒன்று இருக்கிறது. இந்த மாளிகையின் ஒரு பகுதியில் தான் தொல்பொருள் கலைக்காட்சியை வைத்திருக்கின்றனர். கலைக் காட்சியில் கண்டு மகிழ வேண்டிய தொல் பொருள்கள் ஏராளமாக இருக்கின்றன. அந்தப் பொருள்கள் கண்டியின் பழைய கதைகளையும், புத்தர் பல் ஆலயக் கதைகளையும் சொல்கின்றன.

இதோ இந்தப் பொருள்கள் என்னவோ சொல்லுகின்றனவே! என்ன சொல்லுகின்றன? சற்றுக் காது கொடுத்துக் கேட்கலாம். புத்தர் பல் ஆலயத்தைப் பற்றிய சம்பவங்களைப் பற்றியல்லவா அவை கூறுகின்றன! புத்தரின் பல்லுக்காகப் பெரிய பெரிய




# ஜானகி உபயோகிப்பது

## லக்ஸ் டாய்லெட் சோப்

"நானறிந்த சோப்புக்களில் மிகவும் தூய்மையான, வெண்ணிற சோப்!"

சினிமாத் துறையில் நீடித்த வெற்றியுடன் இருப்பதென்றால் படப்பிடிப்பின்போது உழைத்தால் மட்டும் போதாது என்பது ஜானகியின் கொள்கை. தமது மென்மையான மேனியை அவர் கண்ணும் கருத்துமாகப் பராமரிப்பதே இதை நிரூபிக்கும். எப்பொழுதும் லக்ஸ் டாய்லெட் சோப்பே உபயோகித்து அவர் தமது மேனியழகைப் பராமரிக்கிறார். வெண்மையும் தூய்மையும் மிகுந்த லக்ஸ் டாய்லெட் சோப்பே சருமத்துக்கு மிக மென்மையான பராமரிப்பு அளிக்கும் நிச்சயமான முறை. அழகு நிறைந்த திரைப்பட நட்சத்திரங்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமானது. நீங்களும் உபயோகிக்க வேண்டியது!

# லக்ஸ் டாய்லெட் சோப்

சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்

LTS. 514-50 TM

மன்னர்கள் நடத்திய பயங்கர யுத்தங்களைப் பற்றிக் கூறுகின்றன. பல முறை புத்தரின் புனிதப் பல்லை எதிரிகள் கொண்டு போனாலும் அத்தனை முறையும் அதைத் திருப்பிக்கொண்டு வந்த வீர சாகசத்தைச் சொல்கின்றன. ஒரு முறை புத்தரின் பல் பாரத நாட்டுக்கே சென்று விட்டதும் மீண்டும் இலங்கைக்கு வரவழைக்கப்பட்ட வரலாறுகளையும் பகருகின்றன. போர்ச்சுகீசியர்கள் புத்தரின் பல்லை அபகரித்ததையும் அதனால் ஏற்பட்ட வீரப் போராட்டங்களையும் நமக்கு மௌனமாக எடுத்து முழங்குகின்றன.

இதோ இந்தத் தனி அறையில் இரண்டாம் ராஜசிங்கனின் சிம்ம கர்ஜனை கேட்கிறது. அவன் தரித்திருந்த பொன்முடி நம்மைப் பார்த்து என்னென்னவோ சொல்கிறது. நாம் அவன் வாழ்ந்த பதினேழாம் நூற்றாண்டுக்கே சென்று விடுகிறோம். அந்தக்காலத்தில் கண்டி மக்களின் வாழ்க்கை மிகவும் ஆனந்தமாகவும் அமைதியாகவும் இருந்திருக்கவேண்டும் என்பதற்கு எடுத்துக் காட்டாக இங்கு எத்தனையோ கலைப்பொருள்கள் இருக்கின்றன.

அதோ கண்டி மன்னர் அமர்ந்து ஆட்சி செலுத்திய பொன்னாலான சிங்காசனம்; அவர் உபயோகித்த வைரம் பொதித்த தங்க வாள். அந்தச் சிங்காசனத்திலும் உடை வாளிலும் காணப்படும் கலை நுணுக்க வேலைப்பாட்டைப் பார்த்தால் அவர்கள் எவ்வளவு நாகரிகமான உயர்ந்த வாழ்க்கை நடத்தி யிருப்பார்கள் என்று ஊகிக்க முடிகிறது.

இன்னும் இலங்கையில் வழங்கப்பட்ட தொல்பொருள்களும், ஆயுதங்களும், பொன், வெள்ளி, தந்தம் முதலியவைகளில் செய்யப்பட்டிருக்கும் சிங்கார அலங்காரங்களும் பார்த்துப் பார்த்து அனுபவிக்க வேண்டியவை. அம்மம்மா! அவைகளைப் பற்றி ஒன்றும் சொல்லுவதற்கில்லை, போங்கள்.

இத் தொல்பொருள்கள் தமிழ் நாட்டுக்கும் ஈழத்துக்கும் உள்ள நெருங்கிய தொடர்பைத் தான் அழுத்தமாக எடுத்துச்சொல்லிக்கொண்டிருக்கின்றன. தமிழ்நாட்டுக்கும் ஈழத்துக்கும் உள்ள தொடர்பு இன்று நேற்று ஏற்பட்டதல்ல. எத்தனையோ நூற்றாண்டுகளாக இருந்து வருவது என்று அவை அறுதியிட்டு உறுதி கூறிக் கொண்டிருக்கின்றன.

இந்தப் பேருண்மைகளை உலகுக்கு எடுத்துக் கூறும் பழங்காலக் கலைப் பொருள்களைப் பாதுகாத்து வருபவர்களை மனமார வாழ்த்துகிறேன். அவர்கள் நன்றாக இருக்கட்டும்! உண்மையிலேயே நன்றாயிருக்கட்டும்!

## பெரஹரா திருவிழா!

கண்டி கோயிலில் நடக்கும் விசேஷமான திருவிழா ஆகஸ்டு மாதத்தில் நடக்கும். இந்தத் திருவிழாவுக்குத்தான் பெரஹரா திருவிழா என்று பெயர். இந்த விழாவுக்கு ஈழநாட்டில் உள்ள மக்கள் எல்லாருமே திரண்டு வருவார்கள்! ஏன் உலகின் பல பகுதிகளில் இருந்தும் யாத்திரிகர்கள் வருவார்கள்! பெரஹரா திருவிழா ஊர்வலத்தில் நாற்பது யானைகள் கலந்து கொள்ளும். அந்த யானைகளுக்குத் தங்கத்தினாலும் வெள்ளியினாலும் அலங்கரித்த முகபடாங்களைச் சூட்டி யிருப்பார்கள். அந்த முகபடாம் பளீர் என்று ஒளி வீசி ஜொலிக்க யானைகள் கம்பீரமாக நடந்து ஊர்வலத்தின் முன்னால் செல்லும். யானைகளுக்குப் பின்னால் கண்டியின் பிரசித்தி பெற்ற நடனம் நடைபெற்றுக் கொண்டிருக்கும். இந்த நடனக் குழுவினர் விசித்திரமான ஆடைகள் அணிந்திருப்பார்கள். முத்துக்களால் அலங்கரித்த கிரீடம் தரித்திருப்பார்கள். முத்தாரங்கள் சூட்டிக் கொண்டிருப்பார்கள். அவர்கள் ஆட்டத்துக்கு ஏற்ற மேளங்களும் உண்டு. அவர்களும் கூட்டம் கூட்டமாக நின்று மேளத்தை வாசித்துக் கொண்டிருப்பார்கள். மேளத்தின் தாளத்துக்கு ஏற்றபடி நடனக் குழுவினர் பிரமாதமாக ஆடுவார்கள். அவர்களுக்கு மத்தியில் ஒருவன் 'கிர்' ரென்று சுழன்று கொண்டே மேலே கிளம்புவான். பூமியிலிருந்து சுமார் ஐந்தடி உயரத்துக்குச் சுழன்று கொண்டே சென்று விடுவான். பிறகு சட்டென்று தரையில் வந்து நின்றுகொண்டு நிதானமாக ஆடுவான்; ஆடிக் கொண்டே இருப்பான்.

இந்த ஆட்டமும் பாட்டமும் கண்கொள்ளாக் காட்சியாக இருக்குமாம். இதைப் பார்த்தால் நம் கண் முன்னால் இப்படி ஒரு விழா நடைபெறுகிறதா? இல்லை, ஏதாவது கற்பனை உலகில் இருக்கிறோமா என்ற பிரமை ஏற்பட்டு விடுமாம். அவ்வளவு அற்புதமும் அதிசயமும் குதூகலமும் நிரம்பிய பெரஹரா திருவிழாவைப் போல் உலகில் வேறு எங்குமே நடப்பதில்லை என்று கண்டி மக்கள் சொல்லிச் சொல்லிப் பெருமைப்பட்டுக் கொள்கிறார்கள். எங்களுக்கு என்னவோ இந்தக் காட்சியைப் பார்ப்பதற்குக் கொடுத்து வைக்கவில்லை.

எங்களுக்கு இந்த விவரங்களை யெல்லாம் எடுத்துச் சொல்லிக் கொண்டு வந்தவர் முஸ்லிம் மதத்தினர்தான். ஆனாலும் அவருக்கு இருந்த உற்சாகத்தையும் உணர்ச்சியையும் பார்த்தால் இந்தப் பெரஹரா திருவிழா சாதி சமயங்களைக் கடந்த திருவிழா என்றுதான் எனக்குத் தோன்றியது. இந்தத் திருவிழாவைப் பார்க்கக் கொடுத்து வைத்தவர்கள் பாக்கியசாலிகள்தான். இவ்வளவு சிறப்பான திருவிழாவைப் பழைய காலத்துக் கலை உணர்ச்சியுடனும் புதுமைப் பொலிவுடனும் தொடர்ந்து நடத்தி வரும் விழா நிர்வாகிகளுக்கு மானசீகமாக என்னுடைய வணக்கத்தைத் தெரிவித்துக் கொண்டேன்.

*** *** ***

நேயர்களை நாளைய தினம் பெரதேனியா தோட்டத்துக்கு அழைத்துப் போகலாம் என்றுதான் இருந்தேன். ஆனால் பெரதேனியா தோட்டத்துக்குப் போவதற்கு முன்னால் நாம் கண்டியிலிருந்து கொழும்புக்குத் திரும்ப வேண்டி யிருக்கிறது. கொழும்புக்குப் பாரதத்தின் பிரதமர் பண்டித ஜவாஹர்லால் நேரு வருகிறார். கொழும்பு நகரில் பல நிகழ்ச்சிகளில் கலந்து கொள்கிறார். பின்னர் அநுராதபுரம் சென்று அந்தப் புனித நகரைத் திறந்து வைக்கிறார். நாமும் நேருஜியுடன் கலந்து கொண்டு அந்தக் குதூகல வைபவங்களை எல்லாம் பார்த்து மகிழ்வோம். (தொடரும்)

# மண்டபத்துக் கிளி



தெய்வத் தமிழகத்தில் தேவாலயங்களினுள் சிறப்புப் பெற்ற பல ஊர்களில் ஒன்ருன வைத்தீசுவரன் கோயிலுக்கு ஒரு நண்பருடன் சமீபத்தில் சென்றிருந்தேன். பல வருஷங்களுக்குப் பிறகு நான் அங்கேசென்றதால் அங்கு காணப்பட்ட எல்லாம் புதுமையாகவே எனக்குத் தோற்றமளித்தன. முக்கியமாக, வைத்தியநாதப் பெருமான் குடி கொண்டுள்ள ஆலயம் மாறியிருந்தது.

நான் என் நண்பரிடம் கூறினேன்: ''சுமார் பதினைந்து அல்லது பதினறு வருஷங்களுக்கு முன் இந்தக் கோயிலுக்குள் வந்திருப்பதாக என் ஞாபகம். அப்போது இந்தக் கோயில் எப்படியிருந்தது தெரியுமா? ஒரே வௌவால் எச்சத்தின் நாற்றம். சன்னதி எது, பிராகாரம் எது என்று கண்டு கொள்ள முடியாத படி கவிந்திருக்கும் இருள்; தரை யெல்லாம் ஒரே மேடும் பள்ளமுமா யிருக்கும். அதற்கும் இதற்கும் எத்தனை வித்தியாசம்!'' என்று வியந்து போய்க் கூறினேன்.

''இந்தக் கோயில் இப்போது பிரசித்தி பெற்ற வேளூர் மடத்தின் ஆதரவில் நடக்கிறது என்பது உங்களுக்குத் தெரியாதா? இப்பொழுது கோயிலைப் பிரமாதமாகப் புதுப்பித்திருக்கிருர்கள்!''

சித்திர வேலைப்பாடு அமைந்த தூண்கள் ஒவ்வொன்றும் கோயிலின் மகிமையைக் கதை கதையாய் முறை வைத்துச் சொல்லக் காத்திருப்பன போல் தோற்றமளித்தன.

பேசிக் கொண்டே பிராகாரத்துக்கு வந்தோம். அங்கே வந்ததும் சட்டென்று நான் திகைத்து நின்று விட்டேன்.

''அடே! இங்கே வரிசையாய்க் கிளிக் கூண்டுகள் மாட்டியிருக்குமே, அவை யெல்லாம் எங்கே?'' என்று கேட்டேன்.

''கிளிக் கூண்டுகள் எல்லாம் போய் எத்தனை காலம் ஆயிற்று? ;' இப்போது கேட்கிறீர்களே? கோயில் நிர்வாகத்தினரே பல கூண்டுகளைத் திறந்து கிளிகளுக்கு விடுதலை அளித்து விட்டனர். நம்மைப் போன்ற — கோயிலுக்கு வருகிற பொதுஜன பக்தர்களில் பலரும் பாக்கியிருந்தவற்றை யெல்லாம்-விடுதலை செய்து அனுப்பி விட்டனர்'' என்ருர் என் நண்பர்.

''அடாடா! பார்ப்பதற்கு ஒவ்வொரு கிளியும் எத்தனை அழகாக இருக்கும், தெரியுமா? எத்தனை பஞ்சவர்ணக் கிளிகள்! அவை எத்தனை அழகாகப் பேசும்! எத்தனை பாஷைகள் பேசும்; அத்தனை பாஷைகளிலும் எத்தனை கதைகள் அடங்கி யிருக்கும், தெரியுமா?'' என்று என் வியப்பு உணர்ச்சியைக் காட்டிப் பேசிக் கொண்டே போனேன்.

''வாஸ்தவம்தான். நீங்கள் சொல்வது போல வெகு அழகாகப் பேசிய ஒரு பஞ்சவர்ணக் கிளியை விடுதலை உணர்ச்சி கொண்ட ஒரு வாலிபர் — ஒரு தேசபக்தர் — இந்தக் கோயிலிலிருந்து யாருக்கும் தெரியாமல்

விடுதலை செய்தார். ஆனால் அந்தக் கிளி என்ன செய்தது தெரியுமா?''

'' என்ன செய்தது?''

'' அந்தக் கிளி என்ன செய்தது என்று அப்படி யெல்லாம் ஒரே வார்த்தையில் சொல்லிவிட முடியாது. வாருங்கள், போவோம்!'' என்று கூறிக் கொண்டே நண்பர் பிராகாரத்திலின்றும் மறுபுறமாகவே திரும்பித் திருக்குளத்தை நோக்கி நடந்தார். திருக்குளத்துப் படி ஒன்றில் வந்து உட்கார்ந்து கொண்டோம்.

பதினேழு வருஷங்களுக்கு முன் ஒரு கோடைப் பருவத்தில் ஒரு நாள் வைத்தீசுவரன் கோயில் பெரிய சந்நிதித் தெருவில் ஒரு வாலிபன் வெகு வேகமாக விரைந்து நடந்து கொண்டிருந்தான். மத்தியான வெய்யில் எங்கும் கட்டெரித்துக் கொண்டிருந்தது. வெயில் வெப்பத்துக்காகப் போலும், தலையில் ஒரு துண்டைச் சுற்றி மூடித் தோளில் மடக்கி விட்டிருந்தான். சற்று நேரத்துக் கெல்லாம் அவன் கோயிலுக்குள் நுழைந்து தன்னை ஆசுவாசப்படுத்திக் கொண்டு, தலைத் துண்டை எடுத்து இடுப்பில் சுற்றிக் கட்டிக் கொண்டான். கோயில் வெளிப் பார்வைக்கு ஒரே அமைதி மயமாயிருந்தது. ஆள்நடமாட்டமே கிடையாது. கோயிலுக்குள் நுழைந்த அவன் சந்நிதியில் ஒரு கணம் நின்று கன்னத்தில் போட்டுக் கொண்டு கும்பிட்டு விட்டு, நேரே வேறு வேலையாகச் செல்பவன் போல் பிராகாரத்தைப் பார்க்கச் சென்று விட்டான். கோயிலின் அமைதியைக் கலைக்க முயல்வன போலத் தொலைவிலிருந்த கோபுரங்களில் குடியிருந்த புறுக்கள் ஒரு மாதிரி சப்தித்தன. இவை யெல்லாவற்றையும் விட அந்தக் கோயில் பிராகாரம் நெடுகிலும் தொங்கிய கூடுகளில் அடைபட்டுக் கிடந்த கிளிகள் ஒவ்வொன்றும் தனித்தனியாகவும் இரண்டும்



மூன்றும் பலவுமாய்ச் சேர்ந்தும் 'கிரீச்' 'கிரீச்' என்று கத்தின.

மெதுவாக, ஒரு கிளியண்டை சென்றான் அந்த வாலிபன். அவனைப் பார்த்ததும் கூண்டின் நடுவிலிருந்த குறுக்குக் குச்சியில் அமர்ந்திருந்த கிளி அதன் மீதே அப்படியும் இப்படியும் நகர்ந்து தலையைச் சாய்த்துச் சாய்த்துப் பார்த்தது.

கிளியின் அழகை ரசித்துக் கொண்டே அவன் தன் வலது கையை அதன் முகத்துக்கு எதிராகத் தூக்கி, இரண்டு விரல்களால் சொடுக்கிச் சத்தம் உண்டு பண்ணினான். அந்தக் கிளி பேச ஆரம்பித்து விட்டது.

"யார்ராவன்? யார்ராவன்? கெட்ட பய; கெட்ட பய!" என்று திருவாய் மலர்ந்தருளியது.

வாலிபனுக்குக் கிளி பேசுவதானால் வியப்பும் மகிழ்ச்சியும் கலந்த ஒரு சிரிப்பும் வந்தது.

"அட, வைத்தியநாதா! உன் சன்னிதியை நாடி வந்த பக்தர்களின் கைங்கரியமா இது? பேசியும் பேசாத பறவைகளுக்கு இந்த மாதிரியான பாடம்தானா சொல்லித் தரும்படி தோன்ற வேண்டும்?" என்று அவன் நினைத்துக் கொண்டான்.

"சுகர் பெருமானே! நீங்கள் இப்படியெல்லாம் பேசக்கூடாது. நான் நல்ல பாடமாகச் சொல்லித் தருகிறேன். சொல்லுங்கள், பார்க்கலாம்" என்றான்.

"சொல்லுங்கள் பார்க்கலாம்!" என்றது பஞ்சவர்ணக் கிளி.

"சுயம்புநாதன்!" என்றான் வாலிபன்.

"சுயம்புநாதன்!" என்று முறைவைத்துச் சொல்லியது கிளி. தன் பெயரைச் சொன்னவுடனே நாற்புறமும் திரும்பிப் பார்த்தான் வாலிபன். அப்போது ஏற்பட்ட இடை நேரத்தில் கிளி பாடம் சொல்லத் துவங்கிவிட்டது!

"யார்ராவன்? யார்ராவன்? கெட்ட பய! சுயம்புநாதன் கெட்ட பய! கெட்ட பய!"

சுயம்புநாதனுக்குச் சிரிப்பு தாளாமல் வந்தது. வாய்மீது கைபொத்தி, "சூ! அப்படிச் சொல்லக்கூடாது! எல்லாரும் நல்லவர்கள்தான். இதைச் சொல்! 'எல்லாரும் நல்லவர்கள் என்றுரைப்பேன் சுயம்புநாதனே!'....." என்று கவிதை வடிவில் சொல்லிக் கொடுத்தான் அவன்.

'இத்தனை அழகும் பேசுந்திறனும் கூடப் பெற்ற நீ ஏனப்பா சிறைப்பட்டுக் கிடக்கிறாய்? உன்னை யார் எதற்காக இப்படி இங்கே சிறைப்படுத்தினார்கள்? உன்னைப்போல் நானும் நேற்றுவரை சிறையில் இருந்தவன் தான். விடுதலைக்குத் துடித்தேன். அதுவும் எப்படிப்பட்ட சமயத்தில் நான் விடுதலை வேண்டினேன்? என்னைப் பெற்றெடுத்த என் அன்னை இந்தப் பூமியில் பூத உடலில் உலவி விட்டு உயிர் நீத்துச் செல்லப் போகிறாள் என்று தெரிந்ததும் அவள் திருமுகத்தை ஒரு முறை கண்ணாரக் கண்டு களிக்க வேண்டும் என்று ஆசைப்பட்டு விடுதலை வேண்டினேன். எனக்கு விடுதலை கிடைக்கவில்லை!..."

இப்படி நினைத்துக் கொண்டே போனான் சுயம்பு. கிளியிடம் வாய் திறந்து பேசவில்லை.

"நான் நல்லவனோ, கெட்டவனோ! நான் செய்தது என்வரையில் குற்றமற்ற காரியம் தான்! என் தாயார் நேற்று மாலை இந்தப் பொன் பூமியினின்றும் பிரிந்து விண் சோதிக்குச் சென்று கலந்து விட்டாள். ஆனால் அவள் இறக்குமுன் அவளது 'முகவிழி' கிடைக்க நான் ஜெயிலிலிருந்து தப்பியோடி வந்து விட்டேன்! விடுதலை வெறியினால் நான் அப்படிச் செய்தேன்.

"நான் கொலை செய்யவில்லை; திருடவில்லை; தேச விடுதலைக்காகப் பேச்சுரிமையைப் பிரயோகித்தேன். ஒரு வார்த்தைக்கு ஒரு வருஷம் தண்டனையாம்! தண்டனையை ஏற்று அநுபவித்தேன். ஆனால், என் தாயின் முகத்தைக் காண நான் அநுமதிக்கப்படவில்லை. உத்தரவு வந்தபின்தான் விடுதலை என்றனர். என் தாயின் அன்பு என்னை அவளிடம் கொண்டு போய் விட்டது. இது தவறா...?"

இந்தச் சமயம் கிளிகளெல்லாம் சேர்ந்து பலமாகக் கத்தின.

"இப்படி ஒரேயடியாய்க் கூச்சல் போடுகிறீர்களே! எல்லோரையுமே விடுதலை செய்து விட வேண்டும் என்று சொல்கிறீர்களா? கொஞ்சம் பொறுங்கள். ஒரு நாளைக்கு ஒருவர் வீதம் கொஞ்ச நாட்களில் எல்லாரையுமே விடுதலை செய்து விடுகிறேன். எல்லாரையும் ஒரேநாளில் விடுதலை செய்து விட்டால் கோயில் தருமகர்த்தாக்கள் சந்தேகப்பட்டு 'இப்படிச் செய்தவன் யார்' என்று கண்டு பிடிக்க வந்து விடுவார்கள். ஏற்கனவே என்னைப் போலீஸ்காரர்கள் தேடிக் கொண்டிருப்பார்கள் என்பதில் சந்தேகமில்லை..." என்று சொல்லிக் கொண்டே அந்தக் கிளிக் கூண்டைத் திறந்துவிட்டான் சுயம்பு. திறந்து கொண்டே 'விடுதலை!' என்று கூவினான்.

உள்ளிருந்த பஞ்சவர்ணக் கிளி 'விடுதலை! விடுதலை!' என்று கூவிக்கொண்டே பறந்து சென்றது. அது பறந்து சென்றவுடன்தான் அதன் காலில் ஏதோ பிணைந்திருப்பதைக் கண்டான். ஒரு சிறிய பித்தளைச் சங்கிலியும் கூண்டின் குறுக்கேயிருந்த சிறு குச்சியும் அதன் காலுடன் சென்று விட்டன. 'அட அவசரக் குடுக்கையே' என்று நினைத்தபடி அவ்விடத்தை விட்டு நகர்ந்தான் சுயம்பு.



விடுதலை இன்பத்தில் சந்தோஷமாய்ப் பறந்து சென்ற கிளியைப் போலவே தானும் 'விடுதலை பெற்று' வந்ததைப் பற்றி எண்ணிச் சந்தோஷப்பட்டுக் கொண்டிருந்தான் சுயம்பு. ஆனால், கிளிக்கும் அவனுக்கும் ஒரு வித்தியாசம் என்னவென்றால் அந்தக் கிளி பயமின்றி ஆகாய வெளியில் பறந்து திரிந்து கண்ணுக்கும் தெரியாமல் மறைந்து விட்டது. சுயம்புவோ, ஜெயிலிலிருந்து தப்பி ஓடி வந்து விட்டதன் மூலம் 'விடுதலை பெற்ற' காரணமாகப் பயமும் திகிலும் கொண்டு அந்தக் கோயிலில் நடந்து கொண்டிருந்தான்.

முதல் தினம் அன்னையைக் கண்டு, அவள் காரியமும் ஆனபின் அந்த இடத்துக்கும் தனக்கும் இனிச் சம்பந்தம் இல்லை என்ற எண்ணத்துடன் புறப்பட்டவன் நேரே வைத்தீசுவரன் கோயிலுக்கு வந்துசேர்ந்தான். கோயிலுக்குள் அவன் யாரையோ தேடிக் கொண்டிருந்தான். சந்நிதித் தெருவில் நுழைந்தபோதே அவன் அப்படி அவசரப்

பட்டதற்குக் காரணம்: தாங்க முடியாத வெயில் ஒன்று; இரண்டாவது, தப்பி வந்து விட்ட தன்னைப் போலீஸார் எந்த நிமிஷமும் தேடிக்கொண்டு வரலாம் என்பது; மூன்றாவது காரணம் தான் இப்போது அவன் கண்கள் தேடி அலையும் அந்த 'யாரோ ஒரு...'!

தெற்குக் கோடி வாசலில் வந்து நின்றான் சுயம்பு. அங்கிருந்து அவன் தெருவையும் அங்கிருந்த வீடுகளையும் நன்றாகப் பார்க்க முடிந்தது; ஆனால், அவன் அங்கிருப்பதை யாரும் பார்க்க முடியாது. நின்ற நிலையிலேயே அவனுக்குப் பழைய காட்சிகளெல்லாம் நினைவுக்கு வந்தன.

அப்போது மாயவரத்தில் அவன் ஒரு உத்தியோகத்தில் இருந்தான். அவனுடைய நண்பர்களுடன் அடிக்கடி வைத்தீசுவரன் கோயிலுக்கு வருகிற வழக்கம் உண்டு. தருமபுரத்து மடத்துக்குச் சொந்தமான நிலங்கள் விஷயமாக அவன் நண்பர்கள் அடிக்கடி அங்கே வர வேண்டியிருந்தது.

நண்பர்களின் அலுவல்கள் முடிகிறவரை சுயம்பு கோயிலில்தான் பொழுதைக் கழிப்பது வழக்கம். சுவாமி முதன் முதலில் எழுந்தருளியிருந்த இடத்தில் பிரும்மாண்டமான ஒரு வேப்ப மரமும் அதன் அடியில் ஒரு சிவலிங்கமும் இருக்கின்றன. அந்த இடத்தில் வேப்பமரக்காற்று வாங்கிக் கொண்டு கையில் ஏதாவது புத்தகத்தை வைத்து நேரம்போவது தெரியாமல் உட்கார்ந்திருப்பான் அவன்.

ஒரு நாள் சுயம்பு அப்படி உட்கார்ந்து புத்தகத்தில் மெய்ம்மறந்திருந்த போது அங்கே ஒரு அற்புதம் நிகழ்ந்தது. ஒரு கையில் கோலக் குழலுடனும், இன்னொரு கையில் கோல மாப் பொடியுடனும் ஒரு பெண் வந்து நின்றாள். ஒரு நிமிஷம் நின்றிருப்பாள்; சுயம்பு அவளை ஏறிட்டுப் பார்க்கவுமில்லை. அவள் வந்திருப்பதைக் கவனிக்கவுமில்லை.

"கொஞ்சம் எழுந்திருக்கணும். கோலம் போடுகிற இடம் அது!" என்று கம்பீரமாக உத்தரவிடும் தோரணையில் கூறினாள் அந்தப் பெண். அப்போதுதான் சுயம்பு தலைநிமிர்ந்து பார்த்தான். அப்படியே அவன் அயர்ந்து போய் விட்டான்!

அந்தக் கோயில் சூழ்நிலையில், அமானுஷ்யப் பிரதேசத்தில், ஒரு தேவதை இடரென்று மனிதப் பெண்ணாக வந்து நின்ற மாதிரி தான் இருந்தது.

"கோலம் போடணும் என்கிறேன். எழுந்திருக்காமல் இப்படிப் பார்த்தால்?..." என்று ஒரு கேள்விக் கொக்கி போட்டு நிறுத்தினாள் அந்தப் பெண்.

"இதோ!" என்று எழுந்து அப்பால் நின்றான் சுயம்பு. கிராமத்துப் பெண்ணானாலும் இயற்கையான கம்பீரம் அவளிடம் இருக்கிறது என்று எண்ணினான் சுயம்பு.

"ஏன் தயக்கம்? போடலாமே!" என்றான் அவன், அவள் பேசாமல் நிற்பதைப் பார்த்து.

"போட வேண்டியதுதான். உட்கார்ந்த இடத்திலே அப்படியே போட்டு விட முடியுமா? மறுபடியும் கழுவிப் பெருக்கணும்... ஏன்? கோயிலில் இத்தனை இடம் இருக்கும் போது இங்கேதான் வந்து உட்காரணுமோ?' என்று துடுக்காகக் கேட்டாள் அவள்.

"கோலம் போட நீ இங்கேதான் இடம் பார்க்கணுமா? அந்தக் கேள்வி உன் காரியத்துக்குப் பொருந்தாதோ?" என்று விவாத முறையில் விடாமல் பதில் சொன்னான் அவன்.

அவள் கையிலிருந்த கோலக் குழலையும் மாப் பொடியையும் கீழே வைத்து விட்டுப் 'பரபர' வென்று திரும்பி நடந்தாள்.

சற்றைக்கெல்லாம் ஒரு செம்பில் தண்ணீருடன் வந்து 'மளமள' வென்று தண்ணீர் தெளித்துத் துடைத்துக் கோலம் போடத் துவங்கினாள். போட்டு முடித்த பின் அதைத் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே தன் உபகரணங்கள் சகிதமாகப் போய்க் கொண்டிருந்தாள்.

நின்ற நிலையிலேயே சுயம்பு அவளைப் பார்த்து, "கோலம் பிரமாதம்! ஒரு சந்தேகம்!" என்றான்.

"என்ன?" என்று இருந்த இடத்திலிருந்தே அவள் கேட்டாள்.

"இங்கே வந்தால்தான் சொல்லலாம்!" என்றான் சுயம்பு. அவள் ஒயிலாக அருகில் வந்து நின்றாள்.

"இந்தக் கோலத்தின் மேல் நான் உட்கார்ந்து கொள்ளலாமா?"

"அட! இது சுவாமிக்குப் போட்டதாயிற்றே! அதோ எதிரிலே சிவலிங்கம் தெரியவில்லை? புத்தி ஏன் இப்படிப் போகிறது? எந்த ஊர் இந்த சுப்ர தீபத்துக்கு?"

"இந்த ஊர்தான். வேண்டுமென்று நான் இருந்த இடத்திலே கோலத்தைப் போட்டு என்னை நிறுத்தி வைத்து விட்டாயே, உனக்கு என்ன லாபம்?"

"அட பாவமே! நீங்கள் இன்றைக்கு ஒரு நாளைக்குத்தானே இந்த இடத்தில் வந்து 'என் இடம்' என்று ஏதோ பேசுகிறீர்கள். எனக்கு விவரம் தெரிந்து பத்து வருஷங்களாக - இன சரி - இங்கே இந்தச் சின்னக் கைங்கர்யம் செய்து வருகிறேன். அந்தத் துப்பறிகிற நாவலை இந்த சுவாமி முன்னால் உட்கார்ந்து படிப்பதாகப் பிரார்த்தனை ஏதாவது இருந்தால் இன்றைக்கு ஒரு நாளைக்கு நின்று கொண்டே படித்து விட்டுப் போங்களேன்!" என்றாள் அவள்.

"அட! ஜோராகப் பேசுகிறாயே! உன் பேர் என்ன?"

"தெரிந்துதான் ஆகணுமோ? என் பேர் திரிபுரம்!"

"அது சரியான பெயர் உனக்கு! திரிபுரம் என்று கூப்பிடுகிறேன்."

"என்ன! அடி அம்மாடியோய்! இவர் கூப்பிடுகிறாராமே? எதற்காகக் கூப்பிடணுமாம்!" என்று சொல்லிக் கொண்டே திரும்பப் போய் விட்டாள் திரிபுரம். சிலை போல் நின்று அவள் நுழைகிற வீட்டை மட்டும் கவனித்து வைத்துக் கொண்டான் சுயம்பு.

★

அந்த வீட்டைத்தான் இப்போதும் கவனித்துக் கொண்டிருந்தான் அவன். திரிபுரத்தைத்தான் அவன் கண்கள் தேடி அலைந்தன; இப்போதும் அந்த வீட்டிலிருந்து அவள் வெளியே வர மாட்டாளா என்றுதான் அவன் கவனித்துக் கொண்டிருந்தான்.

அன்றைக்கும் இன்றைக்கும் நடுவில் முழுசாக ஒரு வருஷம் கடந்து விட்டிருந்தது. இதில் ஆறு மாதங்களுக்கு மேல் கயம்பு சிறையிலேயே காலம் கழித்திருக்கிறான். தனி நபர் சத்தியாக்கிரஹத்தில் கலந்து கொண்டு அவன் சிறை சென்றான். அதற்கும் முந்திய இடைக் காலத்தில் அவன் திரிபுரத்துடன் நன்றாகப் பழகத் தொடங்கிவிட்டான். அவன் சிறையிலிருந்து வெளி வந்ததும் இருவரும் திருமணம் செய்து கொண்டுவிட வேண்டுமென்று பிரதிக்ஞை செய்து கொண்டிருந்தனர். ஆனால், இப்படிப்பட்ட லட்சியக் காதலர்களுக்குச் சில பெற்றோர்கள் குறுக்கே நிற்பது இயல்பாக அமைகிற விஷயமாயிற்றே? 'தேசம் தேசம்' என்று அலைகிற ஓட்டாண்டி கயம்புவைப் பற்றி நினைக்க விரும்பவில்லை திரிபுரத்தின் தகப்பனார். ஒரு பெரிய மிளகு வியாபாரியின் பையன் நினைகிற பொன்னை சந்தர்ப்பத்தை அவர் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்.

ஆனால், நம்பிக்கை குறையாத கயம்பு இன்றைக்கும் திருபுரத்தைத் தேடிக் கொண்டு தான் வந்திருக்கிறான். அன்று மாலை வரையில் காத்திருந்து பார்த்து விட்டுப் பிறகு தைரியமாக வெளிக் கிளம்பி விசாரித்ததில் திரிபுரத்தின் குடும்பமே மாயவரத்துக்குப் போய் விட்டது என்று தெரிய வந்தது. அவன் மனம் பறந்தது. ஆனால், உடல் நகரத்தான் செய்தது.

★

**கா**வேரியாற்றங்கரை மீது கால்வாசி நடந்து கொண்டிருந்தான் கயம்பு. இரண்டு நாட்களாக உடம்பில் வற்றியிருந்த தெம்பு மீண்டும் இப்போது ஊறி யிருந்தது. ஊருக்குக் கிழக்கில் வெகுதூரத்தில் காவேரியாற்றங்கரை மீது ஒரு மண்டபம் இருந்தது. அதை நோக்கித்தான் அவன் உற்சாகமாகச் சென்று கொண்டிருக்கிறான். அன்று அந்தி கூடின நேரத்தில் அவன் திருபுரத்தை எதிர்பாராவிதமாய்ச் சந்தித்து விட்டான்.

காவேரி ஸ்நான கட்டத்துக்கு எதிரிலுள்ள வாகடத்தில் பட்டாணிக் கடை முன் அவன் நின்று கொண்டிருந்தபோது கையில் ஒரு பையுடன் — சிரித்த முகத்துடன் — திரிபுரம் வந்து கொண்டிருந்தாள். அவளைக் கண்டதும் அவன் அடைந்த மகிழ்ச்சி....

பேசிக்கொண்டே யிருந்தனர் இருவரும். நடுவில் திடீரென்று கேட்டாள் திரிபுரம். "ஆமாம்; இப்படி ஜெயிலிலிருந்து தப்பி வந்திருக்கிறீர்களே, இது சரியான காரியமா? உங்களைக் கண்டு பிடித்தால் ஒன்றுக்கு மூன்று தண்டனை கிடைக்குமே!" என்றாள்.

"என்ன செய்கிறது, திரிபுரம்? தாயாரைப் பார்க்கவென்று புறப்பட்டு வந்து விட்டேன். அந்தக் காரியம் ஆயிற்று. பிறகு உன்னையும் காணாமல் இந்தக் கண்கள்.....என்ன சொல்வது போ!"

"அது சரி; நீங்கள் செய்தது தவறான காரியமில்லையா?"

"தவறுதான்; தவறு இல்லைகூட! நமது தேசத்துக்காக நாம் பாடுபடுவதற்குக் குறுக்கே ஒரு அன்னியன் நின்று, நம்மையும் மடக்கிச் சிறையில் போட்டால் அது எந்த விதத்தில் நியாயம்? அதை மீறி வருவது ஒரு பெரிய குற்றமாக எனக்குப் படவில்லை!"

"சரி; நீங்கள் எத்தனை நாட்களுக்குத்தான் தலைமறைவாக இருக்க முடியும்?"

"என்னால் முடிந்த வரையில்! அவர்களாக மடக்கிப் போடும் ஒரு சிறையில் கிடப்பதை விட நானாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் என் சொந்தச் சிறையில் நான் இருக்கிறேன்."

"அப்படி எத்தனை காலத்துக்கு?"

"ஆயுள் வரையில் வேண்டுமானாலும் இருக்கத் தயார். ஆனால், நடுநடுவே நான் வேண்டும்போது என் திரிபுரத்தை வந்து பார்த்துப் போகும் ஒரு உரிமை மட்டும் வேண்டும். அது போதும்!"

"நாளைக்கு என் தகப்பனார் நான் உங்களை மணந்து கொள்வதை அனுமதிக்கிறார் என்று வைத்துக் கொள்வோம்; நீங்கள் இருக்கிற நிலையில் எப்படி நம்முடைய திருமணம் நிறைவேறும்?"

"இப்போது போகிற போக்கைப் பார்த்தால் சீக்கிரமே நமக்கு விடுதலை கிடைத்து விடும் என்று நினைக்கிறேன், திரிபுரம்! நாடு விடுதலை யடைந்து விட்டால் அரசியல் கைதிகள் பிரச்னை முதலில் தீர்ந்து விடும். அப்படியே இல்லாது போனாலும் நம் திருமணத்தை முடித்துக் கொண்டு நமது சுதந்திரப் பெருநாட்டில் எத்தனை வருஷ காலம்

வேண்டுமானாலும் சிறைவாசம் அநுபவிக்கத் தயாரா யிருக்கிறேன். நீ முதலில் உன் தந்தையிடம் அநுமதியைப் பெற்றுக் கொள்!''

''சரி; நான் நாளைக்கே இந்த இடத்தில் தங்களைச் சந்திக்கிறேன். என் தகப்பனாரின் அநுமதியையும் பெற்றுக்கொண்டு வந்துவிடுகிறேன்!'' என்று சொல்லி விட்டு,''நான் வரட்டுமா?'' என்று கேட்டாள் திரிபுரம்.

அவளைப் பிரிய மனமில்லாமல் அவளையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான் சுயம்பு. அவன் பார்வையில் முகம் கவிழ்ந்த திரிபுரம் அந்த நிலையிலேயே சுற்று வட்டத்தில் ஒரு முறை பார்வையைச் செலுத்தினாள். லாகடத்து உள் மதில் சுவர்மேல் ஒரு மயில் உட்கார்ந்து கொண்டிருந்த காட்சி ஓவியம்போல் அவள் மனத்தில் பதிந்தது. பின்புறமிருந்து தோகை விரித்தாற்போல் இன்னொரு மயிலும் அழகான நடைபோட்டு ஏறக்குறைய அவர்கள் இருந்த இடத்துக்கே வந்தது. ஆயிரம் ஆனாலும் வராத மாயூரத்தின் ஒரு ஜீவிய அம்சமான லாகடத்தில் இந்த மயில்கள் ஆண்டுகள்தோறும் அளித்து வரும் காட்சி....

அதையும் மிஞ்சியதாக இருந்தது, இன்னொரு அற்புதமான காட்சி. திரிபுரத்தின்மீது பார்வையை நிலைக்க விட்டுச் சிலைபோல் நின்றிருந்த சுயம்புவின் தோள்மேல் 'விருட்'டென்று வந்து அமர்ந்தது ஒரு கிளி. இயல்பாக அதைக் கைகளிலே பற்றினான் சுயம்பு. அவன் கைவிரல்களுக்கிடையில் ஒரு பித்தளைச் சங்கிலியும் சுற்றிக் கொண்டது.

''சபாஷ்!'' என்றான் அவன்!

''சபாஷ்! எல்லாரும் நல்லவர்கள்! சுயம்பு கெட்ட பய!'' என்றது கிளி. அதே கிளிதான்–அடிமை வாழ்வகன்று சுதந்திரம் எய்திய அந்தச் சுகப் பிராணிதான்!

''இது என்ன கூத்து?'' என்றாள் திரிபுரம்.

''கூத்துதான்! எனக்கு இந்த பிரிட்டிஷ் சர்க்கார் விடுதலை யளிக்க மறுத்ததை ஆட்சேபிக்கும் வகையில் உங்களூரில் இந்த விடுதலை விழா நடத்தினேன்!'' என்று இன்னும் கொஞ்சம் தெளிவாகக் கூறினான் சுயம்பு.

திரிபுரத்துக்கும் அறிமுகமான கிளிதான் அது. அவள் குழந்தையா யிருந்த காலம் முதல் அதற்குப் பாலும் பழமும் கொடுத்து வளர்த்திருக்கிறாள். ஆனால், அதற்கு விடுதலை அளித்தவன் சுயம்பு!

''அது சரி; நீங்கள் எங்கே தங்கி யிருக்கிறீர்கள்?'' என்று திரிபுரம் கேட்டாள்.

''காவேரிக் கரையில் ராஜாளி மண்டபம் என்று ஒன்று இருக்கிறதே தெரியுமா?''

''தெரியும். அங்கேயெல்லாம் போய் இந்த இருட்டிலே ஏன் தங்கியிருக்கிறீர்கள்?''

''இந்தக் கட்டையை எதுவும் ஒன்றும் செய்யாது, திரிபுரம். நீ கவலைப்படாதே! போய் வா. அவசரமானால் நான் சொன்ன இடத்தில் சந்திக்கலாம்.''

திரிபுரம் போய் விட்டாள். அவளையே இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டு லாகடத்தில் நின்று கொண்டிருந்தான் சுயம்பு. 'விர்'ரென்று கையிலிருந்த சங்கிலி சுழன்று கிளி பறந்து சென்ற பிறகுதான் அவனுக்குச் சுய உணர்வு வந்தது. மௌனமாக ராஜாளி மண்டபத்துக்குச் சென்றான்.




கண் டாக்டர் :— உங்க பேரு என்னய்யா?...
கண் நோயாளி :— கண்ணாயிரம்..

மறு நாள் அவன் கண் விழித்தபோது— பலவந்தமாகக் கண் விழிக்கத் தூண்டப்பட்டபோது—காலை மணி எட்டு இருக்கும். அவன் விழித்த இரு கண்களின் எதிரிலும் இரண்டு போலீஸ் ஜவான்கள் நின்று கொண்டிருந்தனர். அவர்கள் கையிலிருந்த விலங்கைக் கண்டதும் சுயம்புவுக்குத் தான் காண்பது கனவல்ல என்று தெரிந்தது.

''எழுந்திருங்க'' என்றான் ஒரு ஜவான்.

அஞ்சாமல் கம்பீரமாக எழுந்து நின்ற சுயம்புவின் கைகளில் ஒரு ஜவான் விலங்குகளை மாட்டினான். இன்னொரு ஜவானின் கையிலிருந்த ஒன்றை அகன்ற கண்களுடன் உற்றுப் பார்த்தான் சுயம்பு. ஒரு காலில் பிணைத்த பித்தளைச் சங்கிலியுடன் அந்தக் கிளி அந்த ஜவானின் பிடியில் இருந்தது.

''உனக்கு விடுதலையளித்த எனக்கு உண்மையான விடுதலையை உணர்த்துகிற நோக்கத்துடன் என்னைக் காண்பித்து விட்டாயா என் அருமைக் கிளியே?'' என்று கேட்டான் சுயம்பு. அது அதன் காதில் விழுமுன், 'ராஜாளி மண்டபத்திலே தங்கி யிருக்கிறேன். சுயம்பு கெட்டபய!' என்று பாடம் படித்தது.

அந்த நிலையிலும் சுயம்பு அதன் பாடத்தைக் கேட்டு வாய்விட்டுச் சிரித்தான்.



திருக்குளத்துச் சிற்றலைகள் என்னையும் நண்பரையும் எங்கள் சூழ்நிலைக்குத் திரும்பக் கொணர்ந்தன.

''இது என்ன, நிஜமாக நடந்த கதையா?'' என்று வெகுளிபோலக் கேட்டேன்.

''எப்படி வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளுங்களேன். எனக்குத் திருப்திதான். எப்படியிருப்பினும் அந்தக் கிளியின் தன்மை ஏதாவது மாறும் என்று நினைக்கிறீர்களா?'' என்று கேட்டார் நண்பர்.

''அது எப்படி மாறும்?'' என்று சொல்லிக் கொண்டு எழுந்தேன்.

தீபாராதனையைக் குறிக்கும் ஆலய மணி அழகாக ஒலித்தது.

# பறவைக் கப்பல்

அதோ! அதோ! பறவைக்கப்பல்
ஆகாயத்தில் பறக்குது.

அதிச யமாய் எல்லோரையும்
அங்கே பார்க்கச் செய்யுது.

வெள்ளைப் பறவை போலே அதுவும்
மேலே நமக்குத் தெரியுது.

மேகத் துள்ளே புகுந்து புகுந்து
வேடிக் கையும் செய்யுது.

வாயை மூடிப் போடும் சத்தம்
வந்து காதில் விழுகுது.

வாலி ருந்தும் சேஷ்டை யில்லை;
வழியைப் பார்த்துப் போகுது.

மனிதர் களைத் தூக்கிக் கொண்டு
வானத் திலே பறக்குது.

வயிற்றுக் குள்ளே பத்தி ரமாய்
வைத்துக் கொண்டே செல்லுது.

காடு மலை மேடு களைக்
கடந்து கடந்து போகுது.

கண்ணை மூடித் திறப்ப தற்குள்
காத தூரம் தாண்டுது.



# மனப்புயல் சித்திரத் தொடர்கதை (3)
















ரமணி! உன் பேச்சைக் கேட்டு மோசம் போனேனடா!


என்ன விசயம் குடி மூழ்கி விட்டது?


நான் முரளி சேருமாவைப் பற்றி எழுதியது பிரின்ஸ்பாலுக்குத் தெரிந்து விட்டதடா!


தெரிந்தால் என்ன? டீஸியை வாங்கி விடுவாரா?


ரமணி! ரமணி!!


ரமணி இது என்னடா வைத்திருக்கிறாய்?
ஒரு செய்தி. ஆனால் இவன் இருக்கிறானே!
தொடரும்



## குட்டிக் கதை

## பாலர் மலர்

குமாருக்கு நாடகம் பார்க்க ரொம்ப ஆசை. நாடகக்கம்பெனியில் உள்ளவர்கள் எல்லாரையும் சிநேகம் பிடித்து வைத்திருந்தான்.

ஒரு நாள் நாடகக் கம்பெனிக்குப் போய் அங்கிருந்த உடைகளைப் பார்த்துக் கொண்டிருக்கும்போது ஒரு சிங்க முகத்துடன் கூடிய சிங்க உடையைப் பார்த்தான்.

"ஐயா! இந்த உடையை விலைக்குத்தர முடியுமா?" என்றான் குமார்.

"தம்பி! இதை விலைக்குத் தர முடியாது. வேண்டுமானால் சிறிது நேரம் அணிந்து கொள்வதற்கு அனுமதி தருகிறேன்!"

"ஐயா! ஒரு நாளைக்காவது நான் போட்டுப் பார்த்துவிட்டுப் பிறகு திருப்பிக் கொண்டு வந்து தருகிறேன்" என்றான் குமார்.

அவரும் இசைந்தார். அவரிடமிருந்து அதை வாங்கிக் கொண்டு பக்கத்தில் உள்ள தன் வீட்டுக்குப் போனான். குமார் சிங்க உடையில் புகுந்து கொண்டு தோட்டத்திலுள்ள தன் சிநேகிதர்களைக் கர்ஜனை போட்டு விரட்டியடித்தான். அவன் நண்பர்கள் அரண்டு ஓடினர். சற்றுநேரத்துக்கெல்லாம் ஒரு பெரிய சிங்கம் அங்கே வந்தது. அதைக் கண்டு குமார் பயந்து நிஜ சிங்கமே வந்து விட்டதென்று ஓட்டம்பிடித்தான்.

அது நிஜ சிங்கம் அல்ல, நாடகக் கம்பெனியில் சிங்க வேஷம்போடும் கைதேர்ந்த சின்னப்பன்தான் என்பது தெரிந்தது. அடுத்த கணம் அந்த உடையை நாடகக் கம்பெனியில் கொண்டு போய்க் கொடுத்து விட்டான் குமார்!



மேலே உள்ள இந்த கோடுகளை ஒன்றுக்கொன்று ஒரு அங்குலம் சம தூரத்தில் வரைந்து கொள்ளுங்கள். சதுரக்கோணமாக் அந்தக் காகிதத்தை வெட்ட வேண்டும். வெட்டிய பிறகு அந்தக் காகிதத்தில் நான்கு கோடுகளே இருக்க வேண்டும். வெட்டிய துண்டும் தனியாக இருக்கக் கூடாது. முடியுமா, பாருங்கள். விடை கீழே.



பாட்டி:—டேய், முத்து! நீ எனக்கு ஒரு முத்தம் கொடுத்தால் உனக்கு அரையணா தருவேன்.

பையன்:—போ, பாட்டி! விளக்கெண்ணெய் சாப்பிடவே அம்மா எனக்கு ஒரு அணா தருகிறாள்! நான் வரமாட்டேன்!





கனமான வெள்ளை அட்டையை இரண்டரை அங்குலம் நீளம் இரண்டு அங்குலம் அகலத்துக்கு வெட்டி எடுத்துக் கொள்ளுங்கள். அதன் ஒரு பக்கத்தில் குதிரை ஓடுவது போல் எழுதுங்கள். மறு பக்கத்தில் குதிரை சவாரி செய்பவனைத் தலை கீழாக எழுதிக் கொண்டு, அட்டையை இரு பக்கங்களில் துவாரம் போட்டு நூல் கயிற்றை மாட்டி அட்டையைச் சுற்றினால் குதிரை மேல் ஒருவன் சவாரி செய்வதை நீங்கள் பார்க்கலாம்.



முதல் புதிருக்கு விடை

படத்தில் உள்ளது போல் குறுக்கே முதல் கோட்டின் தலையிலிருந்து ஐந்தாவது கோட்டின் அடிபாகம் வரையில் வெட்டிப் படத்தில் உள்ளதுபோல் நகர்த்தினால் நான்கு கோடுகள் மாத்திரம் இருப்பதைப் பார்க்கலாம்.


புத்துணர்ச்சி
யுடன்
இருங்கள்




HAMĀM
TOILET SOAP

# மாயப் பந்து

## 8. மந்திரம் பலிக்கவில்லை!

மறு நாள் அதிகாலையில் மால்கோஷும் கலாவும் தாற்காலிகமாக விடைபெற்றுக் கொண்டு போலீஸ் அதிகாரி கூறிய குளத்தை நோக்கிச் சென்றார்கள். ஆனால் அவர்களுடன் போலீஸ் அதிகாரியோ, மற்றவர்களோ மந்திரக் கிழவிக்குப் பயந்து பின்தொடரவில்லை.

குறிப்பிட்ட குளத்துக்கு அருகில் மால்கோஷும், கலாவும் வந்தார்கள். மால்கோஷ், "கலா! தைரியமாக இரு. நானும் தைரியமாக இருக்கிறேன். உன் தோளில் இருந்து எக்காரணத்தை உத்தேசித்தும் முத்து மாலை இருக்கும் பையை எடுத்துக் கீழே வைக்காதே. நானும் பந்தை என்னிடமே வைத்துக் கொள்ளுகிறேன். மந்திரக் கிழவியின் சூழ்ச்சி நம்மிடத்தில் எவ்வளவு தூரம் பலிக்கிறது என்று பார்க்கலாம்" என்று கூறினான்.

பிறகு இரண்டு பேரும் அக்குளத்தைச் சுற்றிச்சுற்றிப் பலமுறை வந்தார்கள். அவர்களைத் தவிர வேறு ஒருவரும் அக்குளத்தின் அருகில் வரவில்லை. யாராவது தவறி வந்தால் கூடப் பயந்து ஓடுவதுபோல ஓட்டமாக ஓடி விடுவார்கள்.

சற்று நேரம் கழித்து ஆடு மாடுகள் மேய்க்கும் ஒரு இடைப் பையன் மால்கோஷை நெருங்கினான். அவன் பார்ப்பதற்கு அழகாக இருந்தான். அவன் தன்னையே உற்று நோக்கிக் கொண்டிருப்பதைப் பார்த்த மால்கோஷ், "என்ன பையா! என்னையே எதற்குக் கூர்ந்து பார்க்கிறாய்?" என்று கேட்டான்.

"இல்லை, ஐயா! நான் உங்களைப் பார்க்க வில்லை. உங்கள் பையிலே ஏதோ பந்து இருப்பதுபோல் தெரிகிறது. சிறிது நேரம் தமாஷாக விளையாடலாமா என்று கேட்பதற்குத்தான் நிற்கிறேன்" என்றான் அந்தச் சிறுவன்.

உடனே மால்கோஷ் அந்தப் பையனின் மீது அன்பு கூர்ந்து, "பையா! என் பையில் பந்து இருக்கிறது என்பது உண்மைதான். ஆனால் அது விளையாடும் பந்து அல்ல. அது ஒரு மாயப் பந்து" என்று சொன்னான்.




அந்தச் சிறுவன் "ஐயா! ஐயா! மாயப் பந்து என்றால் அதன் உதவியைக் கொண்டு எனக்கு இப்பொழுது தின்பண்டங்களெல்லாம் வரவழைத்துக் கொடுப்பீர்களா?" என்று கெஞ்சும் குரலில் கேட்டான்.

"பையா! உனக்கு இந்தப் பந்தைப் பற்றி ஒன்றும் தெரியாது. மிகவும் அவசியமான காரியத்துக்குத் தான் இதை உபயோகப் படுத்தலாம். உனக்குத் தின்பண்டங்கள் வேணும் என்றால் உனக்குப் பணம் தருகிறேன். நீ போய் என்ன வேண்டுமோ, அதைச் சமீபத்தில் உள்ள கடையில் வாங்கிக்

கொள்'' என்றான் மால்கோஷ். அதைக் கேட்ட பையன் ''எனக்கு மந்திரத்தினால் வரவழைத்துத் தின்பண்டங்கள் கொடுத்தால் கொடுங்கள். இல்லாவிட்டால் வேண்டாம்'' என்றான்.

'' தம்பி! அது முடியாது '' என்று பதில் அளித்தான் மால்கோஷ். உடனே பலமாக அழ ஆரம்பித்தான் பையன். விசித்தபடியே, ''ஐயா! எனக்கு உங்கள் மாயப் பந்தினால் ஒன்றும் வரவழைத்துத் தராவிட்டாலும் பந்தையாவது நான் ஒரு தடவை பார்க்கலாமா?'' என்று கேட்டான். அவன் மீது இரக்கம் கொண்ட மால்கோஷ்



பந்தைத் தன் பையிலிருந்து எடுத்துத் தன்னுடைய கைகளிலேயே வைத்துக் கொண்டு காண்பித்தான்.

"ஆஹா! இது புதிய பந்தைப் போலவே இருக்கிறதே. இதைக் கீழே போட்டால் மற்றப் பந்துகளைப் போல் எழும்புமா?'' என்று கேட்டான் சிறுவன். உடனே மால்கோஷ், '' ஆமாம்! மற்றப் பந்துகளைப் போலவே துள்ளும். இதோ பார், உனக்காகப் பந்தைக் கீழே அடித்துப் பிடிக்கிறேன்'' என்று பந்தை மெதுவாகக் கீழே அடித்தான். பந்து எழும்பி மால்கோஷின் கைக்கு வரும் சமயத்தில் பையன் 'சடால்' என்று தன் இடது கையினால் பந்தைக் குளத்துப்பக்கம் தள்ளினான். அடுத்த நிமிஷம் பந்து குளத்தில் விழுந்தது. உடனே பையனும் குளத்தில் குதித்துப் பந்தை எடுத்துக் கொண்டு குளத்துக்கு அடியில் போனான். போய் இரண்டு மூன்று நிமிஷங்களுக்கெல்லாம் குளத்தின் தண்ணீரின் மேலே மூன்று முறை குமிழிகள் கிளம்பின. எல்லாம் சில வினாடிகளில் நடந்து விட்டன.



மால்கோஷ் தான் ஏமாந்ததைக் குறித்து மிகவும் வருத்தப்பட்டான். '' கலா! பையனாக வந்து நம்மை ஏமாற்றிப் பந்தை எடுத்துக் கொண்டது மந்திரக் கிழவியாகத்தான் இருக்க வேண்டும். நீ ஜாக்கிரதையாக இரு. இதோ சீக்கிரத்தில் திரும்பி வந்து விடுகிறேன்!'' என்று கூறிவிட்டு அடுத்த நிமிஷம் குளத்தில் குதித்தான். குளத்துக்கு அடியில் சென்றவுடன் ஒரு இரும்புக் கதவைப் பார்த்தான். 'இதுதான் மந்திரக் கிழவியின் மர்ம அறையாக இருக்கும்' என்று நினைத்தான். 'யாரும் தண்ணீருக்குள் சொல்லக்கூடிய வார்த்தைகள் மூன்றுதான் இருக்கின்றன. அதைத்தான் மந்திரக் கிழவி கதவைத் இறக்க மந்திரமாக உபயோகிக்கிறாள் போல இருக்கிறது. எதற்கும் என்னுடைய அதிர்ஷ்டத்தை இப்போதே பரிசோதிப்போம்' என்று இரும்புக் கதவைத் தொட்டான். பிறகு குழந்தைகள் தண்ணீருக்குள் விளையாடுவார்களே, அதைப் போல வாய்க்குள் தண்ணீரில் வராமல் இரண்டு உதடுகளையும் வெளிக்குக் கொண்டு வந்து, '' பிர்ர்.....'' என்ற சத்தத்தை உண்டாக்கினான். அது மாதிரியாகவே




மூன்று முறை உபயோகிக்கவே இரும்புக் கதவு படார் என்று திறந்து கொண்டது. உள்ளே நிறையத் தண்ணீர் இருந்தது. உள்ளே சென்றதும் கதவைத் தாளிட்டான். அங்கே நல்ல இருட்டாக இருந்தது. சமீபத்தில் நிறையப் படிகள் தோன்றின. படிகளின் மீது மெதுவாக ஏறினான். படிகளில் ஏற ஏறத் தண்ணீர் குறைந்து கொண்டே வந்தது. பிறகு தண்ணீரே இல்லை. படிகள் சுரங்கம் போல ஒரு இடத்துக்கு அழைத்துச் சென்றன.

உள்ளே சென்றதும் நல்ல வெளிச்சம் தோன்றியது. அங்குள்ள சாமான்களைப் பார்த்ததும் மால்கோஷுக்கு ஆச்சரியம் உண்டாயிற்று. விலை உயர்ந்த ஆடைகளும், ஆபரணங்களும் இருந்தன. 'இந்த அறையில் ஒருவரையும் காணவில்லையே! குளத்தில் குதித்த பையனையும் இங்கே காணவில்லை. என் பந்தின் கதி என்ன ஆயிற்று?' என்று மனத்தில் எண்ணிக் கொண்டிருக்கும் பொழுது அவன் எதிரே வலது கையில் ஒரு கழியுடன் மந்திரக் கிழவி தோன்றினாள்.

தன்னுடைய இரகசிய அறையில் எதிர்பாராத விதமாக மால்கோஷைப் பார்க்கவே மந்திரவாதிக் கிழவி கோபத்தோடு, "நீ எப்படி இங்கே வந்தாய்?" என்று கேட்டாள்.

"நீ எப்படி வந்தாயோ அப்படியே தான் வந்தேன்" என்றான் மால்கோஷ்.

"மால்கோஷ்! நீயும் உன் தங்கையும் எதற்காக இந்தப் பட்டணத்துக்கு வந்திருக்கிறீர்கள் என்று தெரியும். என்னை நீங்கள் அழிக்க வந்திருக்கிறீர்கள். ஆனால் நீங்கள் அழிந்து போவது நிச்சயம். இனிமேல் இந்தக் குளத்தை விட்டு நீ வெளியில் போகாதபடி இப்பொழுதே செய்கிறேன். ஆனால் என்னுடைய மந்திர சக்தியினால் அல்ல. எனக்கு எதிராக உபயோகிப்பதற்காக நீ கொண்டு வந்த மாயப் பந்தையே உனக்கு எதிராக உபயோகிக்கிறேன், பார்!

"உன்னை மீனாக மாற்றுகிறேன். அடுத்த நிமிஷம் நீ துள்ளித் துள்ளிக் குளத்தின் தண்ணீரில் விழ வேண்டியதுதான்" என்று பந்தைக் கீழே போட்டுத் தன் எண்ணத்தை வெளியிட்டுப் பந்து எழும்பியவுடன் மறுபடியும் பிடித்துக் கொண்டாள் கிழவி. ஆனால் அவள் எண்ணியபடி மால்கோஷ் மீனாக மாறவில்லை.

"என்னை ஏதோ ஏமாற்றுகிறாய். இப்பொழுதே உனக்குத் தீராத துக்கத்தை உண்டாக்குகிறேன்" என்று பந்தை மால்கோஷின் மீது கோபமாக விட்டெறிந்துவிட்டு அவ்விடத்தை விட்டு மறைந்தாள்.

அடுத்த நிமிஷம் மந்திரக் கிழவி மிகுந்த கோபத்துடன் குளக்கரையில் தனியாக நின்று கொண்டிருந்த கலாவுக்கு எதிரில் மந்திரக் கிழவியாகவே கையில் ஒரு கழியுடன் தோன்றினாள். எப்படியும் கலாவை மால்கோஷ் கண்களுக்குத் தெரியாமல் எங்கேயாவது அப்புறப்படுத்த வேண்டும் என்று நிச்சயித்தாள். தன்னிடத்திலுள்ள கழியால் கலாவைப் பலமாக அடிப்பது போலப் பாசாங்கு செய்து கழியை அவளிடம் கொண்டு போனாள். கலா தன்மீது அடிவிழாமல் பாதுகாப்பது போலத் தனது வலது கையினால் அந்தக் கழியைப் பிடித்துக் கொண்டாள். என்ன ஆச்சரியம்! அடுத்த நிமிஷம் மந்திரக் கிழவி ஆகாயத்தை நோக்கிக் கழியைக் கையில் வைத்துக் கொண்டே பறந்தாள். கூடக் கலாவும் அவள் கழியைப் பிடித்துக்கொண்டே சென்றாள். (தொடரும்)

## தனது கவுனே வெண்மையென அவள் நினைத்திருந்தாள்
## ஆனால், ரின்ஸோவினால் சலவை செய்த மீனாவின் கவுனைப் பார்த்ததும் பிரமித்தாள்!

**உண்மை! ரின்ஸோ அதிவெண்மையாக வெளுக்கிறது**

அற்புத சோப் பவுடரான ரின்ஸோவினால் சலவை செய்யுங்கள். உங்களுடைய வெண்மை ஆடைகள் கண்ணைப் பறிக்கும் வெண்மையாக ஆகிவிடும்! வர்ணத் துணிகளும் அதிகப் பிரகாசமடையும்! அடித்துத் துவைக்கவோ, அழுத்தித் தேய்க்கவோ வேண்டியதில்லை. ரின்ஸோவின் பிரமிக்கத்தக்க விறுவிறுப்பு வாய்ந்த நுரை எல்லா அழுக்குகளையும் கழுவிக் களைந்துவிடும். கண்ணைப் பறிக்கும் அத்தகைய அதிகப்படி வெண்மைக்கு நீங்கள் சேர்க்க வேண்டியது வேறொன்றுமில்லை. குடும்பத்தின் சகல சலவைகளுக்கும் ரின்ஸோ உபயோகியுங்கள்!




. . . சலவை செய்ய மிகவும் சுலபமானது

**இந்த அற்புத சோப் பவுடர்**

R. 7-50 TM



# மலைச்சாரல்

அத்தியாயம் 21

## மாறாத உறுதி

ஜயந்தி வாசலுக்குச் சென்றபோது அங்கே முகுந்தன் வந்து உட்கார்ந்திருப்பதைக் கண்டு திகைத்துப் போனாள். அவருடன் ஒரு இளம் வாலிபன் இருப்பதையும் கண்டாள். முகுந்தனுக்கும், கருணாகரனுக்கும் உள்ள விரோதம் தெரிந்ததிலிருந்து அவளால் முகுந்தனுடன் முன்போலச் சகஜமாகப் பேசிப் பழக முடியவில்லை. முகுந்தனுக்கு நிறையத் தென்னந் தோப்புகள் இருந்தன. தேங்காய்க் கொப்பரைகளை அவரிடமிருந்து ஏராள மாக விஜயராகவன் வாங்குவது வழக்கம். இந்தத் தடவை அவரிடம் வழக்கத்தை விடக் குறைவாக வாங்கியிருந்தார். ஆகவே முகுந்தன் நேரில் அதைப் பற்றிக் கேட்டுத் தெரிந்து கொள்வதற்காக வந்திருந்தார்.

''அப்பாவைப் பார்க்க வந்தேன். இருக்கிறாரா?'' என்று கேட்டார்.

''இருக்கிறார்'' என்று ஒரே வார்த்தையில் பதில் சொல்லி விட்டுத் தன் தகப்பனாரின் அறையை அடைந்தாள். முகுந்தன் வந்திருக்கிறார் என்று கூறியதும் விஜயராகவன் அவரை வரவேற்பதற்கு வெளியே வந்தார்.

முகுந்தன் எழுந்து நின்று, ''இவன் என்னுடைய மகன் அச்சுதன். உங்களுக்குத் தெரியுமல்லவா ?'' என்று கேட்டார்.

''ஓ. தெரியுமே! நான் பார்த்திருக்கிறேன். சில நாட்களுக்கு முன் ஒரு சிறுத்தையைக் கொன்றவன் இவன்தானே. அச்சுதனின் பெயர் அப்போது பத்திரிகைகளி லெல்லாம் பிரமாதமாக அடிபட்டதே'' என்று சொல்லிக் கொண்டே அவர்களைத் தம் அறைக்கு அழைத்துச் சென்றார் விஜயராகவன்.

ஜயந்திக்குத் தன் தந்தை அவர்களுடன் அவ்வளவு கலகலப்பாகப் பேசியது பிடிக்கவில்லை. அச்சுதன் அவன் தந்தையைப் பார்த்து, ''நான் போய் விட்டு அரை மணியில் வருகிறேன்'' என்றான்.

# மாதவி

அவன் வெளியே போய்க் காரில் ஏறிக் கொண்ட போது ஜயந்தியை ஒரு தடவை திரும்பிப் பார்த்தான். அவனுடைய பார்வையில் ஏதோ பொருள் இருந்ததாக ஜயந்திக்குத் தோன்றியது. ஆனால் அவள் அதைச் சிறிதும் பொருட்படுத்தவில்லை.

தன் தந்தையும், முகுந்தனும் என்ன பேசிக் கொள்கிறார்களோ என்று எண்ணமிட்டுக் கொண்டே அவள் மாடிக்குப் போனாள். தன் அறையில் ஒரு சாய்வு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு ஒரு துப்பறியும் நாவலை எடுத்து வைத்துக் கொண்டு படிக்கத் தொடங்கினாள்.

சற்று நேரத்துக் கெல்லாம் அவளுடைய தந்தை மாடிக்கு வந்து, 'ஜயந்தி!' என்று அழைத்தபோது அவளுக்கு ஏதோ முக்கியமான விஷயம் நடந்திருக்கிறது என்று உடனே தெரிந்து விட்டது. வழக்கமாக அவர் ஜயந்தியைக் கூப்பிட்டுத்தான் அனுப்புவார். அவளுடைய அறைக்கு அவர் வந்தால் ஏதோ ரொம்ப முக்கியமான காரியமாகத்தான் இருக்கும்.

ஜயந்தியின் அறை மிகவும் அழகாக இருந்தது. ஒரு பக்கம் பெரிய அலமாரியில் அடுக்கடுக்காகப் புத்தகங்கள் வைக்கப்பட்டிருந்தன. ரகம் வாரியாக அவைகளை அவள் பிரித்து அடுக்கியிருந்ததே ஒரு அழகாக இருந்தது. அவள் வயதில் சிறியவளாக இருந்த போதிலும் படிப்பில் அளவில்லாத ஆர்வம் உள்ளவள். அலமாரியில் இருந்த அத்தனை ஆங்கில, மலையாள, தமிழ்ப் புத்தகங்களையும் தம் குமாரி படித்திருக்கிறாள் என்று நினைத்த போதே விஜயராகவனுக்குப் பெருமிதம் உண்டாயிற்று. 'நல்ல பெண். நன்றாக இருக்க வேண்டும்' என்று தம் மனத்துக்குள் நினைத்துக் கொண்டார்.

ஆனந்தி



சிறந்த குழந்தை இலக்கியங்கள் எழுதி மத்திய சர்க்கார், மாகாண சர்க்கார், கல்வி இலாகா பரிசுகளைப் பெற்ற குழந்தைக் கவிஞர் திரு அழ. வள்ளியப்பாவைப் பாராட்டித் தமிழ் புத்தாண்டு தினத்தன்று புதுக்கோட்டை குழந்தை எழுத்தாளர் இளைஞர் சங்க அங்கத்தினர்கள் ஒரு தேநீர் விருந்து அளித்தனர். கூட்டத்துக்கு திரு 'அன்பு' சந்தான கிருஷ்ணன் தலைமை வகித்தார். நகரில் உள்ள எழுத்தாளர்கள் இதில் கலந்துகொண்டு சிறப்பித்தனர்.

ஒரு பக்கம் நிலைக் கண்ணாடி பதித்த பெரிய அலமாரி இருந்தது. அதில் ஜயந்தியின் பிரதிபிம்பம் தெரிந்தது. விஜயராகவனுக்குத் தம் முதல் மனைவியின் ஞாபகம் வந்தது. அவளும் கிட்டத்தட்ட இதே மாதிரிதான் இருப்பாள் என்று எண்ணிக் கொண்டார். ஜயந்தி இவ்வளவு கெட்டிக்காரியாகவும், புத்திசாலியாகவும் இருப்பதை அவள் பார்த்திருந்தால் எவ்வளவு சந்தோஷப்படுவாள் என்று எண்ணினார்.

"என்ன அப்பா! ஒன்றும் பேச மாட்டேனென்கிறீர்களே?"

"ஒன்றுமில்லை, அம்மா! உன் அம்மாவின் ஞாபகம் வந்தது. நீ இவ்வளவு சமர்த்தாக இருப்பதைப் பார்த்தால் அவளுக்கு எவ்வளவு திருப்தியாக இருக்கும் என்று நினைத்துக் கொண்டேன்."

ஜயந்திக்குச் சிறிது சங்கோஜமாக இருந்தது. அவர் மனம் விட்டுப் பேசக் கூடியவரல்ல. ரொம்பக் கனிந்து கூறும் வார்த்தைகள் அவை என்று தெரிந்தபடியால் அவளாலும் ஒன்றும் பதில் சொல்ல முடியவில்லை.

பிறகு அவரே தொடர்ந்து, "உன்னுடைய வாழ்க்கை பரிபூரண சந்தோஷத்துடன் விளங்க வேண்டும் என்று நான் ஆசைப்படுகிறேன், ஜயந்தி. உன் அம்மா இருந்திருந்தால் அதில் பாதிப் பொறுப்பு அவளுடையதாக இருந்திருக்கும்" என்று கூறி நிறுத்தினார்.

"ஏன் அப்பா இப்படிச் சொல்கிறீர்கள்? சின்னம்மா என்னிடம் ரொம்பப் பிரியமாகத்தானே இருக்கிறாள்? என் கல்யாணத்தைப் பற்றி அவளும்தான் கவலைப்படுகிறாள். என் சொந்தத் தாயார் கூட இவ்வளவு கவலைப்பட்டிருக்க மாட்டாள்" என்றாள் ஜயந்தி.

"அது உண்மைதான், அம்மா! ஆனால் அவளுக்கு விஷயம் புரிய மாட்டேன் என்கிறது. உனக்குப் பணக்கார இடமாகப் பார்க்க வேண்டும் என்கிறாள். நீ சௌக்கியமாக இருக்க வேண்டும் என்றுதான் நினைக்கிறாள். ஆனால் அவளுக்கு எது சந்தோஷம் என்று தெரியவில்லை. பணம் நமக்கு எதற்கு? நான் இன்றே தொழிற்சாலையை மூடி விட்டாலும் உன்னை நன்றாக வைத்துக் கொள்ளக் கூடிய திறமை மிகுந்த பையனைப் பார்க்க வேண்டுமென்று எனக்கு விருப்பம். கருணாகரன் கெட்டிக்காரன். நாணயமானவன். அதனால்தான் எனக்கு அவனைப் பிடித்தது. ஆனால் உன் கல்யாணத்தைப் பற்றி நீதான் முடிவு செய்ய வேண்டும். எனக்கு மாத்திரம் திருப்தியாக இருந்தால் போதாது. நன்றாக யோசனை செய்து கூச்சப்படாமல் என்னிடம் நீ கூறிவிட வேண்டும். நான் ஏதோ உன் மனத்தைக் குழப்புகிறேன் என்று எண்ணாதே. விஷயத்தைச் சொல்லி விடுகிறேன். முடிவு செய்வது உன் பொறுப்பு. இப்போது முகுந்தன் வந்திருந்தார் அல்லவா? அவர் தம் பிள்ளைக்கு உன்னை மணம் செய்து கொடுக்கும்படி கேட்டார்."

"இப்படிக் கேட்க என்ன துணிவு அவருக்கு?" என்றாள் ஜயந்தி.

"ஏன் அப்படிச் சொல்கிறாய், ஜயந்தி? ஒரு பெண்ணும் பிள்ளையும் இருந்தால் கல்யாணத்தைப் பற்றிப் பேசிக்கொண்டுதான் இருப்பார்கள். அதற்கு அஞ்சக் கூடாது. உன்னிடம் தெரிவிக்க வேண்டி

# உங்கள் கேசத்தை அதிக கருமையுடனும் பகட்டுடனும் வைக்க குளிர்ச்சியான வெண்ணிற ப்ரில்க்ரீம் உபயோகியுங்கள்






✻ ப்ரில்க்ரீமின் சுத்தமான க்ரீமாக்கப்பட்ட எண்ணெய்கள் உங்கள் கேசத்தின் இயற்கை கருமை நிறத்தை சேமிக்கச் செய்கின்றன. சுத்தமான வெண்ணிற ப்ரில்க்ரீமை உங்கள் தலையில் நிரைத்ததும் அழுத்தித் தேயுங்கள். பொடுகுகள் ஏற்படுவதை இது தடுத்து உங்கள் கேசத்தை சுத்தமாயும் ஆரோக்கியத்துடனும் வைக்கிறது.

✻ சிறிதளவு ப்ரில்க்ரீம் நீடித்த உபயோகத்திற்கு வருகிறது! இன்றே ஒரு ப்ரில்க்ரீம் ஜாடியை வாங்கி எவ்வளவு காலம் அது நீடித்த உபயோகத்திற்கு வருகிறதென்று பாருங்கள்.

வாழ்க்கையில் வெற்றிபெற்றவர்கள்

# ப்ரில்க்ரீம் BRYLCREEM

உபயோகிக்கிறார்கள்

வது என் கடமை என்று நினைத்து இதைக் கூறுகிறேன். அச்சுதனும் பார்க்க நன்றாகத்தான் இருக்கிறான். பணம் காசும் இருக்கிறது. உனக்குப் பிடித்தால் எனக்கு ஆட்சேபனை இல்லை. உன் சின்னம்மாவுக்கும் திருப்தியாக இருக்கும்'' என்றார் விஜயராகவன்.

''தயவுசெய்து இதைச் சின்னம்மாவிடம் சொல்லி விடாதீர்கள், அப்பா! நான் கருணாகரனையே மணந்து கொள்வதாகத் தீர்மானித்து விட்டேன். இனிமேல் என் எண்ணம் மாறவே மாறாது'' என்றாள் ஜயந்தி.

அதற்குமேல் விஜயராகவன் தம் மகளிடம் ஒன்றும் கேட்கவில்லை. நேரில் முகுந்தனிடம் இதைச் சொல்ல அவருக்குத் தயக்கமாக இருந்தபடியால், அச்சுதனை ஜயந்திக்கு மணந்து கொள்ள விருப்பமில்லை என்பதைக் கடிதம் மூலமாகத் தெரியப்படுத்தினார்.

முகுந்தனுக்கு இது மிகவும் ஏமாற்றம் அளித்தது. இரண்டு நாட்களுக்குப் பிறகு ஜயந்தியைக் கருணாகரனுக்குக் கொடுக்கப் போவதாகக் கேள்விப்பட்டபோது அவருக்குக் கருணாகரன்மீது ஆத்திரம் பொங்கி எழுந்தது. எப்படியாவது அவன் ஜயந்தியை மணந்து கொள்ளாதபடி செய்துவிட வேண்டும் என்று தீர்மானம் செய்து கொண்டார். இதை மனத்தில் வைத்துக் கொண்டே மலைச்சாரல் பங்களாவை வாங்கிவிட முயற்சி செய்தார். அது முடியாமல் போகவே அவருடைய அருவை என்னும் 'தீ' இன்னும் வளரலாயிற்று.

கருணாகரனுடைய விஷமத்தினால்தான் தம்மிடம் தேங்காய் வாங்குவதை விஜயராகவன் குறைத்திருக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டு அதனால் வேறு வேதனை யடைந்தார்.

தம்முடைய பிள்ளைக்குக் கிடைத்திருக்க வேண்டிய அத்தனை சொத்தையும் கருணாகரன் பறித்துக் கொண்டு போகிறானே என்று பொருமினார். ஆனால் இத்தனை வேதனையையும் அவர் உள்ளுக்குள்ளேயே வைத்துக் கொண்டு புழுங்க வேண்டியிருந்தது. தம் மகன் அச்சுதனிடம் கூடச் சொல்ல வெட்கப்பட்டார்.

## அத்தியாயம் 22
# குதூகலக் காதலர்கள்

ஜயந்தி மறுபடியும் கருணாகரனைச் சந்தித்த பொழுது நடந்த விஷயங்களையெல்லாம் கூறினாள். கருணாகரனுக்கு அச்சுதன் மீது ஆங்காரம் உண்டாயிற்று. அவர்கள் இருவரும் அங்கேயே வந்திருந்தார்கள் என்றபோது அவனுக்குக் கோபம் எல்லை மீறிப் போயிற்று.

''ஜயந்தி! அச்சுதனும், சித்தப்பாவும் எங்களுக்கு இழைத்த கொடுமைகள் எல்லாம் போதாது என்று உன்னையும் என்னிடமிருந்து கொள்ளையடிக்க முயற்சி செய்கிறார்களே. இதை நான் எப்படிப் பொறுத்துக் கொண்டிருக்க முடியும்?'' என்றான்.

''நான் என்ன இரும்புப் பெட்டியா கொள்ளையடிப்பதற்கு? நீங்கள் வீணாக மனத்தை அலைபாய விடாதீர்கள். அப்பாவிடம் என் எண்ணத்தைத் தெரிவித்து விட்டேன். அதனால் நீங்கள் கவலைப்பட வேண்டாம்.''

''கவலைப்படவில்லை, ஜயந்தி! ஆனாலும் எனக்கு அவர்கள் இழைக்கும் அநீதியைப் பொறுக்க முடியாதென்று தோன்றுகிறது.''

''பொறுத்துக் கொள்ளாமல் வேறு என்ன செய்ய முடியும்? வேண்டுமானால் வீட்டு வாசலில் போய் நின்று அவர்களைத் திட்டலாம். அதனால் என்ன பயன்?'' என்றாள் ஜயந்தி.

கருணாகரன் தலை குனிந்தான். ''எனக்கு முன்கோபத்தினால் அறிவே குழம்பிப் போய் விடுகிறது. எனக்கு மனம் சரியாக இல்லை. வீட்டுக்குப் போகிறேன்'' என்று கூறிவிட்டுக் கருணாகரன் எழுந்தான்.

''நானும் வருகிறேன். மாதவி அக்காவைப் பார்த்து ரொம்ப நாட்களாகி விட்டன. காரில் போகலாம். சைக்கிளைப் பிறகு அனுப்பி விடுகிறேன்'' என்று கூறிவிட்டு அவனுடன் கூடவே கிளம்பி விட்டாள் ஜயந்தி.

ஜயந்தியும் கருணாகரனும் மலைச்சாரல் பங்களாவுக்குப் போய்ச் சேர்ந்த போது, இருவருக்கும் உவகை அளித்த காட்சி ஒன்றைக் கண்டார்கள். சிவசங்கரனும், மாதவியும் கையைக் கோத்துக் கொண்டு வாசலுக்கு வந்து கொண்டிருந்தார்கள். காரைப் பார்த்ததும் மாதவி சரேலென்று தன் கையை இழுத்துக் கொண்டாள். சிவசங்கரன் புன்முறுவலைப் பிரயத்தனப்பட்டு வரவழைத்துக் கொண்டார்.

ஜயந்திக்கு மகிழ்ச்சி ஊறிய அதே நேரத்தில் கார் டிரைவர் அதைப்

பார்க்காமல் இருந்திருக்க வேண்டுமே என்ற கவலையும் ஏற்பட்டது.

மனிதர்களின் மனோபாவமே மிகவும் விசித்திரமானது. இதய பூர்வமான அன்பினால் பிணைக்கப்பட்டுள்ள காதலர்கள் இருவருக்கு, தமக்கு வேண்டியவர்களோ, நண்பர்களோ, ஏன்? முகமறியாதவர்களோ கூடத் தங்களைப் போலவே காதல் என்னும் மோகனாஸ்திரத்தால் பிணைக்கப்பட்டு, அதே உணர்ச்சிகளை அனுபவித்துக் கொண்டிருக்கிறார்கள் என்று அறியும்போது, ஒரு உவகை பொங்கி எழும். உடனே அவர்களுடைய இன்ப துன்பங்களில் பங்கெடுத்துக் கொள்ளத் தயாராகி விடுவார்கள்.



ஜயந்திக்கும் கருணாகரனுக்கும் அந்தச் சமயத்தில் அப்படித்தான் இருந்தது. மாதவியும், சிவசங்கரனும் சந்தோஷமாகப் பேசிக் குதூகலத்துடன் இருப்பதை வரவேற்றாள் ஜயந்தி.

ஜயந்தியின் மலர்ந்த முகத்தைப் பார்த்து மாதவி தன் கலக்கத்திலிருந்து விடுபட்டு, "வா! ஜயந்தி. உன்னைப் பார்த்து ரொம்ப நாட்களாகி விட்டனவே!" என்று கூறினாள்.

சிவசங்கரன் கருணாகரனிடம் பேச வாயெடுத்தார். ஆனால் ஒன்றும் தோன்றவில்லை. ஒருகணம் மென்று விழுங்கி விட்டு, "நான் போய் வருகிறேன். நேரமாகி விட்டது" என்றார்.

கருணாகரன் சிரித்துக் கொண்டே அவர் கையைப் பிடித்துக் கொண்டான். "அதெல்லாம் முடியாது, ஸார். எங்களைப் பார்த்தவுடன் ஓடுகிறீர்களே. நாங்கள் வந்திருக்கா விட்டால் ரொம்ப நேரம் இருந்திருப்பீர்கள் அல்லவா?" என்று கூறி அவரை இன்னும் சங்கடப் படுத்தினான். அவர் பரிதாபமாக மாதவியைப் பார்த்தார்.

ஜயந்தி உடனே, "நாம் இப்போது வந்திருக்கா விட்டால் அந்த அற்புதமான காட்சியைப் பார்க்கும் அதிர்ஷ்டம் கிடைத்திருக்குமா? இரண்டு பேரும் ரொம்பக் கெட்டிக்காரர்கள். ரகசியமாகவே வைத்துக் கொண்டிருக்கிறார்களே. நாம் இருவரும்தான் ரொம்ப மோசம். நம் காதல் ஊர் முழுவதும் தெரியும்படி நடந்துகொண்டு விட்டோம்!" என்று கூறிவிட்டுக் கலகலவென்று மலைச்சாரலில் எதிரொலிக்கும் வண்ணம் சிரித்தாள்.

மாதவிக்குச் சிரிப்பை அடக்கிக் கொள்ள முடியவில்லை. கண்களில் நீர் ததும்பிக் கடையோரத்தில் முத்துப் போல நின்றது. அவளுடைய முத்துப் பற்கள் தெரியும் வண்ணம், கண்களில் நீர்முத்துக்களுடன் அவள் உள்ளத்தின் அடிவாரத்திலிருந்து பொங்கிய உவகையுடன் சிரிப்பதைக் கண்டு சிவசங்கரன் பேரின்பம் அடைந்தார். கருணாகரனுக்கும் அந்தக் காட்சி பரவசமூட்டியது. தன் தமக்கையை அவன் முதன் முதலாக ஒரு பெண்மணியாகப் பார்த்தான். அவளுக்கும் ஆசாபாசங்கள் உண்டு என்பதை உணர்ந்தான். மாதவியின் களங்கமற்ற சிரிப்பும், ஜயந்தியின் கலகலவென்ற சிரிப்பொலியும் அவனுக்கு மகிழ்ச்சியூட்டின.

ஜயந்தி மாதவியைப் பார்த்து, "ஏன் அக்கா! நான் யாரென்று அவருக்கு அறிமுகம் செய்து வைக்க மாட்டேன் என்கிறீர்களே!" என்று குறைப் பட்டாள்.

"அறிமுகம் எதற்கு ஜயந்தி? பார்த்தால் உனக்குத் தெரியவில்லையா?" என்றாள் மாதவி.

"நான் யாரென்று உங்களுக்குத் தெரிந்த அளவு, நீங்கள் யாரென்பது எனக்கும் தெரிந்து விட்டது" என்றார் சிவசங்கரன் ஜயந்தியைப் பார்த்து.

நான்கு பேர்களும் குதூகலமாக உள்ளே சென்றார்கள். ஜயந்தியின் பேச்சொலி அந்த வீடு முழுவதும் நிறைந்தது.

ஜயந்தி சிவசங்கரனிடம், "உண்மையிலேயே சொல்கிறேன், இன்றுதான் எனக்கு நிம்மதி ஏற்பட்டது" என்றாள்.

"ஏன்? இதுவரை உங்களுக்கு எந்த விதத்தில் நிம்மதி குறைவாக இருந்தது?"

"என்னுடைய சின்னம்மா இவரை நான் கல்யாணம் செய்து கொள்ளக் கூடாது என்று தடுத்து வந்தார். ஏன் தெரியுமா?" என்றாள் ஜயந்தி.

"கருணாகரனுடைய முன் கோபத்தைப் பற்றி அவருக்குத் தெரிந்திருக்கும். தாம் அருமையாக வளர்த்த மகளை இன்னொருவர் கஷ்டப்படுத்தினால் அவர் தாங்குவாரா?" என்றார் சிவசங்கரன்.

ஜயந்தியின் கலகலப்பான சுபாவமும், வேடிக்கைப் பேச்சும், அவரைக் கவர்ந்து விட்டன. அவளைப்போலவே அவர் பேச ஆரம்பித்தார்.

மாதவி தன் தம்பிக்கு இதைக் கேட்டுக் கோபம் வந்துவிடப் போகிறதே என்று கொஞ்சம் பயந்தாள். ஆனால் அவனும் சிரிப்பதைக் கண்டு சமாதானம் அடைந்தாள்.

''அதுவும் ஒரு காரணமாக இருக்கலாம். ஆனால் முக்கியமான காரணம் வேறு. மாதவி அக்காவுக்கு விவாகம் ஆகாதபடியால், நான் இவரை மணம் செய்து கொள்ளக் கூடாது என்று தடை செய்து வந்தார். இன்றுதான் எனக்குச் சின்னம்மாவிடம் பதில் சொல்ல வாய்ப்புக் கிடைத்திருக்கிறது. என்னுடைய மனமார்ந்த வந்தனங்களை நான் உங்களுக்குத் தெரிவிக்க வேண்டும்'' என்றாள் ஜயந்தி குறும்புப் புன்னகையுடன்.

அவள் திரும்பத் திரும்ப அந்தச் சம்பவத்தைப் பற்றியே பேசுவது சிவசங்கரனுக்கும்,மாதவிக்கும் சந்தோஷத்தையே அளித்தது. மாதவிக்குத் தன் தம்பியிடம் இதைப் பற்றிப் பேசக் கூச்சமாக இருந்தது. இன்று தற்செயலாக அவர்கள் தெரிந்து கொண்டு பரிகாசம் செய்தது அவளுக்கு இதமாகவே இருந்தது.

''இது கிடக்கட்டும், ஜயந்தி. உன்னைப் பற்றி நான் ஒன்றுமே விசாரிக்கவில்லை. வீட்டில் எல்லாரும் சௌக்கியந் தானே?'' என்றாள் மாதவி.

''சௌக்கியந்தான், அக்கா. ஒரு சம்பவத்தைப் பற்றி மாத்திரம் உங்களிடம் சொல்ல வேண்டுமென்று நினைத்துத்தான் வந்தேன்'' என்றாள் ஜயந்தி.

''ஆமாம் அக்கா! இந்தச் சித்தப்பா நம்மைச் சும்மாவிட மாட்டார் போல் இருக்கிறது. நம்மை நோகச் செய்வதே அவருக்கு வேலையாகப் போய் விட்டது. ஜயந்தியை அச்சுதனுக்குக் கொடுக்கும்படி கேட்டாராம்'' என்று கூறினான் கருணாகரன்.

சிவசங்கரன் குறுக்கிட்டு, ''கருணாகரன்! உங்கள் சித்தப்பாவுக்கு உங்களைப் பற்றித் தெரியாமலிருக்கலாம் அல்லவா? ஒரு பெண் இருந்தால் அவளுடைய விவாகத்தைப் பற்றிப் பலரும்தான் பேசுவார்கள். அதை நீங்கள் பெரிதாக எடுத்துக் கொள்ளக் கூடாது'' என்றார்.



''ஆமாம், தம்பி! இதை நீ மனத்தில் வைத்துக் கொள்ளாதே'' என்று கூறினாள் மாதவி.

கருணாகரனுக்கு, அவர்கள் இருவரும் அந்த விஷயத்தை அவ்வளவு எளிதில் புறக்கணித்து விட்டது சரியாகப்படவில்லை. அவர்கள் கொஞ்சமாவது கவலைப்பட்டிருக்கலாமென்று தோன்றியது. திடீரென்று அவனுக்கு, உலகில் தான் தன்னந்தனியாக இருப்பது போலவும், தன்னைப் பற்றிக் கவலைப்பட யாருமே இல்லாதது போலவும் தோன்றியது. அதன் பிறகு கருணாகரன் வாயைத் திறக்கவே இல்லை.

சற்றைக்கெல்லாம் ஜயந்தியும் விடை பெற்றுக்கொண்டு போனாள்.

கருணாகரனுக்கு உலகம் இருண்டு போய்விட்ட மாதிரி தோன்றியது.

சற்று நேரத்துக் கெல்லாம் அவன் திடீரென்று, ''அக்கா! நான் ஞாயிற்றுக் கிழமை மலைக்கு அடுத்த பக்கம் இருக்கும் காட்டுக்கு வேட்டையாடப் போகப் போகிறேன்'' என்றான்.

''வேண்டாம், தம்பி! அங்கே யானைக் கூட்டங்கள் இருக்கிறதென்று உனக்குத் தெரியுமே. மேலும் ஒரு தனி யானை அங்கே ஒரு மாதமாக அட்டகாசம் செய்து வருகிறதாமே. நீ நிச்சயமாகப் போகக் கூடாது'' என்றாள் மாதவி.

''இல்லை, அக்கா! நான் நிச்சயம் போகப் போகிறேன். தொழிற்சாலையையும், வீட்டையும் மாறி மாறிப் பார்த்து அலுத்து விட்டது'' என்றான் கருணாகரன்.

சிவசங்கரன் உற்சாகமாக, ''நானும் வருகிறேன், கருணாகரன்! அங்கே போவதற்கு எனக்கும் ரொம்ப நாட்களாக ஆசையாக இருக்கிறது. நாம் அங்கு போவதாக இருந்தால் யானைமீது போக வேண்டுமென்று கேள்விப்பட்டிருக்கிறேன்'' என்றார்.

''ஆமாம்! இங்கிருந்து இருபது மைல் காரில் போகலாம். பிறகு அங்கே காட்டிலாகா அதிகாரியின் வீடு இருக்கிறது. அவரிடம் சொல்லி யானைமீது ஏறிப் போகலாம்'' என்றான் கருணாகரன்.

மாதவி இருவரிடமும் போக வேண்டாமென்று சொல்லிப் பார்த்தாள். பிறகு சொல்லிப் பயனில்லை என்று பேசாமல் இருந்தாள்.



மலேயாத்தீவுக்குச் சென்றிருக்கும் டி.கே.எஸ். குழுவினர்களைச் சிங்கப்பூர் துறைமுகத்தில் எண்ணற்ற தமிழ் மக்கள் கூடிநின்று மலர்மாலைகள் சூட்டி வரவேற்றனர். ஏப்ரல் மாதம் 25ம் தேதி சிங்கப்பூர் முதல் மந்திரி தலைமையில் ராஜராஜ சோழன் நாடகம் தொடங்கி ஏழு நாட்கள் நடைபெற்றன. பின்னர் பேராசிரியர் கல்கியின் 'கள்வனின் காதலி' நாடகமும், 'எது வாழ்வு' நாடகமும் இரண்டு இரண்டு நாட்கள் நடைபெற்றன. மலேயாவில் ஆயிரக்கணக்கான மக்கள் வந்து நாடகங்களைப் பார்த்துக் களித்துச் செல்கின்றனர். மலேயாவில் டி.கே.எஸ். நாடகக் குழுவினர் தமிழ்க் கொடியை ஓங்கிப் பறக்கவிட்டுத் தமிழகம் திரும்பி வர மலேயாவாழ் தமிழ் மக்கள் பேராதரவு தருவார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

---

கருணாகரன் வெளியே சென்றபோது சிவசங்கரன் மாதவியிடம், "கருணாகரனுக்கு மனம் சரியாக இல்லை. உங்கள் சித்தப்பாவின் மீது அவனுக்கு இருக்கும் கோபத்தைத் தணித்துக் கொள்ள ஒரு சந்தர்ப்பம் வேண்டும். மனத்தை வேறு திசையில் திருப்பினால் இது மறந்து போய் விடும். அதனால்தான் நானும் கூடப் போவதாகச் சொல்கிறேன். இல்லாவிட்டால் உனக்குப் பிடிக்காத காரியத்தை நான் செய்யவே மாட்டேன்" என்று கூறினார்.

மாதவிக்கு அவர் கூறுவது நியாயமாகப் பட்டது. ஆனால் சம்மதம் தெரிவிக்க அவளால் முடியவில்லை.

"என்ன இருந்தாலும் எனக்குக் கவலையாகத்தான் இருக்கும். உங்கள் இருவரையும் தவிர எனக்கு இந்த உலகத்தில் யாருமே இல்லை என்பதை மறந்து விடாதீர்கள்" என்றாள் அந்தப் பேதை.

ஞாயிற்றுக்கிழமை காலையில் சிவசங்கரன் ஒரு ஜீப் காரில் துப்பாக்கிகள், பெட்டிகள் சகிதம் வந்தபோது மாதவி திடுக்கிட்டுப் போனாள்.

"அங்கே எத்தனை நாட்கள் இருப்பதாக உத்தேசம்? இத்தனை சாமான்கள் எதற்காக? சமையல்காரன் வேலையாள் இரண்டு பேரையும் அழைத்துக் கொண்டு போக வேண்டாமா? உங்கள் நண்பர்கள் இருவர் வேறு வருகிறார்கள் போலிருக்கிறதே?" என்று கேட்டாள்.

"நீ சொன்னதற்காகத்தான் இவர்கள் எல்லாரையும் அழைத்துக் கொண்டு போகிறேன் மாதவி. கூட்டமாகப் போனால் உனக்குக் கவலையில்லாமல் இருக்கும் அல்லவா? ஒரே நாளில் திரும்பி வர முடியாது. ஆகையால் ஒரு இரவு இருந்து விட்டு மறு நாள் மாலை வந்து விடுகிறோம், மாதவி!" என்று கூறினார் சிவசங்கரன். விரைவில் அவளும் மகிழ்ச்சியோடு அவருடைய பேச்சில் கலந்து கொண்டாள். சிவசங்கரன் நிம்மதி அடைந்தார்.

கருணாகரன் மௌனமாக ஜீப்பில் ஏறிக் கொண்டான். அது புழுதியைக் கிளப்பிக் கொண்டு புறப்பட்டபோது மாதவியின் நெஞ்சம் வேதனையால் தவித்தது.

ஆனால் ஜீப் காரில் குதூகலம் ததும்பி வழிந்தது. சிவசங்கரன் எப்போதும் போல் மிகவும் கலகலப்பாகப் பேசிக் கொண்டு வந்தார். காரில் இருந்த இரண்டு நண்பர்களுக்கும் தம்முடைய வேட்டை அனுபவங்களை நகைச்சுவையுடன் கூறிக்கொண்டு வந்தார். கருணாகரனும் அவற்றை ரஸித்தான். (தொடரும்)

ஒரு இன்ஷ்யூரன்ஸ் ஏஜெண்டின் டயரியிலிருந்து

# அவளுக்கு நான் ஒரு தெய்வமாயிருந்தேன்

லக்ஷ்மிபாயும் அவளுடைய மூன்று குழந்தைகளும் அங்கு உட்கார்ந்திருந்தனர். அவளைச் சுற்றிலும், விதையெடுக்காத பஞ்சு தரையில் சிதறிக்கிடந்தன. அவளிருந்த வெப்பமான சிறு அறையின் துர்க்கந்தம் தாங்க முடியாமலிருந்தது.

நான் ராஜ்கோட்டிலிருந்து அந்த கணவனை இழந்த பெண்ணைப் பார்க்கச் சென்றேன். அவளுடைய கணவனின் இன்ஷ்யூரன்ஸ் பாலிஸி விஷயமாக அவளிடம் ஒரு சில தகவல்கள் பெற வேண்டியிருந்தன. நான் யார், எதற்கு வந்துள்ளேன் என்பதை தெரிவித்ததும், லக்ஷ்மிபாயின் மெல்லிய, சோர்ந்த முகம் பிரகாசமடைந்தது. அவளுடைய நிலைமையைக் குறித்து இரக்கப்படும் ஒரு தெய்வமென என்னை உற்று நோக்கினாள்.

அவள் கணவன் ரூ. 3,000/-க்கு ஒரு பாலிஸி எடுத்திருந்ததையும் அதன் காலவரையறை முடிவில் அதைக் கொண்டு தங்களுக்கென்றே ஒரு சிறிய வீடு கட்ட நினைத்திருந்ததையும் என்னிடம் தழதழக்கும் குரலில் விளக்கினாள். ஆனால் அவருடைய நீடித்து, கடைசியில் மரணத்திற்குள்ளாக்கிய தேக அசௌக்யத்திற்காக அவர்களுடைய சேமிப்பு முழுவதையும் செலவிட நேர்ந்தது. இப்பொழுது ஜீவனம் நடத்த, பருத்தி விதைகளை அப்புறப் படுத்த நாள்தோறும் 5 அணா வீதம் ஊழியம் செய்யும் கதி ஏற்பட்டுவிட்டது.

மாமூல்படி ஒரு சில தகவல்களை அவள் கொடுத்தால் அவளுக்கு இன்ஷ்யூரன்ஸ் பணம் சீக்கிரம் கிடைக்குமென நான் உறுதி கூறினேன்.

ஒரு இன்ஷ்யூரன்ஸ் ஆசாமிக்கு எண்ணற்றவர்கள் நண்பர்கள் ஆவார்கள். ஆனால் இந்த விதவை மற்றும் அவளுடைய குழந்தைகளின் நன்றியையும், பரிவையும் கவனிக்கும்பொழுது, இன்ஷ்யூரன்ஸ் தொழிலில் இருப்பது எனக்கு மிகுந்த ஆனந்தமூட்டுகிறது.

- இந்த சம்பவத்தில் சம்பந்த பட்டவர்களின் பெயர்கள் யாவும் கற்பனைப் பெயர்களே. ஆனால் இந்த சம்பவம் உண்மையில் நடந்தது.



லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா

ASP-LIC-14 Tam

படித்துப் பாருங்கள்

# அமரதாரா

ஒரு நாவலோ, சிறுகதையோ எதுவாயிருந்தாலும், கதைப் போக்கின் சுவாரஸ்யத்தை மாத்திரம் வைத்துக் கொண்டு அதன் தரத்தை நிர்ணயித்துவிட முடியாது. ருசிகரமான கதையம்சம், பாத்திரங்களின் பூரணத்துவம், படிக்கத் தூண்டும் கலை குன்றாத நடை, இன்றியமையாத கட்டுக்கோப்பு இவற்றை யெல்லாம் வைத்துக் கொண்டு தான் நிர்ணயம் செய்ய வேண்டும்.

ஒரு நாவலில் முழு மதியின் மோகன நிலவும், வானக் கடலில் மிதக்கும் மதியின் கம்பீரமான வனப்பும், அத் தண்மதியைச் சூழ்ந்து விளங்கும் விண்மீன்களைப் போன்ற உப பாத்திரங்களின் சிறப்பும் நன்கு பொருந்தி யிருக்கலாம். ஆனால் வளர்பிறையின் வளர்ச்சியைப் போலவே தேய்பிறையின் தேய்வும் அந்த நாவலில் அமைந்து விடுமானால், அது பொரை விழுந்த மரம் போல் ஆகி விடும்.

ஆழ்ந்த கற்பனா சக்தியின் படைப்பாயிருக்குமானால் அந்த நாவல் மேற்கூறிய இழுக்கிலிருந்து தப்பலாம்.

பேராசிரியர் கல்கி அவர்களின் கதைகளுக்குத் தமிழ் வசன இலக்கியத்தில் என்றும் ஒரு தனி இடம் உண்டு. அவர் பூதஉடல் மறைந்து போய் விட்டாலும் புகழுடம்பு அவரது இலக்கிய சிருஷ்டிகளில் உயிர்த் துடிப்புடன் விளங்குகிறது. இறுதி முயற்சி இது.

“இந்துமதியின் கதை” என்ற தலைப்பில் கல்கி அவர்கள் “அமர தாரா”வின் முதல் பாகத்தைத் துவங்கி இருபத்தாறு அத்தியாயங்களை எழுதினார். கோடை வெய்யிலில் கிடைத்த குளிர்தருவின் நிழலைப் போலவும், மேடையிலே வீசுகின்ற மெல்லிய பூங்காற்றைப் போலவும், ஓடையிலே ஊறுகின்ற தீஞ்சுவைத் தண்ணீரைப் போலவும் அரிதிலே கிடைத்த அரும் பெரும் கதை, கால தேவனின் கொடுமையினால் எளிதிலே நிறுத்தப்பட்டு விட்டது.

பேராசிரியர் “கல்கி” அவர்களின் கதைகளைப் பேரார்வத்துடன் படித்து வந்த ரஸிகப் பெருமக்கள், “நாம் ‘அமரதாரா’வை இனிப் பூர்த்தியாகப் படிக்க முடியாதா?” என்று ஏங்கி நின்ற தருணத்தில், நம் ஒப்பற்ற தலைவர் ராஜாஜி அவர்களின் ஆசியுடன், ஆனந்தி மேற்படி கதையைத் தொடர்ந்து எழுதலானார். ‘கல்கி’ பத்திரிகை வாசகர்கள் குன்றாத ஆர்வத்துடன் கதையைப் படித்து ஆனந்த பரவசமடைந்தனர்.

“நக்ஷத்திர உதயம்”, “ரங்கதுரையின் கதை”, “வாழ்வு மலர்ந்தது” என்று மேலும் மூன்று பாகங்களையும், தந்தை எழுதி வைத்திருந்த குறிப்புக்களின் உதவியைக் கொண்டு ஆனந்தி பூர்த்தி செய்தார்.

உள்ளக் கிளர்ச்சியோடும், உந்துகின்ற ஆவலோடும் ‘கல்கி’ வாசகர்கள் ‘அமர தாரா’ கதையைப் படித்து உற்சாகம் ஊட்டலாயினர். அவர்களுடைய உற்சாகமென்னும் உரம் காரணமாகவே இவ்விலக்கியப் பயிர் தழைத்து ஓங்கியது. சொல் ஆழமும் பொருள் ஆழமும் கொண்டு, தெள்ளிய நடையில் கல்கி அவர்களின் கற்பனைத் திறனுக்குக் குறைவு ஏற்படாத விதத்தில் ஆனந்தி கதையை எழுதிப் பூர்த்தி செய்தார்.

நெஞ்சைப் பிழியும் சோகத்துடன் சிறையிலிருந்து இந்துமதி சொல்லும் கதைதான் “அமரதாரா”. நிரபராதியான அவள் மீது சுமத்தப்பட்ட குற்றம் ரங்கதுரையின் பெரு முயற்சியினால் அகற்றப்பட்டு விடுகிறது. அவள் வாழ்வு மலர்ந்து விடுகிறது. ஆசிரியர் கதையைச் சொல்லக் கையாண்டிருக்கும் உத்தி படிப்பவர் மனத்தை வேகமாகக் கவர்ந்து விடுகிறது.

கதையின் இறுதிக் கட்டத்தில், பல குற்றங்கள் செய்து தண்டனைக்கு ஆளாக வேண்டிய காசிலிங்கம், இந்துமதியின் தந்தை, கொலைக் குற்றத்தை ஒப்புக் கொண்டு இந்துமதிக்கு விடுதலை அளிக்கிறார். அது மட்டுமல்ல, அவளுக்கு வாழ்வையும் அளிக்கிறார். அத்துடன் வாசகர்களுக்கும் பெருமகிழ்ச்சியை அளிக்கிறார்.

இக்கதையில் வரும் பாத்திரங்களெல்லாம் முழு வடிவம் பெற்றிருக்கின்றன. ஜீவ களையுடன் தனித் தன்மையும் பெற்றுக் கதை முழுவதும் வளைய வருகின்றன. சந்திரமணி, காசிலிங்கம், மந்திரமூர்த்தி, இந்துமதி, ரங்கதுரை, தங்கபாண்டியன், சகவரமூர்த்தி, கவிலாசனு, பத்மநாபன், ராஜாராம், — முதலிய பாத்திரங்களில் யாரையும் வேண்டாம் என்று ஒதுக்குவதற்கில்லை. எல்லோருக்கும் இந்தக் கதையில் நிறைய வேலை யிருக்கிறது.



நவரஸங்களும் ததும்பும் இந் நவீனத்தை ஆசிரியர் கல்கி அவர்கள் இருந்திருந்தால் எப்படி யெல்லாம் எழுதியிருப்பாரோ, எப்படி முடித்திருப்பாரோ என்று எண்ணி உள்ளம் ஏங்க வேண்டிய அவசியத்தை ஆனந்தி ஒரு சிறிதும் நமக்கு வைக்கவில்லை. பாத்திரங்களின் சோபையும் உருவமும் சிறிதும் கெடாமல் நன்கு கையாண்டு கதையை முடித்திருக்கிறார். “அமரதாரா” ஓர் அரிய இலக்கிய விருந்து என்பதில் ஐயமில்லை. கண் கவர் வனப்புடன் இந்நூலினிடையே மணியத்தின் கைவண்ணம் பெற்ற சித்திரங்கள் எழில் உருவங்களாக விளங்குகின்றன.

பிரசுரம்: பாரதி பதிப்பகம், தியாகராய நகர், சென்னை-17. விலை: முதல் இரண்டு பாகங்கள் ரூ. 12-0-0; மூன்று, நான்கு பாகங்கள் ரூ. 7-0-0.

— ஸோமாஸ்

# பாசம்

கு.ப.சேது அம்மாள்

மேடை மாடி வெட்ட வெளியில் கைகள் இரண்டையும் கோத்துத் தலைக்கடியில் வைத்துக் கொண்டு படுத்திருந்தாள் கல்யாணி.

நீல வானில் அங்கொன்றும் இங்கொன்றுமாகக் கண் சிமிட்டிக்கொண்டிருந்த நட்சத்திரங்களுக் கிடையில் பூர்ண சந்திரன் ஊர்ந்து கொண்டிருந்தான். அதில் பார்வையைச் செலுத்திச் சிந்தனையில் ஆழ்ந்திருந்தாள் அவள். உள்ளே இருந்தபடியே அவளுடைய தீவிர சிந்தனையைக் கவனித்துக் கொண்டிருந்த விசுவம் எழுந்து வந்து அவள் அருகில் அமர்ந்து, ''என்ன மனோராஜ்யம் செய்துகொண்டிருக்கிறாய் கல்யாணி?'' என்று அவள் கையைப் பற்றி யெடுத்தான்.

சாவதானமாகத் திரும்பிப் பார்த்தாள் கல்யாணி.

''அதை உங்களைக் கூப்பிட்டுச் சொல்ல வேண்டும் என்று வாயெடுத்தேன். அதற்குள் நீங்களே கேட்டு விட்டீர்கள்! உம்...வந்து...நாளைக் காலையில் அம்மா வருகிறாள்...''

''அம்மா வருகிறாள்!'' என்று அவள் சொன்ன சொற்களுக்குள் முக்கிய காரியமாக 'வரப் போகிறாள்' என்பது தெளிவாகத் தெரிந்தது. இருந்தும் ''என்ன விசேஷம்? வெறுமனே உன்னைப் பார்த்து

விட்டுப் போவதற்குத்தானே, கல்யாணி?'' என்று கேட்டான் விகவம்.

'' அவள் அந்த நினைவுடன்தான் வருவாள். ஆனால் அவள் புறப்படும்போது நானும் போகலாமென்று இருக்கிறேன். ஒரு வாரமாக மறுபடியும் ஜுரமும் முதுகு வலியும் ஆரம்பித்து விட்டன...''

'' ஏன் இவ்வளவு நாட்களாக என்னிடம் அதைச் சொல்லவில்லை?''

'' சொல்லி என்ன உபயோகம்? 'நோய் திருப்பிக் கொள்ளாமல் பார்த்துக் கொள். ஆகார பலத்தில்தான் உன் ஆயுசு' என்று எச்சரித்துத்தான் டாக்டர்கள் வெளியே அனுப்பினார்கள். ஆகாரத்தில் குறைவேயில்லாமல் இருக்கும் போதும் வியாதி திரும்பி விட்டால், நமக்கு அர்த்தம் புரியவில்லையா?'' என்று கேட்டாள்.

'' என்னமாவது பிதற்றாதே, கல்யாணி! நாளைக்கு ஆஸ்பத்திரிக்குப் போனால்போச்சு!''

'' பிரயோசனமேயில்லை! என் நிலைமை எனக்குத் தெரியாதா? அந்தப் பைசாச நோய் என்னை மட்டிலுமே உண்டு பசி தணியட்டும், உங்களொருவரையும் பற்றாமல்!''

'' இந்த மாதிரி என்னிடம் பேச உனக்கு எப்படி மனசு வந்தது கல்யாணி? உன் இஷ்டப்படியெல்லாம், நீ சொன்னபடியெல்லாம் ஆடினேனே....''

விகவம் அழுதே விட்டான்.

தன் கண்களில் நீர் வழிய, அவன் கண்ணீரைத் துடைத்தாள் கல்யாணி. '' வருத்தப் படாதீர்கள். ஒரு அளவோடு என் மீது நீங்கள் பாசம் வைத்திருந்தால் அது நீடுழி காலம் நாம் வாழச் சம்மதித்திருக்கும்! அபரிமித ஆசை வைத்தீர்கள். தெய்வத்துக்குப் பொறுக்கவில்லை. உடைத்தெறிந்து விட்டது! என் வரையிலும் என்னுடைய மனசை நான் திடப்படுத்திக் கொண்டு விட்டேன்...''

'' கல்யாணி! வீட்டிலுள்ள சகலமும் போகட்டும். நீ பிழைத்தால் போதும். வைத்தியம் செய்கிறேன்.—தைரியமாக இரு. நாம் பிழைத்து விடுவோம் என்று நம்பிக்கை வை '' என்று மனமுருகிச் சொன்னான் விகவம்.

துக்கம் குடிகொண்டிருந்த கல்யாணியின் முகத்தில் புன்னகை பிறந்தது! '' நீங்கள் உங்கள் உயிரையே கொடுப்பதானாலும், என்னைப் பிழைப்பிக்க இனி சாத்தியமில்லை. செய்யக் கூடியது என்னவென்றால், என் குழந்தையை, அவனுடைய தாய் தகப்பனாரை இந்தப் பேய் பற்றி உறிஞ்சாமல் தடுக்க வேண்டும்.''

'' அவனுடைய தாய்...அவனுடைய தாய் நீதான் கல்யாணி...''

'' இல்லை. லக்ஷ்மிதான் அவனுடைய தாய். இனிமேல், நான் ஊருக்குப் போன மறுநாள் அவள் வந்து விடுவாள். என்மீது வைத்திருக்கும் அன்பை, அவளிடம் வைத்துச் சுகமாக வாழுங்கள். குழந்தை மீது அவள் வாஞ்சை எனக்குத் தெரியும். குறைவில்லை...''

'' போதும் நிறுத்து. கல்யாணி! உன் பிடிவாதத்துக்குக் கட்டுப்பட்டு, உன் மனசு, நிம்மதியடைந்து, உடம்பு தேவலையானால் போதும் என்று இன்னொரு கல்யாணம் என்ற பைத்தியக்காரக் காரியத்தையும் செய்து....''

'' நன்றாக இருக்கிறதே! பைத்தியக்காரக் காரியமா அது? செய்ய வேண்டிய முக்கியமான காரியத்தையல்லவா செய்திருக்கிறோம்? என்றைக்கு டாக்டர் டி. பி. என்றாரோ, அன்றைக்கே நான் நிச்சயித்த காரியம் அது. என் குழந்

தையும், நீங்களும் சௌக்கியமாக இருப்பீர்கள் என்ற நிம்மதியுடன் என் பிராணன் போக வேண்டாமோ?''

''கல்யாணி!'' என்று அவள் வாயைப் பொத்தினான் விகவம்.

அவன் கையை விலக்கி விட்டு, ''வாயை விட்டுச் சொல்லாமலிருந்தால் வருகிற யமன் திரும்பிப் போய்விட மாட்டான். அம்மாவிடம் ஒரு நாடகம் நடத்தி ஊருக்குப் புறப்பட வேண்டும். நீங்கள் ஏதாவது உளறி விடாதீர்கள்'' என்றாள் கல்யாணி.

''நீ சொல்வது எனக்கு ஒன்றும் புரியவில்லை, கல்யாணி! கண்மூடித்தனமாக நீ சொல்வதை யெல்லாம்...''

''அப்படியில்லை. நமது வம்சம் விளங்க வேண்டும் என்ற நல்லெண்ணத்தில் செய்கிறேன். தெளிவாகச் சொல்கிறேன் கேளுங்கள். நோய் திரும்பாமல் நான் நன்றாகவே இருப்பதாக வைத்துக் கொண்டாலும் மேற்கொண்டு புத்திரப் பேறு என்பதோ, வாழ்க்கையில் ஒரு மலர்ச்சி என்பதோ எனக்குக் கிடையாது. அப்படி இருக்க, வாழ்வு மலர என்று என் மனமார ஒரு பெண்ணை உங்களுக்கு மணம் புரிவித்து, அவளை வஞ்சிப்பது எவ்வளவு பெரிய பாவம்? நினைத்துப் பாருங்கள்! பிழைத்து எழுவேன் என்ற நம்பிக்கையில்லாதபோது செய்ய வேண்டியதைச் செய்தேன். பெருந்தன்மைக்கும் என் ஆத்மசாந்திக்குமாக இப்போது மூன்று மாதங்களாக அசட்டுக்காரியம் செய்தோமே என்று வருந்தினேன். 'இல்லை. நல்ல காரியம்தான் செய்தாய். நீ வருத்தப்படுவதுதான் அசட்டுத்தனம்!' என்கிறது விதி. டி. பி. என்றாலே ஆற்றங்கரைப் பிள்ளையார் சங்கதிதான். அதிலும் எனக்குப் பகவான் கொடுத்திருப்பது.... ஐயைய, எதற்காக இப்பொழுது அழுகிறீர்கள்? அழுது என்ன பயன்? அதோ குழந்தை எழுந்திருக்கிறான். அவனுக்குப் பாலைக் கொடுங்கள்'' என்று கணவனைத் தூண்டினாள் கல்யாணி.

வேதனை மண்டிய மனத்துடன் எழுந்து சென்று குழந்தைக்குப் பால் கொடுத்துப் படுக்க வைத்தான் விகவம்.

பிறகு விடிய விடியத் தூக்கமற்றுப் பேசியதையே திருப்பித் திருப்பிப் பேசிக் கணவன் மனத்தை ஒருவாறு ஆற்றி அவன் சம்மதத்தைப் பெற்றுக் கொண்டு பொழுது புலரும் சமயத்தில் துயிலில் ஆழ்ந்தாள் கல்யாணி.

''கல்யாணி!'' என்ற குரல் கேட்டுக் கண் விழித்துப் பார்த்த போது தாயாரும், கணவனும் தலைமாட்டில் நிற்பதைக் கண்டு திகைத்துப் போய், ''அடாடா! எவ்வளவு நேரம் தூங்கி யிருக்கிறேன்? அப்பா வரவில்லையா அம்மா?'' என்று தாயாரை வரவேற்றாள்.

அப்புறம் நான்கு நாட்கள் வரையில் சந்தோஷமாக அந்த வீட்டில் வளைய வந்தாள். கணவனுக்குஇஷ்டமான சமையல், சிற்றுண்டிகளைச் செய்யச் சொல்லிக் கையால் கொடுத்தாள். குழந்தைக்கு விதம் விதமான ஆடை அலங்காரம் செய்து கண்குளிரக் கண்டு ஆனந்தித்தாள்; ஆனந்தக் கண்ணீர் விட்டாள். 'என் அப்பனே! என் ஆயுளையும் சேர்த்து நீ என்றும் சிரஞ்சீவியாக, மார்க்கண்டனாக இரு'' என்று தனது அருமை மகனுடைய தலையைத் தொட்டு ஆசீர்வதித்தாள்.

மறுநாள் காலையில் லக்ஷ்மி வரும் கடிதம் கிடைத்ததும், அன்றிரவு குழந்தை தூங்கிய பிறகு போட் மெயிலுக்குக் கிளம்பினாள் கல்யாணி. பொங்கி வந்த துக்கத்தைத் துணியினால் வாயில் அடைத்துக் கொண்டு கல்யாணியை டாக்ஸியில் ஏற்றினான் விகவம்.

''குழந்தை மாடியில் தனியாக இருக்கிறான். போங்கள். நான் அடுத்த வாரம் வந்து விடுவேன்'' என்றாள், ஏதோ அவசரமாகத் திரும்பி வருபவள் போல.

விகவம் ஒன்றும் பேசவில்லை. டாக்ஸிக்குள் இருந்த கல்யாணியைப் பார்க்கப் பார்வையைக் கூர்மையாக்கினான். கண்ணீர் மறைத்தது. டாக்ஸி டிரைவரிடம், ''போகலாம், அப்பா!'' என்றாள் கல்யாணி.

பிரமை பிடித்து நின்று கொண்டிருந்த விகவத்தைப் பிள்ளைப் பாசம் 'மாடிக்கு வா!' என்று அழைத்தது!

வாசல் கதவைத் தாளிடும் போது, ''கல்யாணி! நீ க்ஷயரோகி என்பதற்காக உன்னைத் துரத்திவிட்டுக் கதவைத் தாழ்ப்பாள் போட்டுக் கொண்டு என் உயிரைக் காத்துக் கொள்கிறேனா? ஐயோ, சித்திரவதையே! இதைவிட நீ இறந்துபோய்—உன் சடலத்தை அனுப்பிவிட்டுத் தாள் போட்டால் எவ்வளவோ நிம்மதியாக இருக்கும்! இதற்குத்தான் என் மேல் அவ்வளவு பாசம் வைத்திருந்தாயா?'' என்று குலுங்கக் குலுங்க அழுது கொண்டு மாடிக்குப் போனான் விகவம்.

இரவுப் பொழுது சிவராத்திரியாக இருந்தது அவனுக்கு. இமை கொட்டாமல் குழந்தையைப் பார்த்தான். ஆமாம்-கல்யாணியின் முகம்தான்; நினைவுக்குக் கொஞ்சம் வைத்து விட்டுப் போயிருக்கிறாள்!

எங்கோ கோழி கூவியது.

'ஓ! பொழுது விடிகிறதா! விடியட்டும், லக்ஷ்மீகரமாக வீடு விளங்க ஒரு லக்ஷ்மி வரப் போகிறாளாக்கும்! வரட்டும்! ஒருவருக்கொருவர் என்ன பேசிக் கொண்டார்களோ-கடிதத்தில், யாருக்குத் தெரியும்?

லக்ஷ்மி!

பெயர் அழகு; பெண் அழகு; குணம் குரூபம்! என் கல்யாணியை வீடுவிட்டு ஓடும்படி செய்த கோரமான குரூபம்? கல்யாணி! வீட்டை விட்டு வேண்டுமானால் உன்னால் ஓடி விட முடிந்தது—லக்ஷ்மிக்கும் துரத்த முடிந்தது: எங்கே, என் மனத்தைவிட்டு, ஓடு பார்ப்போம்! இல்லை—லக்ஷ்மியாமே, அவளால்தான் என் மனத்திலிருந்து அவளைத் துரத்த முடியுமா?'

இவ்வித எண்ணங்கள் தீவிர கதியில் சுழன்றன அவன் நெஞ்சில்!

மனம் தெளியும் சமயத்தில், ''அக்கா!'' என்று பதறிப் பாய்ந்து கொண்டு மாடி அறைக்குள் விரைந்தாள் லக்ஷ்மி.

உதறிக் கொண்டு எழுந்தான் விகவம்.

''அக்கா, எங்கே? போய் விட்டாளா ஊருக்கு?'' என்று படபடத்தாள் லக்ஷ்மி.

''போய் விட்டாள்'' என்று நிதானமாகப் பதில் சொன்னான் விகவம்.



# டுமெக்ஸ்

## பால் உணவு



குழந்தைகளால் அவர்கள் ஏன் டுமெக்ஸ் பால் உணவை விரும்புகிறார்கள் என்று சொல்லமுடியாது. ஆனால் அது கிடைத்ததும் அவர்கள் எவ்வளவு மகிழ்ச்சி அடைகிறார்கள் என்பதைக் கவனியுங்கள். இதில் ஆச்சரியப்படுவதற் கொன்றுமில்லை, ஏனென்றால் டுமெக்ஸ் தான் தாய்ப்பாலுக்கு அடுத்த சிறந்த பால் உணவாக விளங்குகிறது.

**உங்கள் குழந்தைகளுக்கு டுமெக்ஸ் பால் உணவைக் கொடுத்து அவர்களின் வளர்ச்சியைக் கவனியுங்கள்**

"நீங்கள் அனுப்பித்தானே போனான்?"

"ஆமாம்!"

"அனுப்பலாமா?"

"தெரியாது."

"தெரியாதா? நான் வருமுன்பு அக்காவை அனுப்ப வேண்டாம் என்று உங்களுக்கு எழுதியிருந்தேனே நான்; என் வார்த்தைக்கு மதிப்பே கிடையாதா ஆனால்?"

திடுக்கிட்டவளாக லக்ஷ்மியை ஏறிட்டுப் பார்த்து, "எப்பொழுது எழுதினாய், எனக்குத் தெரியாதே?" என்று கூறிவிட்டுத் திருதிருவென்று விழித்தாள் விகவம்.

"அந்தக் கடிதம் உங்கள் கைக்குக் கிடைக்கவில்லையென்று தெரிகிறது! தன்னைப் போன்ற பெண்தான் நானும் என்பதை மறந்துவிட்டாள் அக்கா! அப்பாவுக்கு ஜுரம் திரும்பிக் கொண்டதால் மேலும் ஒரு மாசம் தங்க வேண்டி விருந்ததை விபரீதமாகப் புரிந்து கொண்டு விட்டாள்! இருக்கட்டும். உலகத்தில் அன்புக்குக் கட்டுப்படாத உயிரே கிடையாது என்பார் அப்பா! என் அன்பு பாசத்தால் அவளை கட்டி இழுக்கிறேனா இல்லையா இங்கு பாருங்கள். என்ன கதையெல்லாம் எழுதினாள் எனக்கு? 'நோய் திரும்பி விட்டதாம், இங்கு இருந்தால் உங்களுக்கும், குழந்தைக்கும் தொற்றிக் கொண்டு விடுமாம்!' பொய்! நன்றாகக் குணமான பின்புதானே அழைத்து வந்திருப்பதாகச் சொன்னீர்கள், போன தடவை வந்திருந்தபொழுது?" என்றாள். பிறகு குழந்தையின் நினைவு வந்து, "ஆமாம்! குழந்தை பட்டினியாயிருக்குமே! குழந்தைக்கு என்ன கொடுக்க வேண்டும்? பால் தானே, அடுப்பை மூட்டிப் பால் காய்ச்சட்டுமா?" என்று காரியத்தில் கருத்தைச் செலுத்தினாள் லக்ஷ்மி.

விகவத்தின் பூஜாபலனோ என்னவோ, மூகடாக வந்த லக்ஷ்மி, இப்பொழுது 'கிருஹ லக்ஷ்மி'யாகி, கல்யாணியை மிஞ்சின குணவதியாக மாறியிருந்தாள். குழந்தையைத் தனது கண் எனக் காத்தாள். கல்யாணிக்கு அவ்வப்போது அன்பைச் சொரிந்து, அழுது, கெஞ்சி, கடிதங்கள் எழுதினாள்—புறப்பட்டு வரும்படியாக.

அவற்றைப் படித்துக் கல்யாணி கலங்கினாள். நல்ல பெண் பாவம், என் பங்கில் இருந்து அவள் வாழட்டும். அவர்கள் இன்ப வாழ்வில் நான் ஒரு இடறு கட்டையாக முளைக்கக் கூடாது. இதுதான் கடவுள் சித்தம்! இப்படியே நான் இருந்துவிடுவதுதான் உத்தமம். ஆனால் கபடு சூது இல்லாத அந்த உத்தமரை, பொய் சொல்லி ஏமாற்றினது என்னவோ பாபம்தாம். என்மீது இருந்த நம்பிக்கையில் 'நோய் திரும்பிக் கொண்டுவிட்டது' என்று நான் புளுகியதை நிஜமென்று நம்பினாரே! ஏமாற்றியது குற்றம்தான். ஆனால் ஒன்றுக்கும் உதவாமல் ஒரு பெண்ணின் வாழ்க்கையில் நான் 'நிரடி'க் கொண்டிருந்தால் அதுவும் குற்றம்தானே—? என் ஜீவியத்தைக் கண்டு உருகி உருகி அழுது உயிரைக் கொடுத்து விட்டாள் அம்மா. ஆரோக்கியம் போயிற்று, அதோடு ஆஸ்தியும் போயிற்று, ஆனந்தமான வாழ்க்கை போயிற்று. அம்மாவும் போய் விட்டாள்! மிஞ்சியிருப்பது இந்த வீடும், வயோதிகத் தந்தையும்! அவரும் கண்ணை மூடிக் கொண்டால்?... அவ்வளவுதான் இந்த இருளடைந்த வாழ்க்கையில் ஒரே காரிருள்! சூனியம் பிடித்த சூழ்நிலை! ஆஹா! என்ன பயங்கரமான எதிர்காலம்?"



★

"அப்பளம் வேணுமா கேளு, குழந்தை!" குரல் கேட்டு லக்ஷ்மி அம்மாள் எழுந்து வந்து, "கொண்டு வாருங்கள் மாமி!" என்று அழைத்தாள்.

உள்ளே வந்து அப்பள டின்னை இடுப்பிலிருந்து இறக்கி வைத்துத் திறந்தாள்.

"அரிசி அப்பளம் என்ன விலை?"

"ஒன்னரை ரூபாய்" என்றாள் அப்பளக்கார அம்மாள்.

"நூறு கொடுங்கள். அப்புறம் சமையலுக்கு யாரையாவது விசாரியுங்கள் என்று சொன்னேனே, மாமி!"

"உங்களுக்கு இது எத்தனை மாசம், எப்போ ஆள் வேணும்?"

"இதுதான் மாமி மாசம், அவர் கூட ஊரிலே இல்லே. தனியாக இருக்கிறோமே என்று திகிலாக இருக்கிறது...."

"அப்போ, நான் வேணுமானால்....,"

"ரொம்ப சந்தோஷம் மாமி. எனக்கு உங்களைக் கேட்கத் தயக்கமாக இருந்தது - என்ன நினைத்துக் கொள்வீர்களோ என்று!"

"அதெல்லாம் ஒன்றுமில்லே. இப்படிப் பட்ட சமயத்துக்குத்தான் ஒத்தாசை செய்ய வேண்டும் ஒருத்தருக்கு."

"உங்க பேரு?"

"தர்மாம்பாள் என்று சொல்லுவார்கள்."

"எனக்கு நீங்கள் வீட்டோடு வந்து இருந்தால் தான் சௌகரியம்...."

"இருந்தால் போச்சு!" என்றாள் தர்மாம்பாள்.

ஊரிலிருந்து விசுவம் திரும்பி வந்தபொழுது லக்ஷ்மி சுப்பையாவுக்கு 'அப்பா'வை வைத்திருப்பதைக் கூறினாள். "ரொம்பத் தங்கமான சுபாவம். பெற்ற தாயார்கூட இந்த மாதிரி செய்ய மாட்டார்கள் போங்கள். அதிலும் நம்ம 'சுந்தா' பேரிலே உசிரு அந்த மாமிக்கு. அவன் கதையைக் கேட்டதும் அப்படியே அழுது விட்டாள் பாவம்! இங்கே அவளைச் சுப்பையாவுக்கு நிரந்தரமாக வைத்துக் கொள்ளலாம் என்று எண்ணுகிறேன்!"

"உனக்குந்தான் வரவரத் தள்ளவில்லை என்கிறாய். இருந்து விட்டுப் போகட்டுமே."

"அந்த அம்மாளுக்குப் பெரியம்மைபோட்டு முகம் விகாரமாயிருந்தாலும் குணத்திலே தங்கம். அம்மை வடுவைக் கண்டு அவள் கணவன் தள்ளி வைத்து விட்டான் போலிருக்கிறது—நமக்கே பார்க்க அருவருப்பாக இருக்கிறதே. தாலி கட்டின புருஷனுக்கு எப்படி இருக்கும்?" என்றாள் லக்ஷ்மி பரிதாபத்தோடு.

நல்ல நிசி வேளை. கூடத்தில் படுத்திருந்த தர்மாம்பாளின் தலைமாட்டில் 'உஸ்' என்ற சத்தம் கேட்டுத் திடுக்கிட்டு விழித்துப் பார்த்தாள். விடிவிளக்கு வெளிச்சத்தில் பாம்பு சுந்தாவின் பக்கம் நெளிவது தெரிந்தது.

"அடடா, சுப்ரமணியம், நாகராஜா, நான் என்ன அபராதம் செய்தேன்! ஐயையோ, சுந்தா!"

கூச்சலைக் கேட்டுப் பாம்பின்மீது புரண்டான் சுந்தா. புஸ்ஸென்று சீறிச் சாக்கடையில் புகுந்து ஓடிவிட்டது, பாம்பு.

"ஆ!" என்று அலறினான் சுந்தா. மாடியிலிருந்து விசுவமும், லக்ஷ்மியும் எழுந்து வேகமாக ஓடி வந்தார்கள்.

"என் கண்ணே!" என்று கீழே சாய்ந்திருந்த சுந்தாவை வாரியெடுத்து மடியில் போட்டுக் கொண்டாள் லக்ஷ்மி.

'என்ன என்ன?' என்று பதறியபோது, "ஐயோ, நல்ல பாம்பு! பிடுங்கி விட்டதே என் குழந்தையை-" என்று தலையில் அடித்துக் கொண்டாள் தர்மு.

சுந்தாவைப் பாம்பு கடித்த ஆபத்து ஒருபுறமிருக்க, 'அலறி அழும் இந்த அம்மாள் யார்?' என்று தெரியாமல் தத்தளித்தான் விசுவம்! கல்யாணியா இவள்? சே! அவள் எங்கே, இந்தக் குரூபி எங்கே?

"என்ன விழிக்கிறீர்கள்? மாந்திரீகனைப் பார்த்து அழைத்து வாருங்களேன்?" என்று அழுதாள் அவள்.

"என் கல்யாணி அக்காவா? நீங்களா இந்தக் கோலத்தில்...?"

"ஆமாம், லக்ஷ்மி! குழந்தைக்கு எங்கே வியாதி வந்து விடுமோ என்று மனசிலே கல்லைப் போட்டுக் கொண்டு வீட்டை விட்டுப் போனேன்—அவனை யமன்கிட்ட வாரிக் கொடுக்க வந்து விட்டேன் பாவி..."

விசுவம் விரைவாக ஓடி மாந்திரீகனை அழைத்து வந்தான். மாந்திரீகன் பரிசீத்துப் பார்த்துவிட்டு, "நல்ல காலம்! பாம்பு பையனைக் கடிக்கவில்லை. சத்தத்தைக் கேட்டுப் பாம்பு ஓடியிருக்கிறது. பையன் பயந்து விட்டான். அவ்வளவுதான்!" என்று கூறினான். அப்பொழுதுதான் அவனுக்கு உயிர் வந்தது.

அரை மணிக்கெல்லாம் புரண்டு கொடுத்து, பின்பு மெதுவாகக் கண்ணைத் திறந்து பார்த்தான் சுந்தா.

விசுவம் அருகில் ஓடி வந்து, "இது யார் தெரிகிறதா சுந்தா?" என்று கேட்டதும், "தெரிகிறதே, தர்மு மாமி!" என்று கூறினான் சுந்தா.

"கல்யாணி! உனக்கு பாவமாகத் தோன்றவில்லையா இது?" என்று கேட்டார் விசுவம்.

"பாவமென்ன? என்னைவிட அதிகமான கரிசனத்தோடு அவனை வளர்க்க—லக்ஷ்மியைத்தான் நியமித்திருந்தேனே..." என்று கூறினாள் கல்யாணி.

"அது கிடக்கிறது கல்யாணி, அப்பா இறந்த பிறகு வீட்டை விற்று விட்டுத் தேசாந்திரம் போனதின் நோக்கமென்ன? சரி, போனாய், இந்த மாதிரி போகிறேன் என்று ஒரு வரி எழுதினாயோ எனக்கு?... பிறந்தகத்துக்குத்தானே உன்னை அனுப்பினேன்; பெற்றோர்களை இழந்ததும் நீ இங்குதானே வரவேண்டும்?" என்றான் விசுவம்.

காசியில் இருந்தபொழுது பெரியம்மை வார்த்து, விட்டதும், பிறகு பட்ட கஷ்டமும்—அதே சமயத்தில் கையிலிருந்த பணம் கரைந்ததும், அப்பளம் இட்டு ஜீவித்த கதையும் விவரமாகச் சொன்னாள் கல்யாணி.

"பார்த்தீர்களா? நான் சந்தோஷமாக வாழவேண்டும் என்ற காரணத்தால், பெற்ற குழந்தையைப் பிரிந்து இத்தனை துன்பங்களையும் அனுபவித்து விட்டாள் அக்கா!"

"லக்ஷ்மி! நீ வந்த அன்றே உன் அன்பு — உண்மையான அன்பு அவளைப்பற்றி இழுத்து வரும் என்றாய்! இழுத்துக் கொண்டு வந்து விட்டது, பல ஆண்டுகள் ஆகியும் கூட!" என்று மகிழ்ச்சி பொங்கக் கூறினான் விசுவம்.

"டேய் சுந்தா, என்னடா பார்க்கிறாய்? உன் அம்மா வந்து விட்டாள்!" என்றாள் லக்ஷ்மி மகிழ்ச்சியோடு.

"இல்லேடா. அவள் கிடக்கிறாள்! பெரியம்மா அல்லவா நான்?" என்றாள் கல்யாணி!

இங்கே உத்தரவு கொடுக்க, அங்கே மேற்பார்வையிட, ஒரு இடத்தை பரிசோதனை செய்ய — இம்மாதிரி வேலை நடக்கும் இடத்துக்கும் ஆபீஸுக்கும் துரிதமாக சென்றுவர ஒரு இன்ஜினியருக்கு மிகவும் தேவையானது ராயல் என்பீல்ட் மோட்டார் சைக்கிள்.

குறிப்பிட்ட இடத்துக்கு நேரத்தில் செல்ல வேண்டியவர்களுக்கு மிக்க அவசியமானது



# ராயல் என்பீல்ட் என்ஸைன் 150

நேரத்தை மிச்சப்படுத்த உங்கள் சொந்த ராயல் என்பீல்ட் மோட்டார் சைக்கிள்தான் சிறந்தது. ஜன நெருக்கடியான ரயில், பஸ் இவற்றுக்குக் காத்துக் கிடக்க வேண்டியதில்லை. குறித்த காலத்தில் அலுவல்களைச் செய்ய முடியாதோ என்று பயப்பட வேண்டியதில்லை. மேலும் ராயல் என்பீல்ட் என்ஸைன் 150 ஒரு காலனுக்கு சுமார் 130 மைல்கள் ஓடுகிறது. அதனால் உங்கள் பணமும் மிச்சப்படுகிறது.

தவிர இந்த உன்னத மோட்டார் சைக்கிள் அளிக்கும் எல்லா அனுகூலங்களையும் கவனியுங்கள். அதிகமான உறுதி, சுலபமாக இயக்குவது, அதிர்ச்சியைத் தாங்கும் விசேஷ அமைப்புகள், அதிக ரோட் க்ளியரன்ஸ், நீண்டயான பிரயாணத்திற்கு ஏற்ற பெரிய சக்கரங்கள், இலகுவான ஓட்டம், திறமையான பிரேக் பிடிப்பு........மறுபடி விற்கும்போது மிக மிக அதிகமான விலை மதிப்பு.

பல இடங்களுக்குப் போகவேண்டிய ஒருவருக்கு, ராயல் என்பீல்ட் என்ஸைன் 150போல் வேறொன்றும் சிறந்த தல்ல என்பதை நீங்களும் ஒப்புக்கொள்வீர்கள்.

- ★ துரிதமாகவும், பத்திரமாகவும் செல்வதற்குப் பெரிய சக்கரங்கள் உதவுகின்றன. தேய்மானம் குறைவு.
- ★ முகப்பு விளக்கு, முன் போர்க்கில் இணைக்கப்பட்டிருப்பதால், திரும்புந்தருணமே பாதையில் வெளிச்சத்தை அள்ளி வீசுகிறது. அபாயமின்றி இரவில் பிரயாணம் செய்ய இது உதவுகிறது.

## அலுப்பற்ற பிரயாணத்திற்கு—ராயல் என்பீல்ட் மோட்டார் சைகிள்

படிப்படியாகத் தயாரிப்பவர்கள்
**என்பீல்ட் இந்தியா லிமிடெட்**
மதராஸ் - 19

பூரண விற்பனை ஏஜெண்டுகள்
**மதராஸ் மோட்டார்ஸ் பிரைவேட் லிட்.**
மதராஸ் - பெங்களூர் - டில்லி

# குணக்குன்று



ஜெயலக்ஷ்மி

"யாரிடமிருந்து இப்பொழுது கடிதம் வந்திருக்கிறது?"

"கமலாவின் கணவரிடமிருந்து...."

"என்ன எழுதியிருக்கிறார்?"

"இந்தா! நீயே படித்துப் பார்!" என்று கூறிய வேதமூர்த்தி கடிதத்தைத் தன் மனைவியிடம் கொடுத்தான், நீண்ட பெருமூச்சு ஒன்றை விட்டபடியே.

தன் கணவன் கொடுத்த கடிதத்தை ஆவலுடன் படித்தாள் பாரதி.

"சிரஞ்சீவி வேதமூர்த்திக்கு. அநேக ஆசீர்வாதம். இங்கே நாங்கள் யாவரும் சுகமே. உன் தாயாருக்குத்தான் ரொம்பவும் உடம்பு சரியாக இல்லை. நீ உடனே வந்து உன் தாயாரை அழைத்துப் போகவும். கால தாமதம் செய்து என்னைச் சங்கடத்தில் ஆழ்த்தி விடாதே! உன் வரவை உடனே எதிர்பார்க்கிறோம் நானும் கமலாவும். உடனே கிளம்பவும். கோபாலன்."

கடிதத்தை மடித்து உறையிலிட்டபடியே, "இப்போது என்ன செய்யப் போகிறீர்கள்?" என்று கவலையுடன் கேட்டாள் பாரதி.

"என்ன செய்வது? நீதான் சொல்லேன்" என்று பரிதாபமாகக் கூறினான் வேதமூர்த்தி.

"உடனே போய் அம்மாவை அழைத்துக் கொண்டு வந்துவிட வேண்டியதுதான்" என்றாள் பாரதி.

"கையில் ஒரு நயா பைசாக்கூடக் கிடையாது. எப்படி நான் அம்மாவை அழைத்து வர முடியும்?"

"இதோ என் கைவளையல் இருக்கிறது. இப்பொழுதே இதை எடுத்துக் கொண்டு பாங்கிக்குப் போய் வாருங்கள். இன்றிரவு வண்டிக்கே கிளம்ப வேண்டும்." கை வளையலைக் கழற்றித் தன் கணவனிடம் கொடுத்தாள் பாரதி.

"பாரதி ..." வளையலைக் கையில் வாங்கிக் கொண்டே வேதமூர்த்தி தயங்கி நின்றான்.

**அருள் வாக்கு**

உலகுக்கு சிருஷ்டி ஸ்திதியைப் போல் ஸம்ஹாரமும் அவசியமேயாகும். நாமெல்லோரும் நூறு வருஷம் சாகாமல் இருந்து, நமக்குப் பின்பிறந்தவர்களும் சாகாமல் இருந்தால் நாம் வசிக்க இடம் போதுமா? உணவுதான் கிடைக்குமா? அப்படி ஒரு சுவாமி சம்ஹாரம் செய்யாவிடில் நாம் வயதானவர்களை அடித்துக் கொன்று அவருடைய தொழிலை நாமே செய்ய ஆரம்பித்து விடுவோம்.

**ஸ்ரீ சங்கராச்சாரியார், காமகோடி பீடம்.**

'' ஏன் தயங்குகிறீர்கள்? வளையல் நாளைக்கு வரும். அம்மாவைப் பார்க்க முடியாது. கவலைப்படாமல் போங்கள் '' என்று அன்புடன் உத்தரவிட்டாள் பாரதி.

காரிருளைக் கிழித்துக்கொண்டு கன வேகமாகச் சென்று கொண்டிருந்தது திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ். தூக்கம் பிடிக்காமல் ஜன்னல் அருகில் உட்கார்ந்திருந்தான் வேதமூர்த்தி. அவனுடைய உள்ளம் மிகவும் குழம்பிக் கிடந்தது. தான் செய்தது சரியா என்று தனக்குத் தானே பல தடவைகள் கேட்டுக் கொண்டான் அவன்.

* * *

மீனாட்சிக்கு நான்கு பெண்களுக்குப் பிறகு ஐந்தாவதாகப் பிறந்தவன் வேதமூர்த்தி. அபூர்வமாகப் பிறந்தவன். அருமையாகச் சீராட்டப்பட வேண்டியவன். ஆனால் மீனாக்ஷி அவனை அப்படி வளர்க்கவில்லை. அவளுடைய முழு அன்புக்கும் பாத்திரமானவர்கள் அவளுடைய நான்குபெண்களும்தான். வேதமூர்த்திக்கு ஏதோ கடனுக்காகச் செய்வது போலத் தான் அவள் எதையுமே செய்து வந்தாள்.

காரணம் கேட்டால், ''என்ன பிள்ளை வேண்டிக் கிடக்கிறது. பிறப்பதற்கு நான்கு மாதங்கள் இருக்கும்போதே தகப்பனாரை விழுங்கி ஏப்பம் விட்டு விட்டான்'' என்பாள் மீனாக்ஷி. அவள் ஆறுமாதம் கர்ப்பமாக இருக்கும் போதே அவள் கணவர் இறந்து விட்டது உண்மைதான். இந்த விதியின்கொடுமையை வேதமூர்த்தியின் தலையெழுத்து தாங்கிச் சுமக்க வேண்டி யிருந்தது.

அன்னையின் அலட்சியத்திலும் வெறுப்பிலுமே வளர்ந்து பெரியவனானான் வேதமூர்த்தி. ஊராரின் ஏசல்களுக்குப் பயந்து கொண்டு அவனை எஸ். எஸ். எல். சி. வரையில் படிக்க வைத்தாள் மீனாக்ஷி. யார் செய்த பூஜா பலனோ? வேதமூர்த்திக்கு நூறு ரூபாய் சம்பளத்தில் ஒரு வேலை கிடைத்தது.

இதற்குள் அவனுடைய சகோதரிகள் நால்வருக்கும் கலியாணத்தை முடித்து விட்டிருந்தாள் மீனாக்ஷி. நால்வரும் நல்ல இடங்களில் வாழ்க்கைப்பட்டிருந்தார்கள். கையிலிருந்த பொருளை யெல்லாம் தாராளமாகப் பெண்களுக்குச் செலவழித்தாள். வீட்டிலிருந்த பண்டம், பாத்திரங்களையும் ஒவ்வொருத்திக்கு ஒவ்வொன்றாக ஏதேதோ சாக்குக்கூறிக் கொடுத்துக் கொண்டிருந்தாள். ஒன்றுக்கும் வாயைத் திறப்பதில்லை வேதமூர்த்தி. 'அம்மாவுக்கு தெரியாதா' என்று இருந்தான் அவன்.

இந்த நிலையில் வேதமூர்த்திக்கும் சில பெண் ஜாதகங்கள் வந்தன. அவைகளில் பாரதியின் ஜாதகம் தேர்ந்தெடுக்கப் பட்டது. பாரதி பெயருக்கேற்ப நல்ல குணவதியாகவும் இருந்தாள். வீட்டுக்கு மருமகள் வந்ததும் மீனாக்ஷிக்கு நல்லதாகி விட்டது. வீட்டைப் பற்றிய கவலையையும் பொறுப்பையும் அவள் அறவே கைவிட்டு விட்டாள். வருஷத்தில் முந்நூற்றிருபது நாட்கள் பெண்கள் வீட்டிலேயே காலம் கழிப்பாள்.

ஆனால் வேதமூர்த்திக்கு மட்டும் ரொம்ப மனக்குறை. தன் தாயார் தன் மீது அன்பாக இருக்கவில்லையே என்று ஏக்கம். தன் சகோதரிகளிடம் காட்டுகிற அன்பைத் தன்னிடம் காட்டக் கூடாதா என்று அங்கலாய்ப்பான். இந்த ஆதங்கம் சில சமயம் ஆத்திரமாகவும் மாறுவதுண்டு. அந்தச் சமயங்களில் மீனாக்ஷியிடம் 'உனக்கு சதா பெண்களைப் பற்றித் தான் நினைப்பு. அவர்களுக்குத்தான் ஓடி ஓடி உழைக்கிறாய்? எனக்காக நீ என்ன செய்திருக்கிறாய் ?' என்று சண்டை பிடிப்பான்.

தன் மீது எள்ளளவும் பற்றுதலில்லாத அன்னையை அழைத்து வரத்தான் போகிறான் வேதமூர்த்தி. அவளிடம் பொருள் உள்ள மட்டும் இன்முகம் காட்டிப் பெற்றுக்கொண்டார்கள் பெண்கள். தாயின் உடலில் திடம் இருந்தமட்டும் அதைப் பயன்படுத்திக் கொண்டார்கள். இரண்டும் தீர்ந்த பிறகுதான் அவர்களுக்குத் தங்களுடைய தாயார் வேதமூர்த்திக்கும் தாய் என்கிற நினைப்பு வந்தது. அதற்குத் தங்கள் தங்கள் கணவன்மார்களைக் காரணபூதர்களாகச் சுட்டிக் காட்டினார்கள். அவர்களின் மேல் பழியைப் போட்டு விட்டுத் தாங்கள் தப்பித்துக் கொண்டார்கள். இதைத்தான், இந்த அற்பப் புத்தியைத்தான் அடியோடு வெறுத்தான் வேதமூர்த்தி.

என்ன செய்வது? வேறு வழியில்லை. கடமை ஒரு பக்கம், மனைவியின் தூண்டுதல் இன்னொரு பக்கம். இரண்டுக்கும் மேலான ஒன்று உண்டு. ஆம், அதுதான் தாய் மீது அவனுக்குள்ள அன்பு. அவளுக்கு வேண்டுமானால் மகன் மீது அன்பில்லாமல் இருக்கலாம். இவனுக்குத் தன் அன்னையின்மீது அன்பு இருக்கிறதே! அந்த அன்புதான் அவனை இப்போது விரட்டியிருக்கிறது. அந்த அன்பு மனைவியின் வளையலை விற்கவும் துணிந்து விட்டது.

* * *

''சார்! மணியென்ன?'' மேல் பெஞ்சியில் படுத்திருந்த ஒரு வாலிபன் வேதமூர்த்தியைப் பார்த்துக் கேட்டான்.

''நான்கு.'' சுருக்கமாகப் பதில் கூறினான் வேதமூர்த்தி.

''நான்காகி விட்டதா?'' என்று வினவியபடி கீழே இறங்கினான் அந்த வாலிபன்.

கீழே அரை குறைத் தூக்கத்தில் ஆழ்ந்திருந்தவர்களும் ஒவ்வொருவராக எழுந்திருந்து உட்கார்ந்திருந்தார்கள். பேச்சு அலைகள் ஒன்றன்மேல் ஒன்றாக எழ ஆரம்பித்தன. வேதமூர்த்தியின் எதிரில் ஒரு பெரியவர் உட்

கார்ந்திருந்தார். அவருடைய வயோதிக முகத்தில் சாந்தம் மிகுந்த தெய்வீக ஒளி வீசிக் கொண்டிருந்தது.

மேல் பெஞ்சியிலிருந்து கீழே இறங்கிய வாலிபன் அந்தப் பெரியவரைப் பார்த்து விட்டு, ''ஓ! தாங்களா நமஸ்காரம்!'' என்று கை குவித்தான்.

''உட்காரு அப்பா, ராமசுவாமி! இப்போது என்ன செய்து கொண்டிருக்கிறாய்?'' என்று கேட்டார் பெரியவர்.

இப்படித்தான் அவர்களிடையே பேச்சு வளர்ந்து கடைசியில் தாயன்பில் வந்து முடிந்தது. அப்போது அந்தப் பெரியவர், ''நீ என்னதான் சொல் ராமு! பெற்றவளுக்குத் தன் குழந்தைகள் எல்லோரும் சமம்தான். அவளால் தன் குழந்தைகளிடம் பாரபட்சமாக நடந்துகொள்ள முடியாது'' என்று உறுதியாகக் கூறி முடித்தார். ''என்னப்பா! உன் அபிப்பிராயம் என்ன?'' என்று வேதமூர்த்தியைப் பார்த்துக் கேட்டார் பெரியவர்.

இவர்களுடைய சம்பாஷணைகளை யெல்லாம் உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டிருந்தான் வேதமூர்த்தி.

* *

**வா**டகை வண்டியை விட்டுத் தன் தாயாரைக் கைப்பிடியாகப் பிடித்து அழைத்துக் கொண்டு உள்ளே வந்தான் வேதமூர்த்தி. அங்கே கட்டிலில் தயாராகப் படுக்கை விரிக்கப்பட்டிருந்தது. அதில் அம்மாவைப் படுக்க வைத்தான். வாசலில் இன்னொரு கார் வந்து நிற்கும் சத்தம் கேட்டது. எட்டிப் பார்த்தான். டாக்டர் உள்ளே வந்து கொண்டிருந்தார். இவை யெல்லாம் மனைவியின் முன்னேற்பாடுகள் என்பதை எண்ணி உள்ளூறப் பெருமிதம் கொண்டான் வேதமூர்த்தி.

''வாருங்கள் டாக்டர்!'' தாயாரின் அருகில் வந்தான். மீனாட்சி உடலைப் பரிசோதித்து விட்டு வேதமூர்த்தியைத் தனியாக அழைத்துச் சென்று, ''உடம்பு என்று சொல்லும்படியாக ஒன்றுமில்லை உங்கள் தாயாருக்கு. வயதாகி விட்டது. உடல் தளர்ந்து விட்டது. பலஹீனம் அதிகமாகி இருக்கிறது. மருந்தைக் கொடுத்து வந்தால் அதிகமாகப் போனால் ஒருவாரம் தாங்கலாம். அவ்வளவு தான்!'' என்று கூறினார்.

''என்ன டாக்டர் அப்படிச் சொல்லுகிறீர்கள்?'' என்று பதறினான் வேதமூர்த்தி.

''என்னப்பா செய்யலாம்? அவர்களுக்கு மேலிடத்து அழைப்பு வந்து விட்டது'' என்று கூறி விடைபெற்றுக் கொண்டார் டாக்டர். இடிந்து போய் உட்கார்ந்துவிட்டான் வேதமூர்த்தி.

**நா**ட்கள் நான்கு நகர்ந்தன. மீனாட்சியின் உடலில் அபிவிருத்திக்கான அறிகுறியையே காணோம். வேதமூர்த்தி ரொம்பவும் கவலை



கொண்டான். பார்வதி கண்ணீர் விடுவதற்கு ஆரம்பித்தாள்.

''அம்மா! அக்காவுக் கெல்லாம் தந்தி அடித்து விடட்டுமா?'' என்று கேட்டான் வேதமூர்த்தி தன் தாயாரை நெருங்கி.

''வேண்டாம் அப்பா! நான் செத்துப் போனால் ஆடம்பரம் எதுவும் இல்லாமல் சும்மா தீயிட்டுக் கொளுத்தி விடு போதும். வேறு ஒன்றும் நம்மவர்கள் செய்வதுபோல் நீ செய்ய வேண்டாம். எனக்காகக் காலணா செலவழிக்கக் கூடாது; உடலையும் வருத்திக் கொள்ளக்கூடாது!'' என்று கூறினாள் மீனாக்ஷி மெல்லிய குரலில்.

''உனக்கென்ன பைத்தியம் பிடித்து விட்டதா? ஏனம்மா இப்படிப் பேசுகிறாய்?'' அழாக் குறையாகக் கேட்டான் வேதமூர்த்தி.

''இவ்வளவு நாட்களாக உன்னிடம் சொல்லாத, ஏன் யாருக்குமே தெரியாத ஒரு ரகசியத்தை உன்னிடம் இன்று கூறப்போகிறேன். நீ நம்பமாட்டாய். வேறு வழியில்லை, நம்பித்தானாக வேண்டும்!

''ஆம். எனக்கு ஐந்தாவதும் பெண்ணாகத்தான் பிறந்தது. உடனே இறந்தும் விட்டது. நான் பிரசவித்தது ஆஸ்பத்திரியாதலால், யாரோ ஒரு அனாதைப் பெண் பெற்றுத் தனக்கு வேண்டாமென்று உதறி விட்டு ஓடி விட்டவளின் குழந்தையான உன்னை என் குழந்தையாக உலகத்தாரை நம்பச் செய்ய முடிந்தது. இதற்குப் பெரிதும் உதவியவள் ஒரு டாக்டர் அம்மாள்.

'வேதா! அப்படி உன்னை நான் ஏற்றுக் கொள்ளக் காரணம்? பணத்தாசைதான். என் தகப்பனாருக்கு நான் ஒரே பெண். 'பிள்ளை இல்லை'யே என்று அவருக்கு ரொம்பவும் குறை. எனக்காவது பிள்ளை பிறந்திருந்தால் அவருக்குத் திருப்தியாக இருக்கும். என்னுடைய ஐந்தாவது பிரசவத்திலாவது தமக்குப் பேரன் கிடைப்பான் என்று நம்பினார் அவர். அப்படி எனக்கு இந்தத் தடவையும் பிள்ளை பிறக்கா விட்டால், பிறகு என்றுமே பிறக்க இடமில்லை. அதனால் தன் சகோதரருடைய பேரனையே தன் அபிமான புத்திரனாகப் பாவித்துக் கொள்வது என்று அவர் தீர்மானித்திருந்தார்.

''எனக்கோ நான்கு பெண்கள். சம்பாதித்துக் கொண்டுவரும் கணவரோ காலன் வசமாகிவிட்டார். நான் எப்படி நான்கு பெண்களை வளர்த்து ஆளாக்கி அவர்களுக்குக் கலியாணமும் செய்ய முடியும்? அப்படி என்மீது இரங்கிக் கொடுக்கும் சொற்பத் தொகை எப்படி அதற்குப் போதும்?

''அப்பாவின் முழு பூஸ்திதியையும் நானே பெற்றுக் கொள்ள ஆசைப்பட்டேன். அதற்கு எனக்குப் பிள்ளை பிறக்க வேண்டுமே. பிறந்து இறந்ததோ பெண். பலவாறு யோசித்துவிட்டு நொடியில் நான் ஒரு தீர்மானத்துக்கு வந்தேன். அதன் பலன்? நீ என் மகனா

ளாய். ஒரு அனாதைக் குழந்தை நல்ல சௌக ரியத்துடன் வாழலாம் என்கிற ஒரே கார ணத்துக்காக அந்த டாக்டர் அம்மாள் உன்னை எனக்கு அளித்தாள்.

"எனக்குப் பேரன் பிறந்துவிட்டதில் அப்பா வுக்குப் பரம திருப்தி. உனக்கு ஆறுவயதாக இருக்கும் போதே அப்பா இறந்துபோனார். அவருடைய தெல்லாம் என்னுடையதா யிற்று. அதுவரையில் அப்பாவுக்காக உன் மீது அன்பாக இருப்பதுபோல நடித்து வந் தேன். பிறகு என்னால் அப்படி இருக்க முடிய வில்லை. யாரோ பெற்ற குழந்தை நீ. உனக்கு இவ்வளவு அதிர்ஷ்டமா என்று எண்ணமிட் டேன் நான். உனக்குச் சம்பந்தமில்லாத ஒரு வரின் சொத்துக்களில் கொஞ்சம் கூட உனக் குக் கிடைக்கக்கூடாது என்று எல்லாவற்றை யும் என் பெண்களுக்காகவே செலவிட்டேன். அவர்களுக்காகவே உழைத்தேன். அவர்க ளிடமே கடைசிவரையில் இருந்து உயிரைவிட ஆசையும் பட்டேன். ஆனால் நடக்கவில்லை.

"பொருள் பலமும், உடல் பலமும் இருந்த வரையில் என்மீது அன்பாக இருந்த என் பெண்கள் இரண்டும் தீர்ந்த பிறகு என்னை வெறுத்தார்கள். அதற்குக் காரணம் தங்கள் தங்கள் கணவர்கள் மேல் கூறினார்கள். எது எப்படி யிருந்தால் என்ன? அவர்களிடம் எனக்கு இடமில்லை. இங்கே விரட்டி விட் டார்கள். குணக்குன்று நீ! அன்பு காட் டாத அன்னையையும் ஆதரித்தாய். உனக்கு நான் ரொம்பவும் துரோகம் செய்து விட் டேன். உனக்காக நான் செப்புக்காசுகூட வைக்கவில்லை. அதனால்தான் சொல்லுகிறேன். நீ எனக்காகக் கொஞ்சம்கூடச் செலவழிக் காதே! என்ன, தெரிந்ததா?" என்று கேட்டு முடித்தாள் மீனாக்ஷி.

"அம்மா! நீ என்னைப் பெற்றவளானாலும் சரி, இல்லையானாலும் சரி, நீ எனக்கு அம்மாவேதான். ஒரு விதத்தில் பெற்ற தாயையும் விட நீ மிக உயர்ந்தவள். எங் கேயோ அனாதையாகத் திரிய வேண்டியவனை எடுத்து வளர்த்து ஆளாக்கிய நீ எனக்குத் தெய்வம். உன்னை என்னால் வெறுக்க முடி யாது. உனக்கு நீ இருக்கும் போதும், இறந்த பிறகும் செய்ய வேண்டியது எதையும் நான் குறைக்க மாட்டேன். இது உறுதி!" என்று கூறித் தாயாரின் கரங்களை எடுத்துத் தன் கண்களில் ஒற்றிக் கொண்டான் வேதமூர்த்தி. மீனாக்ஷியின் கண்களிலிருந்து அருவியைப் போல் கண்ணீர் கொட்டியது.

* * *

"என்ன, வேதா! இப்படி எப்பொழு தும் பிரமை பிடித்தமாதிரி உட்கார்ந்திருந் தால் எப்படி? இன்னும் பத்து நாளையக் காரியங்க ளெல்லாம் ஆக வேண்டாமா? எழுந்திருந்து சாப்பிட வா!" என்று அழைத் தாள் ஜானகி தன் தம்பியிடம்.

"என்னமோ அக்கா! அம்மா இவ்வளவு சீக்கிரம் நம்மையெல்லாம் விட்டு விட்டுப் போய் விடுவாள் என்று நான் நினைக்கவே யில்லை!" என்று கூறி விம்மினான் வேதமூர்த்தி.

"மேற்கொண்டு ஆகவேண்டிய காரியங்க ளுக்கு உன்னிடம் பணமிருக்கிறதா, வேதா?" என்று கேட்டாள் கமலா.

"அதற்கென்ன? எப்படியாவது சமாளித் துக் கொண்டால் போயிற்று!" என்று மழுப் பினான் வேதமூர்த்தி.

"பாரதியின் சங்கிலியை விற்பாய். வேறு என்ன?" என்றாள் விமலா.

"அவனுக்குக் கொடுக்க வேண்டியதைக் கொடுத்து விட்டேன், அக்கா!" என்றாள் கடைக்குட்டி பத்மா.

மூத்தவள் தன் மடியிலிருந்து ஒரு நீண்ட கவரை எடுத்து வேதமூர்த்தியிடம் கொடுத்தாள். "என்ன அக்கா இது?" என்று விழித்தான் வேதமூர்த்தி.

"இதில் இருபதினாயிரம் ரூபாய் இருக் கிறது. வைத்துக் கொள். நாங்கள் நான்கு பேர்களும் தலைக்கு ஐயாயிரம் போட்டு உன் னிடம் கொடுத்திருக்கிறோம். இன்னும் நாங்கள் உனக்கு எவ்வளவோ கொடுக்கலாம். இந்தச் சமயம் எங்களால் முடிந்தது இவ் வளவுதான்" என்றாள் ஜானகி.

"இதெல்லாம் எதற்காக எனக்குக்கொடுக்க வேண்டும்?" என்று கேட்டான் வேதமூர்த்தி.

"அம்மா கொடுக்கத் தவறியதை நாங்கள் கொடுக்கிறோம், அவ்வளவுதான். ஆனால் அவள் காட்ட வேண்டிய தாயன்பை, காட்டத் தவறிய தாயன்பை நாங்கள் எப்படி அப்பா உன்மீது காட்டுவோம்?" என்று கூறிக் கண்ணீர் பெருக்கினாள் விமலா.

"அம்மாவுக்கு நாங்கள் எவ்வளவோ சொன்னோம். அவள் கேட்கவில்லை. பிறகு நாங்கள் நால்வரும் ஒரு முகமாக அவள்மீது அலட்சியம் காட்டிய பிறகுதான் அவளுக்கு உன்னைப் பற்றிய நினைப்பு வந்தது. என்ன இருந்தாலும் அவள் உன்னிடம் இருந்து, இறந்தால்தானே பார்க்கிறவர்களுக்கு நன்றாக இருக்கும்? அம்மாவுக்குக் கூட எங்கள்மீது கடைசியில் வெறுப்பும் கோபமும் உண்டாகி விட்டது! அதற்காகப் பார்த்தால் முடியுமா? உலகில் நியாயம் என்று ஒன்று இருக்கிறதே!" என்று கூறிக் கண்ணைக் கசக்கினாள் கமலா.

தலைக்குத் தலை பேசும் தன் சகோதரிகளின் வார்த்தைகளுக்குப் பதில் எதுவும் கூறாமல் திகைத்துப் போய் உட்கார்ந்திருந்தான் வேத மூர்த்தி. அவன் மனத்திரையில் அன்றொரு நாள் ரயிலில் சந்தித்த பெரியவரின் முகம் பளிச்சென்று தோன்றி, "நான் கூறியதை இப்பொழுதாகிலும் ஒப்புக் கொள்ளுகிறாயா? பத்துமாதம் சுமந்து பெற்ற தாய் தன் குழந் தைகளிடம் ஒருபோதும் பாரபட்சம் காட்ட மாட்டாள். தெரிந்ததா உனக்கு?" என்று கேட்பது போலத் தோன்றியது. அதற்கு இவன் உள் மனம், 'தாய் மனத்தின் தன்மை தான் அப்படிப்பட்டது. இப்படி உடன் பிறக்காத ஒரு சகோதரனிடம் அன்பை வர் ஷிக்கத் தன் தாயையே விரோதித்துக் கொள் ளும் சகோதர அன்பை எப்படி வர்ணிப்பது?' என்று திருப்பிக் கேட்டது. அதற்கு அந்தப் பெரியவரின் அருள் முகம், 'யார் வயிற்றில் யார் பிறந்தால் என்ன அப்பனே! எல்லோ ரும் பாரதத்தாய் பெற்ற குழந்தைகள்தானே? அந்தச் சகோதர அன்பு எங்கே போகும்?' என்றது. வேதமூர்த்தி தன்னை மறந்த ஒரு நிலையில் உட்கார்ந்திருந்தான். அவனுக்குத் தன் சகோதரிகளிடம் 'உங்கள் அம்மா என் அம்மா இல்லை' என்று சொல்ல மனமில்லை.

# மலிவுதான்!

## ஆனாலும் இரட்டிப்பு விலை

இது ஒரு உயர்ந்த ரக கடிகாரம். இதை நீங்கள் ஒரு நம்பகமான வியாபாரியிட மிருந்து வாங்கும்போது ரசீதும், உத்திர வாதப் பத்திரமும் நீங்கள் பெறவேண்டியது அவசியம். அப்படிக்கில்லாவிட்டால் உங்களுக்கு நஷ்டம்தான்.

தெருவில் நின்று விற்பனை செய்பவன் உங்களுக்கு இந்த கடிகாரத்தை ரசீது, ஒரு வருஷ உத்திரவாதப் பத்திரம் இவைகள் கொடுக்காமல் விற்க முற்பட்டால் இது அநேகமாய் திருட்டுத்தனமாகக் கடத்தப்பட்ட கடிகாரமாகத்தான் இருக்கவேண்டும். இதை வாங்க வேண்டும் என்ற ஆவா உங்களுக்கு ஏற்படுவது சகஜம்தான். ஏன்? பொறுப்புள்ள வியாபாரி சொல்லும் விலையைவிட இது விலை குறைவல்லவா. ஆனால் வாங்குவதற்கு முன் நீங்கள் அடையப் போகும் நஷ்டத்தை சிறிது சிந்தித்துப் பாருங்கள். கடிகாரம் வாங்கும்போது அதை ஒரு கௌரவமான வியாபாரியிடமிருந்து பெறுங்கள். வாங்குமுன் அது ஸ்விஸ் ஜுவெல்ட்-லிவர் கடிகாரம்தானா என்பதை நிச்சயப்படுத்திக்கொள்ளுங்கள். உங்கள் கடிகார வியாபாரியின் அனுபவம் உங்களுக்கு ஆதரவு அளிக்கிறது.

ஜுவெல்கள் பொருத்தப்பட்ட ஸ்விஸ்—லிவர் கடிகாரம் ஒரு அவசியமான தேவை பொருளேயன்றி ஆடம்பரத்திற்கல்ல



ஸ்விட்ஸர்லாந்து கடிகார தயாரிப்பாளர்கள்

FHI-32 TAM

16. குடி நீர்

"வையத்து வாழும் புலவர்களே, வாரீர்! வாரீர்! கவிஞர்களே வாரீர்! வந்து பெருங் கூட்டமாகக் குழுமிடுவீர்!" என்று கூறினாராம் புலவர்.




"இதோ வந்தோம். ஐயா! எம்மை இங்கு விளித்திட்ட காரணம் யாதோ?" என்று கேட்டாராம், வந்திருந்த புலவரில் ஒருவர்.

"பாடுங்கள்! யாவரும் தத்தமது மனம் இரங்க உயிர் நெகிழ உடல் குன்றப் பாடுங்கள்....."

"என்ன பாட வேணும் ஐயா?"

"ஏன்? இதுகூடத் தெரியவில்லையா? அறம் பாடுங்கள். வள்ளல் சீதக்காதியின் ஆவியைக் கவர்ந்த கயவன் மரவி வீழ அறம் பாடுங்கள்! நல்லார்க்கு இன்னல் புரிந்த நமன் வீழப் பாடுங்கள்" என்றார் பொய்யாமொழிப் புலவர்.

"எந்த எமன்?" என்றார் புலவருள் ஒருவர்.......இதைத் தொடர்ந்து ஏதாவது ஆராய்ச்சிகரமான விசாரணைகள் நடந்ததோ என்னவோ தெரியாது. ஆனால் இந்த வள்ளல் சீதக்காதி என்பவர் யார்? அவரிடம் இந்தப் புலவருக்கு இவ்வளவு பரிவும் பற்றுதலும் ஏற்படக் காரணம் என்ன?

வள்ளல் என்று அழைக்கப்படும் தமிழ் நாட்டினர் எழுவருள் சீதக்காதி ஒருவர். இஸ்லாம் மதத்தினரான இவருக்குத் தம் தாய்நாடான தமிழ் நாட்டின் மேலும், தமிழின் மேலும் இருந்த பற்றுதல் பிரசித்தமானது. ஆகவே இவர் தமிழ்ப் புலவர்களுக்கு அளித்த ஆதரவு அளவற்றது.

புலவர் விடுதி என்ற நிலையத்தை நிறுவினன் வள்ளல் சீதக்காதி. தமிழ்ப் புலவன் என்று சொல்லிக் கொண்டு வருவோருக்கெல்லாம் இவ்விடுதியில் வரவேற்புண்டு. மாதக் கணக்கில் ராஜ போகத்தில் இவ்விடுதியில் வாசம் செய்த பிறகுதான் வள்ளலைக் காணும் நன்னாள் ஒருவருக்குவரும். விடுதியில்குழுமியிருந்த புலவரின் கூட்டம் எத்தகையதெனஓரளவேணும் இதனால் அறியலாமல்லவா?

நம் நாடு, நமது கலை, நமது பண்பு என்னும் முப்பிரியினால் முறுக்கிய ஒரு தாம்புதான்பண்டிதன், பாமரன், புலவன், கலைஞன், உழுதுண்போன், தொழுதுண்போன், பாவலன், நாவலன், காவலன் யாவரையும் ஒன்றுபடப் பிணைத்திருந்தது. ஒரே பண்பு; அதனால் பிறந்த பற்றுதல். அதன் விளைவு ஒருயிரும் பல உடலுமாய் விளங்கியது. இதில் குலம் சாதி மதம் தொழில் போன்றவைகளின் பேத புத்தி தலைகாட்ட முடியாது; தலை காட்டியதில்லை. இது நமது நேற்றைய வாழ்வு, இன்றோ? இப்பண்புக்கும் ஒற்றுமைக்கும், அன்புக்கும் ஆற்றலுக்கும் இரண்டு மூகாந்திரங்களிலிருந்துஇன்னல் உண்டாகி யுள்ளதைக் காண்கிறோம்.

பிறநாட்டின் கலாசாரம், அன்னியரின் வாழ்க்கைப் போக்கு அறிவின் பெருக்குக்கான முயற்சிகள் ஆகியவற்றில் நம்முள் சிலருக்கு ஏற்பட்ட வியாமோகம், சுதந்திரம் பெற்ற பிறகும் மாறவில்லை. இந்த வியாமோகம் அம்மட்டோடு தில்லாமல், நமது கலை, ஆசாரம், கல்வி, பண்பு முதலியவற்றில் ஒருவித வெறுப்பும் ஏளன புத்தியும் அதிகமாகப் பெருகிடவும் காரணமாகிறது. இது ஒரு வகை இன்னல். இதனிடையில் "நாட்டு வைத்தியச் சாஸ்திரங்கள் தெரிவிப்பது-தமிழ்ச் சித்தர்கள் எழுதியுள்ளார்" என்று எழுதும் கட்டுரைகளையும் விரும்பிப் படிப்போரும் அவற்றைச் செயலில் கொணர்ந்து பெரும் பயனை அடைந்தோரும்தமது மகிழ்ச்சியையும் நன்றியையும் எழுதித் தெரிவித்தலைக் காண மனம் மகிழ்ச்சியடையத்தான் செய்கிறது.

கல்கி வாசகர்களில் சிலர் "இன்ன வியாதிக்குச் சிகிச்சை என்ன என்பதை எழுதுங்கள்" என்றும், தமது நோயின் விவரங்களை எழுதி, "இதற்கான சிகிச்சையைக் 'கல்கி'யில் எழுதுங்கள்" என்றும் பணிக்கின்றனர்.

கட்டுரைகளை எழுதுவதற்கு ஒரு திட்டத்தை வகுத்து அதையும் தெரிவித்துள்ளேன். அந்தத் திட்டப்படிதானே கட்டுரைகளை எழுதமுடியும்? தனிப்பட்ட வாசகர்களின் விருப்பப்படி எழுதத் தொடங்கினால் கழுதை விற்கச் சந்தைக்குப் போன கிழவன் கதையாய் முடியும்.

ஆனால் வாசகரின் விருப்பத்தைப் புறக்கணிக்கவும் இஷ்டமில்லை. ஓரளவுக்காவது அவர்கள் செய்யத் தக்கது இன்னதென்று தனிக் கடிதம் மூலம் பதில் எழுதவும் முயற்சிக்கத் தயாராயுள்ளேன். பதில் கிடைக்கச் சிறிது காலம் தாழ்ந்து விடுவது தவிர்க்க முடி

யாதது. இதை அன்பர்கள் பொறுக்க வேண்டும். இதற்கும் வசதி இல்லாது சில அன்பர்கள் தமது பெயர் விலாசங்களைக் கொடுக்காமல் ''ஒரு மாணவன்'' என்றும் ''ஒரு சகோதரி'' என்றும் எழுதி விடுகின்றனர். இவர்களுக்கு எப்படிப் பதில் எழுதுவது? இவ்வித இடைஞ்சல்கள் இல்லாமல் நண்பர்கள் உதவி புரிந்திடல் மிகவும் அவசியம்.

குடிக்கும் நீரைப் பற்றியல்லவா கடைசியாக எழுதி வந்தது?

கிணறு போன்ற ஊற்று ஜலமோ—அவ்வூற்றுள்ள நிலத்தன்மை, கிணற்றைத் தூரு வாரிச் சுத்தமாய் வைத்துக் கொள்ளும் தரம், அங்கும் சூர்ய கிரணம் வாயுக்களின் செயல் ஆகியவற்றை யொட்டி மாறிடும் இயல்புள்ளவையா யிருக்குமாதலின், கிணற்று நீரின் குணத்தையும் தரத்தையும் இன்னதென்று நிச்சயித்துச் சொல்ல இயலாது.

ஆயினும் ஐப்பசி மாதத்தில் பகலில் சூரிய வெப்பமும் காற்றும், இரவில் சந்திர கிரணமும் நட்சத்திரங்களின் ஒளியும் வீசிக் கொண்டிருப்பதாலும்—இரவு பகல் அறுபது நாழிகையும் மாதம் முப்பது நாளும் அஸ்தமனமே இல்லாமல் ஒரே சீராக வானத்தில் நிலைபெற்றிருக்கும் அகஸ்திய நட்சத்திரத்தின் ஒளிக் கதிர்களின் வீச்சினாலும் சகல ஜலாசயங்களிலுமுள்ள நீர் தூய்மை நிலையைப் பெற்று ஸ்நானபானாதிகளுக்குச் சிறந்ததென ஏற்கத் தக்கதாகும் என்று சாஸ்திரம் கூறும்.

பாசி, சேறு சகதிகள் நிரம்பியும் கலங்கியுமிருக்கும் தண்ணீரைக் குடிக்கக் கூடாது. புல் பூண்டுகள், செடி கொடிகள்—நிழல், இலைகள் வீழ்ந்து அழுகிக் கொண்டிருக்கும் நிலையங்களில் உள்ள நீரையும் குடிக்கக் கூடாது. வெய்யில் காற்று தடையின்றி ஸ்பரிசிக்காத தண்ணீர், புதிய வெள்ளம்—கலங்கியும் நுரையுடனுமுள்ள நிலையில் குடிக்கத் தக்கதல்ல. பூச்சிப் புழுக்கள் நெளியும் தண்ணீரைத் தொடவும் கூடாது.

வெந்நீரைக் குடிப்பது மிகவும் நல்லது. இதனால் ஆகாரம் எளிதில் ஜெரிக்கும்; பசி எடுக்கும். வயிற்றுப்புசம், தொண்டைக் கம்மல் தீர்ந்து, உடல் இலேசாகிக் குரலும் வெண்கலக் குரலாகி விடும். மூத்திராசயக் கோளாறுகள் நீங்கி, வியர்வை பிரிந்து சுருசுருப்பும் ஏற்படும். வயிற்றுப்புசம், விக்கல், ஜுரம், இருமல் அஜீரணம், பக்க சூலை, மூக்கடைப்பு, சளி, ஜலதோஷம்—இவை உள்ளவருக்கும் பேதிக்குச் சாப்பிட்டவருக்கும் வெந்நீர் மிகவும் பத்தியமான பானமாகும். முன் கட்டுரையில் சொன்ன 'சுக்குத் தண்ணீர்' என்னும் சுக்கு, ஜீரகம், தனியாக இட்டுக் காய்ச்சிய குடி நீரே மிகவும் நல்லது.

நோய்வாய்ப்பட்டு விட்டால் சிலர் தண்ணீர் குடித்தல் அபத்தியமாகும். செரிப்புத்தீ மந்தித்துள்ளவர், குன்மம் என்னும் சீரணாசயத்தைத் தழுவிய நோயுள்ளவர், பாண்டு என்னும் ரத்தக் குறைவுற்ற நோயுள்ளவர், உதரம் என்னும் பெருவயிறு, மூலம், கிரஹணி என்னும் வயிற்றுப் போக்கு, உடல் வீக்கம் என்னும் நோய்களுள்ளவர்கள் தண்ணீரே குடிக்கக் கூடாது. தீராத பக்ஷம் மிக மிகச் சிறிதளவு அருந்தலாம்.

பானம் என்பது பிராணிகளுக்குப் பிராணன் எனத் தக்கது. உலகமே தோற்றம் பெறுவதற்குத் தாயென உதவியது தண்ணீர்தான்.

நாவறட்சி, கைகால் சோர்வு, கண் இருட்டல், மூர்ச்சை முதலியவை தண்ணீர் குடிக்காமையின் வேட்கையால் உண்டாகும்; மரணமே சம்பவிப்பதும் உண்டு. ஆகவே தண்ணீரின்றி உயிர் வாழ்வது கடினம் என்பது மிகையல்ல.

பிரயாணம் செய்யும் காலங்களில் கிடைத்த தண்ணீரை யெல்லாம் குடிக்கும்படியான நிர்ப்பந்தம் ஏற்படலாம். ஆற்று நீர், கிணற்று நீர், குளத்துத் தண்ணீர் என்று இப்படிப்பட்டவற்றை அடுத்தடுத்து மாறி மாறிக் குடிப்பது ஹிதமல்ல. இதைச் செய்யக் கூடாது. ஒரு வகை நீர் குடித்தால் அது ஜீரணிக்கும் முன் வேறு வகையில் கிடைக்கும் நீரைக் குடிக்கவே கூடாது. வேண்டிய மட்டும் தண்ணீரைக் குடிப்பது அதன் மேலேயே சற்றைக்கெல்லாம் வெந்நீரைக் குடிப்பது என்பதும் அபத்தியமாகும். வெந்நீரைக் குடித்தவரோ, அதன் மேல் தண்ணீரை ஒருகாலும் குடிக்கவே கூடாது.

இவை யாவற்றையும் உத்தேசித்து, ஏற்கெனவே தெரிவித்த வண்ணம் சுக்கு, தனியா, சீரகம் - இவை இட்டுக் காய்ச்சிய நீரைக் குடிப்பது எல்லோருக்கும் பத்தியம்; எல்லாப் பருவத்திலும் இதம்.

**''ஊணுக்கு முன்பு வெந்நீருண்டக்**
**காற்பனம் போம்:**
**ஊணுக்குப் பின்பருந்தி ஹத்தியமாம்—**
**ஊணுக்குப்**
**பாதியிலுண்டாற் பசியும் பாதியாம்......**
— — — — —'' என்றபடி.

ஆகார காலத்தில் ஆகாரத்துக்கு முன்னும், ஆகாரத்தின் பிறகும், இடையிடையிலும் குடிக்கும் நீர், முறையே (பசியை மந்திக்கச் செய்து) உடல் மெலிவுறவும் உடல் பருமனுகவும் உடல் சம நிலையில் இருக்கவும் செய்யும்.

## உங்கள் குடும்பத்தினருக்கு நேர்த்தியான ஒரு

# நேஷனல்-எக்கோ ரேடியோ வாங்கிக் கொடுங்கள்!

**நேஷனல்-எக்கோ ரேடியோக்களின் ஒலி இன்பத்தில் மகிழும் நாடெங்குமுள்ள ஆயிரக்கணக்கான குடும்பத்தினர்களுடன் நீங்களும் சேருங்கள்! விலை ரூ. 195/-லிருந்து ரூ. 1200/- வரையில் பன்னிரெண்டு அற்புதமான மாடல்கள் உள்ளன.**

## நேஷனல்-எக்கோ ரேடியோக்கள் மான்ஸூனைஸ் செய்யப்பட்டவை





**மாடல் 241: 5 வால்வுகளுள்ள ஏஸி/டிஸி செட். மற்றும் 4 வால்வுகளுள்ள டிரை பாட்டரி செட். எல்லா வேவுகள்மீதும் நிகழ்ச்சிகளை கேட்கலாம். விலை ரூ. 195/-**

**எந்த நேஷனல்-எக்கோ வியாபாரியிடமும் இந்த ரேடியோக்களை இலவசமாக இயக்கிக் காண்பிக்கச் சொல்லுங்கள். விலைகளில் கழிவு இல்லை. உள்ளூர் வரிகள் தனி. பணம் தவணைகளில் கொடுத்தால் போதுமா·**



**மாடல் 270/1: 'சிபு குமார்'— 5 வால்வுகள், 3 பாண்டுகள், டோன் கண்ட்ரோல், பெரிய ட்யூனிங் ஸ்கேல் மற்றும் பெட்டி, பிக்-அப் மற்றும் லௌட்ஸ்பீக்கர் இணைக்க வசதி. மாடல் A-270/1 ஏஸி மின்சார சக்தி கொண்டும் மாடல் U-270/1 ஏஸி அல்லது டிஸி மின்சார சக்தி கொண்டும் இயங்குகிறது. ரூ. 300/-**



**ஜெனரல் ரேடியோ & அப்ளையென்ஸெஸ் பிரைவேட் லிமிடெட்**
பம்பாய் — கல்கத்தா — மதராஸ் — பங்களூர் — டில்லி

GRA 4987




**பா**லத்தின் கீழ் இருந்த அநேக மதகுக் கதவுகளில் ஒரு கதவு மட்டும் திறந்திருந்ததால் ஆற்று நீர் குபுகுபுவென்று அதன் வழியாகச் சுழியிட்டு நுரைத்துக் கொண்டு மறு பக்கத்தில் பாய்ந்தோடிக் கொண்டிருந்தது.

பாலத்தில் உட்கார்ந்திருந்தவள் மேற்கு வான விளிம்பில் செம்மை மாறிக் கருமை தட்ட ஆரம்பித்ததைக் கண்டதும்—ஒரு பெருமூச்செறிந்து கொண்டே எழுந்து வீட்டுக்கு நடக்க ஆரம்பித்தேன்.

அன்று காலையில் என் கணவர் என்னிடம், ''மிதிலா! உனது உதவிதான் இப்போது இவ் விஷயத்தில் மிகவும் தேவைப்படுகிறது. நீ புத்திசாலி. நான் உனக்கு வழி சொல்லித் தான் தெரியவேண்டு மென்பதில்லை. அந்த நாளிலிருந்தே ரவிக்கு உன்னிடம் அலாதியான பிரியமும் மதிப்பும் உண்டு. நீ போய்ப் புத்தி சொன்னால் நிச்சயமாகப் புத்தி மாறி, உன் சொல்லுக்குக் கட்டுப்பட்டு வந்து விடுவான்....நீ உடனே புறப்பட வேண்டும் என்று நான் சொல்லவில்லை, மிதிலா! இன்று முழுவதும் யோசிக்க அவகாசம் எடுத்துக்கொள். நன்றாக யோசித்து, 'போகலாம்' என்ற முடிவுக்கு வந்தாயானால், நாளைக் காலை வண்டிக்கே புறப்படு; நான் வேலைக்குப் போய் விட்டு இரவுதான் வருவேன்...'' என்று கூறி விட்டுப் போயிருந்தார் என் கணவர்.

கத்தியும் துப்பாக்கியுமாக ஒரு காட்டிலாகா அதிகாரியான என் கணவர் இப்படிச் சுலபமாகச் சொல்லிவிட்டுப் போய்விட்டார்தான்; ஆனால் இனம் புரியாத வேதனையை யல்லவா நான் நாள் முழுதும் அனுபவித்துக் கொண்டிருந்தேன்?

ரவியைப் பற்றி—என் கணவரின் இளைய சகோதரனும் எனது மைத்துனனுமான அந்த இளைஞனைப் பற்றி—நினைத்தபோது, எனக்கு என்னுடைய கடந்த கால வாழ்க்கையைப் பற்றியே நினைக்கத் தோன்றியது. ஏன் என் கணவரும் நினைக்காமல் இருக்க முடியாது. ஆனால் அவர் இப்போது அந்த நினைவையே நழுவவிடப் பார்க்கிறார்: காட்டிலாகா ஆராய்ச்சியில் ஈடுபடுகிறேன் என்று, தம்மை மறக்க அவர் தமது அலுவல்களில் எளிதாக ஈடுபட்டு விடுகிறார். ஆனால் நான்—?

நான் வீட்டை அடைந்தபோது என் கணவர் திரும்பி வந்துவிட்டிருந்தார். எனவே வாசல்முன் அறையிலேயே அவர் என்னைச் சந்தித்தார்.

''மிதிலா! நீ என்ன தீர்மானம் பண்ணினாய்? காலை வண்டிக்குப் புறப்படுகிறாயா?'' என்று கேட்டார்.

'' . . . . . . ''

''என்ன மிதிலா, மௌனம் சாதிக்கிறாய்?''

நான் புன்னகை செய்து கொண்டே, ''ரவியைப் பற்றிச் சொல்ல வருகிறீர்களே. நம் சரித்திரத்தைக் கொஞ்சம் நினைத்துப் பார்த்தீர்களா?'' என்றதும், என் கணவர் முகத்தில் சிறிது ஆச்சரியமும் கோபமும் உண்டானதை நன்றாகப் பார்த்தேன்.




"நமக்கும் இந்தப் பயலுடைய முட்டாள் தனத்துக்கும் ஒரு பொருத்தம் இருக்கிறதா, மிதிலா! பத்து வருஷங்களுக்கு முன் அண்ணன் ஒரு பெண்ணைக் காதலித்துக் கல்யாணம் செய்து கொண்டான் என்பதற்காக இந்தத் தம்பியும் தானும் ஒரு பெண்ணைக் காதலிக்கிறதாகவும் அந்தப் பெண்ணையே கல்யாணம் செய்து கொள்ளப் போவதாகவும் குதித்தால் அது எங்கேயாவது சரிப்பட்டு வருமா....?" என்று கூறிக்கொண்டேபோனார் என் கணவர்.

ஆனாலும் நான் என் சம்மதத்தைத் தெரிவித்து விட்டேன், மறுநாள் காலை வண்டியில் சென்னைப்பட்டணத்துக்குப் புறப்படுவதாக.

ரவியின் விஷயத்தைப் பற்றி நினைத்த போது எனக்குச் சற்றுப் பயமாகவே இருந்தது. ரவி இப்போது சின்னப் பிள்ளையில்லை; அதிலும் அவனுடைய அண்ணியாகிய என்னிடம் மிகுதியான அன்புமும் மதிப்பும் வைத்திருப்பவன்...பார்க்கப்போனால் அந்த ரவி இருந்திருக்காவிட்டால் என்னுடையதும் என் கணவருடையதுமான காதல்கூட ஈடேறியிருக்காதுதான்....!

அப்போது இருபது வயது இளங் கன்னியாக இருந்த என் அழகில் மயங்கி என் கணவர் என்னைக் காதலித்தார்; எங்களது தெய்விக அன்புக்கு அவருடைய தம்பி பத்து வயதுச் சிறுவன் ரவி எத்தனை ஒத்தாசைகள் செய்தான்! எங்களுடைய கடிதங்களைப் பரஸ்பரம் எத்தனை இரகசியமாகப் பரிமாறினான்! கடைசியில் தன் தந்தையிடம் அகப்பட்டுக் கொண்டு செம்மையாக உதை வாங்கிய போதுகூட அவன், நான் அவனுக்கு அண்ணியாக வரப் பரம பாக்கியம் செய்திருக்க வேண்டும் என்றல்லவா வாதாடினான்!

எனக்கு நன்றாக ஞாபகமிருக்கிறது.

அப்போது அடிபட்ட ரவிக்கு அன்றைய இரவே நல்ல ஜுரம் வந்து விட்டதாம்! என்ன ஆச்சரியம்! ஜுரத்தில் அந்தக் குழந்தை, "மிதிலா அண்ணி! மிதிலா அண்ணி!" என்றல்லவா பிதற்றினானாம்! மறுநாள் அதை இவர் என்னிடம் சொல்லிய போது, "மிதிலா! நீயும் என் தம்பியும் எனது இரு கண்கள்! பார்! அவனுக்கு ஜுரம் வந்த பிறகு தான் என் அப்பா உன் ஜாதகத்தை வாங்கிப் பார்க்கவே சம்மதித்தார்!" என்றார்.

நல்ல வேளை. ஜாதகங்கள் பொருந்தின. நான் ஏழைப் பெண்ணாக இருந்தாலும் ஒரு பணக்காரக் கணவரை - காதலரை-அடைந்தேன்! அப்படிப்பட்ட ரவிக்கு எப்படிப்பட்ட பிரதிபலனைச் செய்யப் போகிறேன் நான்!

"அண்ணி, காலையில்தான் வந்தீர்களா? எனக்கு யாரும் இங்கே தகவல் சொல்லவில்லை. சொல்லியிருந்தால் ஸ்டேஷனுக்கே வந்திருப்பேன்" — காதல் உலகின் கஷ்டங்களுக்கு இலக்கானவன் மாதிரியேதான் அவன் எனக்குத் தோன்றினான்.

''நீ என்ன, ரவி, இப்படி இளைத்து விட்டாய்?'' என்று பரிவோடு கேட்டேன்.

'' உங்களுக்கு நான் என்ன சொல்லட்டும், அண்ணி? பருப்பதும் இளைப்பதும் ஒரு மனிதனுக்கு, இரவு பகலைப் போல மாறி மாறி வருவதுதானே? அதிருக்கட்டும். இப்போது இத்தனை அவசரமாக அங்கே அண்ணாவைத் தனியாக விட்டு விட்டு வந்தது எதற்காக, அண்ணி? பாவம், அந்த மலைக்காட்டில் காப்பி கிளப் ஒன்றுகூடக் கிடையாதே!''

ஆனால் அவன் கேட்டதற்கு நான் ஏதாவது பதில் சொல்லியே ஆக வேண்டுமே? உண்மையைக் கூறி விடுவதே நல்லதென்று அவனுக்குப் பதில் சொன்னேன்.

'' உன்னிடம் சில முக்கியமானவற்றைச் சொல்லி விட்டுப் போகவே வந்தேன், ரவி! ஏன், உன் அண்ணாவே என்னை அனுப்பினார்.''

''அண்ணி! நீங்கள் என்னசொல்கிறீர்கள்?'' —ரவியின் குரலில் தடுமாற்றம் நிறைந்திருப்பதை நான் நன்றாகக் கவனித்தேன். ஆனால் வந்த காரியம் பெரியதென்று எனக்குத் தோன்றியது; உணர்ச்சிவசத்தில் என் உள்ளம் மாறிவிடுவதற்கு முன்னால், ரவியிடம் அதைப் பேசித் தீர்த்துவிடவே விரும்பினேன்.

''என்ன சொல்ல வருகிறேன் என்று உனக்குத் தெரியாதா, ரவி?''

'' ம்....''

''ரவி! உன் அண்ணாவின் பேச்சை நீ தட்ட மாட்டாயே?''

''அதில் உங்களுக்கு என்ன சந்தேகம் வந்து விட்டது, அண்ணி?''

'' அப்படியானால் நீ ஒன்றிரண்டு மாதம் லீவு போட்டுவிட்டு அங்கே வந்து என்னோடும் உன் அண்ணாவோடும் நிம்மதியாக இரேன்..''

'' அண்ணி! இப்போதைய என் மன நிலையில் நான் இவ்விடத்தை விட்டு வேறே எங்கே வந்தாலும் என் நிம்மதியைத்தான் இழந்து விடுவேன்; என்னோடு நீங்களெல்லாம் கூட மன நிம்மதியை இழந்து விடுவீர்கள்!''

'' ரவி! நீ இத்தனை அசடாகப் போய்விடுவாய் என்று நான் கனவில் கூட நினைக்கவில்லை '' என்றேன்.

'' அண்ணி! நீங்களா சொல்கிறீர்கள்?''

அவன் கேட்ட தொனியும் பார்த்த ஆச்சரியமும் வேதனை ததும்பிய பார்வையும், 'காதலுக்காகவே மணந்து கொண்ட நீங்களா இப்படிச் சொல்கிறீர்கள்?' என்று கேட்பது போலவே இருந்தன. அவனுக்குப் பதில் கூறாமல் பேச்சற்று இருந்தேன் நான்.

''சரி, அண்ணி! ரயிலில் வந்திருக்கிறீர்கள். மிகவும் களைப்பாக இருக்கும்......நான் போய் வரட்டுமா?''

என் மறு பேச்சுக்குக் காத்திராமல் ரவி அறையை விட்டுப் போய்விட்டான்.

அதற்குப் பிறகு நான் அங்கே யிருந்த இரண்டு, மூன்று நாட்களில் ஒரு நாள் கூட ரவியிடம் நிலைத்து நின்று பேசவே முடியவில்லை. வந்த அன்றே நான் வந்த காரணத்தை ஊகித்து விட்டான் ரவி. காதல் உலகத்தில் இருப்பவனுக்கு அப்போது கண் மண் தெரியாமல் இருப்பதில் அதிசயம் இல்லைதான். அதிலும் காதல் உலகில் இருந்து கல்யாணம் செய்து கொண்டு மகிழ்ச்சியாக இருப்பவர்கள்கூடத் தனக்குப் புத்தி கூற வருகிறார்களே என்ற வேதனையில் ரவி என்னை ஏறெடுத்துப் பார்க்கவும் அஞ்சியதில் சிறிதும் ஆச்சரியமில்லைதான்.

ஆனால் என் மாமனாரின் கோபத்தை என்னால் நன்றாக உணர்ந்துகொள்ள முடிந்தது. ரவி ஏதோ காரியாலய 'காம்ப்' விஷயமாக வெளியூர் போயிருந்த அந்த ஒரு நாளில் என்னை ரவியின் 'இதய ராணி'யின் வீட்டுக்கு அனுப்பி வைத்தார். அவருடைய எண்ணமெல்லாம் இதுதான்: '' மிதிலா! உனக்குத் தெரியாததல்ல. நீ நம் வீட்டுக்கு வந்த விதமே வேறு. நம் அந்தஸ்துக்குக் கொஞ்சம் கூடக் குறையாதது உங்கள் குடும்பம். ஏதோ உன் விஷயத்தில் எல்லாம் நல்லபடியாயிற்று ....ஆனால் இவன் சேதி இப்படியல்ல. அந்தப் பெண்ணின் தாயார் மூன்று மாதங்களுக்கு முன்புதான் கிணற்றில் விழுந்து இறந்து போனாளாம். காரணம் பலபேர் பலவிதமாகச் சொல்கிறார்கள். நாம் காணாதது எதையும் சொல்லக் கூடாதுதான்...நீ இந்த விஷயத்தில் செய்யக்கூடிய உபகார மெல்லாம் இதுதான், மிதிலா! இன்றைக்கு ரவியும் ஊரில் இல்லை. மெள்ள அந்தப் பெண்ணின் வீட்டுக்குப் போ. இந்தப் பயல் அவளுக்கு இரண்டு கடிதங்கள் எழுதி யிருக்கிறான் போலிருக்கிறது. அவற்றில் இவன் தத்துப் பித்தென்று கல்யாண விஷயத்தைப் பற்றிக்கூட எழுதியிருக்கலாம்...அந்த இரண்டு கடிதங்களையும் சாமர்த்தியமாக வாங்கிக் கொண்டு வந்து விட்டாயானால் என் கவலை தீரும்! நீயும் இன்றிரவே ஊருக்குப் புறப்பட்டுவிடு!''

இந்த மட்டோடு நம்மை விட்டால் போதும் என்றே தோன்றியது எனக்கு. அவர் கூறியதற்கு இணங்கினேன்.

அன்றிரவு ரயிலில் உட்கார்ந்து கொண்டிருந்த எனக்குத் தூக்கம் வரவேயில்லை.

நான் கைப் பெட்டியைத் திறந்து ரவி அந்தப் பெண்ணுக்கு - மோகனாவுக்கு-எழுதிய அவ்விரண்டு கடிதங்களையும் எடுத்தேன். ஆமாம், கடிதங்களை நான் மாமனாரிடம் கொடுத்துவிட வில்லை. அவற்றை என் வசமே வைத்துக் கொண்டு விட்டேன்!

அழகியும் குணவதியுமான மோகனா எங்கள் குடும்பத்தில் பிளவு ஏற்படத்தான் ஒருகாரணமாக இருக்கக் கூடாது என்பதை ஒப்புக் கொண்டாள். ரவி எழுதிய இரு கடிதங்களையும் கொடுத்து விட்டாள்.

அந்தக் கடிதங்களைப் பார்க்கவே கூடாது என்றுதான் அதுவரையும் என் கைப் பெட்டியில் வைத்துப் பூட்டி வைத்திருந்தேன் நான். ஆனால்...இப்போது ரயிலில் மன உணர்ச்சி உந்தவே, முதல் கடிதத்தைப் பிரித்துப் படிக்க ஆரம்பித்தேன்.

அன்புக்குரிய மோகனா!

**ஒருவருக்கொருவர் நாம் விழியாலும் மனத்தாலும் ஒற்றுமை கண்டு காதல் கொண்ட பிறகு நான் உனக்கெழுதும் முதல் கடிதம் இது.**

**என் அண்ணன்—அண்ணியின் காதல் மணத்தைப் பற்றி உனக்குச் சொல்லி யிருக்கிறேன். நான் அவர்களுக்கிடையில் அன்னப் பட்சியாக இருந்து உதவி னேனல்லவா? அப்பப்பா! அவர்களுக்கிடையில் எத்தனை கடிதங்கள்**

தான் மலை மலையாக எழுதிக் கொண்டார்கள்! எங்கள் குடும்பச் சரித்திரத்தில் அப்போது என் அண்ணன்; இப்போது நான்....அவன் அடைந்த அநுபவங்களை நானும் அடைந்தால், ஒருவேளை, நமது கல்யாணமும் ஒரு விதத் தடையுமின்றி விரைவிலேயே நடைபெறலாம். வரட்டுமா?

எப்போதும் உன் நினைவின் உருவமான
ரவி

என் கண்களில் கண்ணீர் பனித்திருப்பதை என்னால் எளிதாக உணர முடிந்தது; ஒரு நெடு மூச்சுடன் அடுத்த கடிதத்தைப் பிரித்தேன்.

என் அன்பே!

தகப்பனார், தாயார் உத்தரவைப் பெற்றே நமது கல்யாணம் நடைபெற வேண்டுமென்று நீ நேற்று சொன்னாய். அப்போது நான் எதிரே அலைகடலைக் காட்டி, "அது நடவாத காரியம்; அலை ஓய்ந்து ஸ்நானம் செய்யப் புகுந்த கதைதான்" என்றேன். இதோ பார்! நேற்று நீ என்னிடம் பேசிய விதத்திலிருந்து, 'பெற்றோர் சம்மதமின்றேல் நமது கல்யாணம் சாத்தியமில்லை' என்ற உன் மன எண்ணத்தை நான் நன்றாக உணர்ந்து கொண்டேன்.

கேவலம், கிணற்றுக் கரையில் வழுவழுப்பான ஒரு கூழாங்கல் வழுக்கி விட்டதனால் கிணற்றுக்குள் விழுந்து, அருகில் காப்பாற்றுபவர் எவருமில்லாததனால் இறந்து விட்டாள் உன் தாய்! நீ கூறும் இந்த விவரத்தை நான் ஒருவன் ஒப்புக் கொண்டால் போதாதா நமது கல்யாணத்துக்கு?

மோகனா! நான் எதற்கும் அஞ்சப் போவதில்லை. நீ அசட்டுத்தனமாகப் பேசுகிறாய். நிலைமை தெரியாமல் பேசுகிறாய். என் தகப்பனார் 'உத்தரவு' என்று ஒருபோதும் தமது வாயால் தமக்குத் தரவே மாட்டார். ஆனால் என் அண்ணாலே, அண்ணியோதான் இந்த நம்முடைய சங்கடத்தைத் தீர்த்து வைக்க முடியும். அவர்களுக்குத் தான் நம்முடைய உண்மையான அன்பு உள்ளம் தெரியமுடியும்.. அண்ணன் மறந்திருந்தாலும் அண்ணி நிச்சயம் மறந்திருக்க மாட்டாள். நான் அப்போது சிறுவன்; சட்டைப் பைக்குள் அவன் கொடுத்த கடிதத்தை மறைத்து வைத்துக் கொண்டே 'திருதிரு' வென்று வீட்டுக்குள் நுழைந்தேன், அண்ணனைத் தேடி. நேரே என் அப்பாவின் கைக்குள் அகப்பட்டுக் கொண்டேன். 'எத்தனை நாளாக உனக்கு இந்தப் பெரியதனமான வேலையடா?' என்று அப்பா என்னை அன்று அடி அடியென்று அடித்து விட்டார்!....எனக்கு ஜுரம் வந்தது; ஜுரம் வந்த கையோடேயே அண்ணியும் எங்கள் வீட்டுக்கு வந்தாள். எங்கள் வீட்டில் புது வெள்ளிக் குத்துவிளக்கை ஏற்ற!

என் அண்ணிக்கு இவ்விஷயத்தைத் தெரியப் படுத்தலாம் என்றிருக்கிறேன். இதனால் உனக்கு ஒரு கோபமும் வராதே, மோகனா?

உன் அன்புள்ள,
ரவி

என் கண்களிலிருந்து பெருக்கெடுத்த கண்ணீர், கன்னத்தில் வழிந்தோடிக் கையிலிருந்த அந்த இரண்டாவது கடிதத்தை நனைத்தது.

உதவியை என்னிடமிருந்து எதிர்பார்த்தவன், அவனுக்கு அபகாரத்தையே நான் செய்ய வந்திருக்கிறேன் என்று அறிந்ததும், பாவம், எத்தனை மன வேதனையில் உழன்திருப்பான்! என் மனம் குற்றம் செய்துவிட்ட பரதவிப்பில் உழலத் துவங்கி விட்டது.

ஊர் அடைந்ததும் என் கணவர் ஏதோ வேலையாகப் போயிருந்தவர் இன்னும் 'காம்பி'லிருந்து திரும்பி வந்திருக்கவில்லை என்று அறிந்து கொண்டேன்.

அன்றையத் தபாலிலேயே மோகனாவுக்கு அவ்விரு கடிதங்களையும், உடனே திருப்பி அனுப்பி ஒரு குறிப்பு மட்டும் எழுதினேன்: 'நீயும் ரவியும் என்னை மன்னித்து விடுங்கள். எது எப்படிப் போனாலும் இந்தக் கடிதங்கள் தாம் உனது சொத்துக்கள். நான் தவறு செய்து விட்டேன்.'

—மிதிலா

* * *

அன்று மாலை மதகுப் பாலத்தின் மேல் உட்கார்ந்து கொண்டு, தூரத்து மலைச் சிகரங்களையும், அவற்றைத் தொட்டு நின்றதாகப் பிரமிப்பு தந்து கொண்டிருந்த நீலவானத்தையும் பார்த்துக் கொண்டிருந்தேன். இளந்தென்றல் இன்பமாக வீசிக் கொண்டிருந்தது.

என் கண்களை யாரோ இறுகப் பொத்தினார்கள். கரங்களின் ஸ்பரிசம் எனக்குத் தெரியாததா என்ன?

"மிதிலா! ஊருக்குப் போனாயே, என்ன ஆயிற்று?"

"அந்தப் பெண் மோகனாவை நம் ரவிக்குக் கல்யாணம் செய்யும் காரியத்தை நாம்தான் முன்னின்று நடத்திவைக்க வேண்டும்! எல்லாம் நான் பிறகு சொல்கிறேன். முதலில் நாமிருவரும் சென்னைப் பட்டணத்துக்குப் புறப்படுவோம். உங்கள் அப்பாவை..."

"...சமாதானப்படுத்த வேண்டும்; அவ்வளவுதானே? மிதிலா! இன்று காலையிலேயே நானும் இந்தத் தீர்மானத்துக்கே வந்து விட்டேன். இன்றைக்கு நான் போயிருந்த ஊரில், ஊர் நாட்டாண்மையின் வீட்டுத் திண்ணையில் உயிர் இழந்து கிடந்த ஒரு பெண் புலியைப் பார்த்தேன். அது எப்படி இறந்ததாம் தெரியுமா? தன் காதலனை அன்போடு துரத்தி ஓடிக் கொண்டிருந்ததாம் அது. அப்போது நடுவில் புகுந்த நாட்டாண்மைக்காரர் அதைச் சுட்டு விட்டாராம்! ஊரில் இப்போது எல்லோரும் பயந்து செத்துக் கொண்டிருக்கிறார்கள்! அந்தப் புலியின் காதலன் மோப்பம் பிடித்து வெறிக் கோபத்தில் எந்தச் சமயமும் அந்த ஊருக்கு வந்து அட்டகாசம் செய்யலாமல்லவா?"

வீட்டுக்குள் சென்றவுடனேயே என் கணவர் மேஜையடியில் உட்கார்ந்து தமது தந்தைக்குக் கடிதம் எழுதலானார்.

"என்ன எழுதப் போகிறீர்கள்?" என்று கேட்டேன் நான்.

"என்ன எழுதலாம்?" என்றார் அவர்.

"வாழ்க்கை வழுக்கி விடுவதற்கு வெறும் கூழாங்கல் அல்ல; அன்பின் வலிமைகொண்டு மனிதர்கள் நன்கு ஊன்றிக் கொள்வதற்கான விளை நிலமே வாழ்க்கை என்று எழுதுங்கள்" என்று நான் கூறியபோது என் கணவர் என் கண்களை அன்புடன் உற்று நோக்கினார்.

என் மனம் புளகாங்கிதம் அடைந்தது. ரவிக்கும் மோகனாவுக்கும் எங்களுடைய இந்த அநுபவமே மீண்டும் மீண்டும் நிரந்தரமாக ஏற்பட வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொண்டேன்.

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10
for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam.

